பன்னிருதிருமுறைப் பதிப்புநிதி வெளியீடு: (5)

உ

திருச்சிற்றம்பலம்

## சுந்தர மூர்த்தி சுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரம்

## ஏழாம் திருமுறை : தலமுறை

*திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்*

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**
**8—4—1950ல் நிறுவிய ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள்**
**நினைவுப் பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியிலிருந்து**
*ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின்*
*திருவுளப்பாங்கின் வண்ணம் வெளியிடப்பெற்றது.*

*குறிப்புரை ஆசிரியர்*

**திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்**
**கலைமகள் ஆசிரியர், சென்னை.**

*பதிப்பாசிரியர்*

T. M. குமரகுருபரன் பிள்ளை
மானேஜிங் டிரஸ்டி, ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் மடம்

ஸ்ரீவைகுண்டம் 1958 விலை ரூ. 1-30

## பன்னிருதிருமுறைப் பதிப்புநிதி வெளியீடுகள்:

| | நூற் பெயர் | ஆண்டு | பிரதிகள் | விலை |
|---|---|---|---|---|
| 1. | திருமந்திரம் | 1956 | 1000 | 2–50 |
| 2. | அகத்தியர் தேவாரத்திரட்டு | 1956 | 2000 | 0–37 |
| 3. | திருநாவுக்கரசர் தேவாரம் தலமுறை | 1957 | 2000 | 2–25 |
| 4. | திருவாசகம் | 1957 | 2000 | 0–60 |
| 5. | சுந்தரர் தேவாரம் தலமுறை | 1958 | 3000 | 1–30 |




விலை ரூ. **1–30**

உ
சிவ சிவ

# முன்னுரை

வாழி திருநாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி!

சைவ சமய குரவர் நால்வருள் ஆளுடைய நம்பிகள் என்று போற்றப் பெறுபவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். அவர் அருளிய பதிகங்களுள் ஒன்று திருத்தொண்டத் தொகை. அது பெரியபுராணத்துக்குரிய அடிப்படை நூல்களுள் முதலிடம்பெறுவது; அதுவே பெரியபுராணத்துக்குப் பதிகமாய் அமைந்ததும்ஆம். நம்பியாண்டார் நம்பிகள் சுந்தரர் அருளிய தேவாரத்தை ஏழாம் திருமுறையாகத் தொகுத்தார். ஞானசம்பந்தர் அருளிய பதிகங்களைத் திருக் கடைக்காப்பு என்பது ஒரு மரபு; இம்முறையில் அப்பர் அருளியவை 'தேவாரம்' எனப்பெறும்; சுந்தரர் அருளியவை 'திருப்பாட்டு' எனப்பெறும். சத்புத்திர மார்க்கம் முதலாகிய நான்கு மார்க்கங்களுள் சுந்தருடையது சகமார்க்கம் ஆகும். தோழமை நெறி என்பதும் இதுவே. சுந்தரர் அருளியவையாகக் கிடைத்த திருப்பதிகங்கள் 100.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் திருவுள்ளப்படி கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜ. அவர்கள் எழுதிய குறிப்புரையுடன் 1949-ல் ஸ்ரீ காசி மடத்து வெளியீடாகச் 'சுந்தரர்' தேவாரம் அச்சிடப்பெற்றது. அப்பதிப்புச் செலவாகி விட்டமையால், ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் 8–4–1950-ம் தேதியில் நிறுவிய ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவுப் பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி வெளியீடாகத் தலமுறையில் விளம்பியாண்டு திருக்கார்த்திகை

நன்னாளில் இந்நூல் வெளியிடப் பெறுகின்றது.* பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி சாஸனம் இதன்பிற்சேர்க்கையாகத் தரப்பெற்றுள்ளது.

முற்பதிப்பில் கண்டதும் திரு. கி. வா. ஜகந்நாத ஐயர் அவர்களால் எழுதப்பெற்றதுமான குறிப்புரை அங்ஙனமே இப்பதிப்பில் சேர்க்கப்பெற்றுள்ளது. திரு. சுவாமிநாத பண்டிதர் பதிப்பில் காணப்பெற்றவாறு எல்லாவிடங்களிலும் செய்யுள் விகாரத்தான் அமைந்த சொற்றொடர்கள் பிரிக்கப் பெறாமே சந்தவின்பம் சிதையாதிருத்தற் பொருட்டு அங்ஙனமே அமைக்கப் பெற்றுள்ளன. உயிர்வரின் உக்குறள் மெய்விட்டு ஓடாமல் உடம்படு மெய்பெற்றுள்ள இடங்கள் பல [பக்கம் 23: செ. 3; 28:9; 31:7; 76:7; 70:10; 76:6; 104:9; 105:4; 118:3; 138:3; 139:7; 140:9; 172:8; 266:1; 267:4 287:3; 293:1; 293:6.] இப்பாடல்களில் எல்லாம் உடம்படு மெய் பொருத்தியே இப்பதிப்பில் அச்சிடப்பெற்றுள்ளது. பஞ்சமப் பண் பெரும்பாலும் கட்டளைக்கலித் துறையாக இருக்கிறது. பக்கம் 83-84 திருநாகேச்சரப் பதிகத்தில் 'திருநாகேச்சரத் தரனே' என்றே பாடங்கொண்டால் கட்டளைக் கலித்துறைக் கேற்ப எழுத்துக்களின் எண்ணிக்கையும் சரிவர அமையும்; பக்கம் 84-8வது பாட்டு முதல் வரியில் 'மாமேரு' என்ற சீர் "வடமாமேரு" என்றிருக்கலாம் என்று தோன்றுகிறது. சுவாமிநாத பண்டிதர் பதிப்பு, காஞ்சி நாகலிங்க முனிவர் பதிப்பு, சமாசப் பதிப்பு ஆகியவைகளை ஒப்புநோக்கிப் பாடல்களின் குறிப்புரையோடு இன்றியமையாத பாட பேதங்களும் இதில் தரப்பெற்றுள்ளன.

---

* தலமுறை ஸ்ரீ உபாபதி சிவாசாரியார் வகுத்தது என்றும், யாழ்ப்பாணத்து வண்ணைநகர்ச் சுவாமிநாத பண்டிதர் அவர்கள் வெளியிட்டதுபோல் 7 திருமுறைகளும் சேர்ந்து தலமுறையாக அமைப்பதே சிறப்பு என்றும் ஆன்றோர் கூறுகின்றனர்.

இப்பதிப்புச் சிறப்பாக அமையுமாறு கட்டளையிட்ட ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களுக்குச் சைவ உலகம் கடப்பாடுடையது. இப்பதிப்பு அழகுற அமைவதற்கும், விரைவில் அச்சாவதற்கும் பல்வேறு முறைகளை அறிவுறுத்தியும், ஆக்கமும் ஊக்கமும் தந்து தோன்றாத் துணையாய் இருந்து ஆசீர்வதித்தும், அடியேனுக்கு இம்மை மறுமைப் பயனளிக்கவல்ல இப்பணியில் அடியேனையும் ஈடுபடுத்திய திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு மனமொழி மெய்களால் கூடிய வணக்கங்களை நன்றியறிதலோடு சமர்ப்பித்துக்கொள்கிறேன்.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் அருள்வழி நின்றொழுகும் ஸ்ரீ காசிமடம் இளவரசு வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கும் என் வணக்கங்கள் உரியனவாகுக.

தனக்குள்ள செந்தமிழ்க் கல்லூரியின் பொறுப்பையும் சற்றும் புறக்கணிக்காது ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம், என் வேண்டுகோட்கிணங்கித் தன் அயராஉழைப்பாலும், திருமுறைப் பதிப்புச் சீரிய முறையில் வெளியாகுவதே நற்பணி என்பதில் உள்ள பேரார்வத்தாலும், குறிப்பிட்ட காலத்திற்குள் இப் பதிப்பு வெளிவர, அச்சுப் பிரதிகளைத் திருத்தியும், பாட பேதங்கள் முதலியன குறித்தும் செம்மையாக அமைத்த திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி பிரின்ஸிபால் சிவநெறிச் செல்வர், திரு. கே. எம். வேங்கடராமையா M. A., B. O. L., அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகுக.

ஸ்ரீவைகுண்டம்,<br>25—11—1958.

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,<br>நிரந்தரத் தலைவர், குமரகுருபரன் சங்கம்,

உ

சிவ சிவ

# தல அகரவரிசை

(ஒவ்வொரு தலத்தின் முதலிலும் 'திரு' என்பதைக் கூட்டிக் கொள்க)

உ

திருச்சிற்றம்பலம்

## பண்கள் அட்டவணை

| பண் | பக்க எண் |
|---|---|
| 1. இந்தளம்: | 7, 40, 113, 138, 184, 195, 199, 215, 241, 254, 258, 294. |
| 2. தக்கராகம்: | 73, 117, 165, 243. |
| 3. நட்டராகம்: | 5, 9, 20, 38, 42, 51, 65, 78, 100, 173, 229, 231, 252, 268. |
| 4. கொல்லி: | 57, 70, 129, 140, 178, 239, 296. |
| 5. கொல்லிக் கௌவாணம்: | 53, 133, 143, 208, 224, 233, 246, 280, 298. |
| 6. பழம் பஞ்சுரம்: | 102, 147, 188, 205, 211, 264, 300. |
| 7. தக்கேசி: | 12, 16, 22, 25, 29, 46, 85, 89, 91, 104, 149, 169, 221, 236, 248, 270, 276. |
| 8. காந்தாரம்: | 33, 67, 97, 154, 176. |
| 9. பியந்தைக் காந்தாரம்: | 121. |
| 10. காந்தாரபஞ்சமம்: | 61. |
| 11. நட்ட பாடை: | 181, 196, 284, 287, 289. |
| 12. புறநீர்மை: | 157, 190, 218. |
| 13. சீகாமரம்: | 108, 127, 262, 266. |
| 14. குறிஞ்சி: | 1, 110, 203, 270. |
| 15. கவுசிகம்: | 80. |
| 16. செந்துருத்தி: | 159. |
| 17. பஞ்சமம்: | 83, 95, 124, 162, 291, |

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு



ஸ்ரீ கைலாசத்தில் சிவபிரானுடைய பிரதி பிம்பத்தினின்று தோன்றி அப்பெருமானுடைய திருத்தொண்டு புரிந்துவரும் ஆலாலசுந்தரர் என்பவர் ஒரு நாள் அருச்சனைக்காக மலர்கொய்யும் பொருட்டு நந்தவனத்துக்குச் சென்றார். அங்கே உமாதேவியாருடைய திருத்தொண்டில் ஈடுபட்ட அனிந்திதை, கமலினி என்னும் இரண்டு மகளிர் முன்பே மலர் கொய்திருந்தனர். அவர்களைக் கண்ட போது ஆலால சுந்தரர் உள்ளத்தில் காதல் அரும்பியது. அம்மகளிருக்கும் அவர்பால் அன்பு பூத்தது. இதனை உணர்ந்த எம்பெருமான், "உங்கள் அன்பு கனிவதற்குப் பூவுலகில் மக்களாகப் பிறத்தலே தகுதி; ஆதலின் நீங்கள் மூவரும் தமிழ்நாட்டில் தோன்றி ஒன்றுபட்டுக் காதல் புரிந்து நம் தொண்டும் செய்து விட்டு வாருங்கள்" என்றருளி அனுப்பினர்.

இறைவன் திருவுள்ளப்படியே ஆலால சுந்தரர் தமிழ் நாட்டில் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூர் என்னும் தலத்தில் ஆதி சைவ அந்தணராக அவதரித்தார். அவர் தந்தையார் சடையனார், தாயார் இசை ஞானியார். நம்பி ஆரூரர் என்ற திருநாமத்தோடு அவர் வளர்ந்து வருகையில், திருமுனைப்பாடி நாட்டை ஆண்ட சிற்றரசராகிய நரசிங்க முனையரையர் என்பவர் அவர்பால் அன்புமிக்கவராகித் தம் வளர்ப்புப் பிள்ளையாக ஏற்றுப் போற்றி வளர்த்து வந்தார்.

உபநயனம் முதலியன முறையே நிறைவேறிய பின் மணப்பருவமடைந்த நம்பியாரூரருக்குப் புத்தூர் என்னும்

ஊரிலுள்ள சடங்கவி சிவாசாரியாருடைய திருமகளாரை மணம செய்விப்பதாக நிச்சயம் செய்தனர். உரிய நன்னாளில் புத்தூரில் நம்பியாரூரர் திருமணக்கோலத்தோடு சென்று இருந்தபோது, அவரைத் தடுத்தாட் கொள்ளத் திருவுள்ளம்பூண்ட சிவபெருமான் ஒரு கிழ வேதியராகக் கோலங்கொண்டு எழுந்தருளினர். பெருமான் மணப் பந்தலின் முன்நின்று, "இந்த நம்பியாரூரன் என் அடிமை" என்றார். அது கேட்ட யாவரும் திகைத்து நிற்க, "அந்தணர் அந்தணருக்கு அடிமையாவது எங்கும் இல்லையே! நீர் பித்தரோ!" என்று நம்பியாரூரர் எள்ளி நகையாடினர். "நான் பித்தனுனாலும் பேயனுனாலும் உன்னை விட்டொழியேன்; எனக்கு ஏவல் புரியும் கடப்பாடு டையை நீ" என அவர் வற்புறுத்தினர். ஆரூரர், "நான் அடிமை என்பதைக் காட்ட என் முன்னோர் எழுதித் தந்த ஓலை உண்டா?" என்று வினவ, "அடிமைத் தொழில் செய் வதற்குரிய நீ ஓலையைப் பார்க்க உரியவன் அல்லன்" என்று கிழ வேதியர் கூற, ஆரூரர் அவர் கையிலிருந்த ஓலையைப் பிடுங்கிக் கிழித்தெறிந்தார். திருவெண்ணெய் நல்லூரில் வாழ்பவர் அவ்வேதியர் என்பதை உணர்ந்து அவ்வூர்ச் சபையினரிடம் வழக்குப் பேசலாமென யாவரும் சென் றனர். சபையினர்முன் சென்று முதியவர் தம் வழக்கைச் சொல்லவும் அவர்கள் நம்பவில்லை. அப்பால், "இவன் கிழித்தது படி ஓலை; மூல ஓலை இதோ இருக்கிறது" என்று அவர் காட்டக் கண்ட சபையினர், 'நம்பியாரூரர் அம்முதிய வருக்கு அடிமையாக ஏவல் செய்யவேண்டும்' என்று முடிவு செய்தனர். பிறகு முதியவரை நோக்கி, "ஓலையில் நீர் இந்த ஊரினர் என்று குறித்திருக்கிறது; உம்முடைய இருப்பிடம் எது?" என்று கேட்க, "ஒருவரும் அறியீரோ?" என்று சொல்லி வேதியர் நம்பிஆரூரரையும் பிறரையும்

அழைத்துச் சென்று கோயிலுக்குள்ளே புகுந்து மறைந்தார். தொடர்ந்து வந்தவர்கள் கோயிலுள் சென்றவரைக் காணுமல் வியந்து நிற்கச் சிவபெருமான் இடபவாகனத்தின் மேல் எழுந்தருளி ஆரூராருக்குக் காட்சி தந்து, "நாமே உம்மைத் தடுத்தாட் கொண்டோம்; நம்மை வன்மை பேசியமையால் நீ வன்தொண்டன் என்ற பெயருக்கு உரியாய்; நமக்கு அருச்சனை பாட்டேயாதலால் தமிழ்ப் பதிகங்கள் பாடுவாயாக" என்று அருளினர். நம்பியாரூரர், "நான் எம்பெருமானைப் பாடுமாறு அறியேனே!" என நைந்து கூற, "நம்மைப் பித்தன் என்ருய்; அதையே வைத்துப் பாடுக" என்று பெருமான் அருள, அவ்வாறே, "பித்தா பிறைசூடீ" என்று திருப்பதிகத்தைத் தொடங்கி நிறைவேற்றினர்.

புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியார் திருமகளார் மணம் பெருவிடினும் நம்பியாரூரரையே தலைவராக எண்ணி வாழ்ந்து பின் சிவபிரான் திருவடிநிழலை அடைந்தார்.

சிவபிரான் திருவருளாணையின்படியே நம்பியாரூரர் 'சொற்றமிழ் பாடும்' திருத்தொண்டை மேற்கொண்டு, பல தலங்களுக்குச் சென்று வழிபட்டுத் திருப்பதிகம் பாடினர். திருவதிகை என்னும் தலத்துக்கருகே வந்து, அத்தலம் அப்பர் சுவாமிகள் உழவாரத்தொண்டு செய்த புண்ணிய பூமியாதலின் காலால் மிதித்தல் அடாதென்று, புறம்பே உள்ள சித்தவடமடத்தில் தங்கித் துயின்ருர். சிவபிரான் முதுவேதியராய் அங்கே சென்று துயில்வார்போலக் கிடந்து நம்பியாரூரர் தலைமேல் கால் நீட்டினர். பன்முறை கூறியும் மீட்டும் மீட்டும் தலையிற் கால்வைத்த அவர் சிவபெருமானே என்பதை உணர்ந்த ஆரூரர், "தம்மானை

அறியாத சாதியார் உளரே" என்ற திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

அப்பால் பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு சொற்றமிழ் பாடிச் சிதம்பரம் சென்று பணிந்தார்; அங்கே இறைவர், "திருவாரூருக்கு வா" என்று அசரீரியாகப் பணித்தமையால் அத்தலத்தை நோக்கிப் புறப்பட்டார்; சீகாழிக்குப் பக்கத்தில் வந்ததும் ஞானசம்பந்த சுவாமிகள் அவதரித்த தலமாதலின் மிதிக்க வொண்ணாதென்று புறம்பே நிற்கச் சிவபெருமான் காட்சி கொடுத்தருளினார்; "சாதலும் பிறத்தலும் தவிர்த்து" என்னும் பதிகம் பாடிப் பணிந்து மேற்சென்றார் ஆரூரர்.

திருக்கோலக்கா முதலிய தலங்களுக்கு எழுந்தருளி இறைவரைப் பணிந்து பதிகம் பாடித் திருவாரூரை அணுகுகையில் சிவபெருமான் ஏவலால் அத்தலத்திலுள்ளார் நம்பியாரூரரை எதிர்கொண்டு திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றனர். திருக்கோயில் சென்று வன்மீகநாதரை வழிபட்டார் சுந்தரர். அப்பெருமான், "நீ எனக்குத் தோழன்; என்றும் நீ மணக்கோலத்தோடு இருப்பாயாக" என்று கட்டளையிட்டருளினார். அது முதல் தம்பிரான் தோழர் என்ற திருநாமம் நம்பியாரூரருக்கு அமைந்தது.

தம்பிரான் தோழர் திருவாரூரிலே தங்கி நாள்தோறும் திருக்கோயிலில் சென்று வழிபட்டு வந்தார். திருக்கைலையில் கமலினியாக இருந்தவர் அத்தலத்தில் உருத்திர கணிகையார் குலத்தில் தோன்றிப் பரவையார் என்ற திருநாமத்தோடு வளர்ந்து, திருக்கோயிற் பணிபூண்டு ஒழுகி வந்தார். தம்பிரான் தோழரும் பரவையாரும் இறைவர் சந்நிதானத்தில் ஒருவரை ஒருவர் கண்டு காதலுற்றுச் சிவ

பெருமான் ஆணைவழியே திருமணம் செய்துகொண்டு ஒருங்கு வாழலாயினர்.

ஒருநாள் தம்பிரான் தோழர் திருக்கோயிலுக்குச் செல்கையில் அங்கே முன்னிருக்கும் தேவாசிரியன் என்னும் மண்டபத்தில் சிவனடியார்கள் இருந்ததைக்கண்டு, அவர்களைப் பாட எண்ணியபோது இறைவரே, "தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று அடியெடுத்துக் கொடுக்க, அதனையே முதலாகக்கொண்டு திருத்தொண்டத் தொகை பாடியருளினர். குண்டையூர் கிழார் என்பவர் சிவபிரான் அருளால் வன்றொண்டருக்கு வழங்கும் பொருட்டு மிகுதியான நெல்லைப் பெற்று வைத்திருக்க, அதனைத் திருவாரூருக்கு எடுத்துச்செல்ல ஆட்கள் வேண்டுமே என்று நம்பியாரூரர் எண்ணினர். "நீள நினைந் தடியேன்" என்ற பதிகம் பாடவே சிவபெருமான் ஏவலால் பூதங்கள் நெல் முழுவதையும் திருவாரூருக்குக் கொண்டு சேர்த்தன.

திருநாட்டியத்தான்குடியில் வாழ்ந்த கோட்புலி நாயனர் ஒருமுறை தம்பிரான்தோழரை அழைத்துச்சென்று உபசரித்துத் தம் பெண்களாகிய சிங்கடியார், வனப்பகையார் என்னும் இருவரையும் ஆட்கொள்ள வேண்டுமென்று விண்ணப்பம் செய்ய, அவர்களைத் தம் மக்களாக ஆரூரர் ஏற்றுக்கொண்டார். பங்குனி உத்தரத்திருநாளுக்குப் பொன் வேண்டுமென்று பரவையார் கூற, வன்றொண்டர் திருப்புகலூருக்குச் சென்று திருக்கோயிலுக்குள் இருந்த செங்கற்களைத் தலையணையாக வைத்துச் சிறிது துயின்று எழுந்து பார்க்க அச்செங்கற்களெல்லாம் பொன்னுக இருத்தலைக் கண்டார். இது சிவபெருமான் அருளென்று வியந்து, "தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்" என்ற பதிகத்தைப்

பாடிப் பொன்னைப் பரவையாரிடம் கொணர்ந்து கொடுத்தார்.

திருமுதுகுன்றத்துக்குச் சென்று முதுகுன்றர் அருளால் பன்னீராயிரம் பொன் கிடைக்க, அதனைத் திருமணிமுத்தா நதியிலிட்டு அப்பால் திருவாரூர் சென்று அங்குள்ள கமலாலயத்திலிருந்து அப்பொன்னை எடுத்துப் பரவையாருக்கு வழங்கினார். திருக்குருகாவூரில் சிவபெருமான் அளித்த பொதிசோற்றை உண்டு, "**இத்தனையா மாற்றை அறிந்திலேன்**" என்ற பதிகம் பாடினார். தொண்டை நாட்டுத் தலங்களைத் தரிசிக்கையில் திருக்கச்சூரில் சிவபெருமான் பிச்சையெடுத்து வந்து தந்த உணவை உண்டு, "**முதுவாய் ஓரி கதற**" என்ற பதிகம் பாடினார்.

பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு வந்த நம்பியாரூரர் திருவொற்றியூர் வந்தடைந்தார். திருக்கைலையில் இருந்த **அநிந்திதையார்** ஞாயிறு என்ற ஊரில் இருந்த வேளாளச் செல்வர் ஒருவருக்குத் திருப்புதல்வியாராகத் தோன்றிச் **சங்கிலியார்** என்ற திருப்பெயரோடு வாழ்ந்து வந்தார். மணப் பருவம் எய்தியும் யாரையும் மணக்க விரும்பாமல் அவர் திருவொற்றியூரில் கன்னிகா மாடம் அமைக்கச் செய்து அங்கே தங்கித் திருவொற்றியூர்ப் பெருமானுடைய திருத்தொண்டில் ஈடுபட்டிருந்தார். சங்கிலியாரைக் கண்டு உள்ளம் பிணிப்புண்ட நம்பியாரூரர் இறைவர்பால் விண்ணப்பித்து அவரைத் தமக்கு மணம் செய்விக்கும்படி வேண்டினார். "உன்னைப் பிரியேன்" என்ற உறுதிமொழியை மகிழடிக்கீழ்ப் பெற்றுக் கொள்ளும்படி சங்கிலியாருக்குச் சிவபிரான் உணர்த்தி, அவ்வாறே அவர்பெற, அடியவர்களைக் கொண்டு திருமணம் நிறைவேறச் செய்தருளினார். சங்கிலியாரோடு வாழ்ந்து வந்த வன்றொண்டர் ஆரூர்ப்

பெருமானைப் பிரிந்திருத்தலை ஆற்றாதவராகித் திருவொற்றி யூரை விட்டுப் புறப்பட்டார்.

சங்கிலியாருக்கு அளித்த உறுதி மொழியினின்றும் தவறியமையால் நம்பியாரூரர் தம் கண்ணை இழந்துவருந்தி மேற்செல்வாராய்த் திருமுல்லை வாயில் சென்று வணங்கி, அப்பால் திருவெண்பாக்கம் சென்று, "பெருமானே, திருக் கோயிலில் உள்ளீரா?" என்று கேட்கவே, "உளோம் போகீர்" என்று பெருமான் அருளி ஓர் ஊன்றுகோல் உதவினர். அங்கிருந்து பல தலங்களுக்குச் சென்று காஞ்சீபுரம் நண்ணி இறைவர் அருளால் ஆரூரர் இடக்கண் பெற்றார். அப்பால் இடையிலுள்ள தலங்களை வழிபட்டுப் பாடித் திருவாரூரை அடைந்தார். அங்கே இறைவரைப் பாடி வலக்கண்ணையும் பெற்றார்.

நம்பியாரூரர் சங்கிலியாரை மணந்த செய்தியை அறிந்த பரவையார் அவரை ஏற்றுக்கொள்ளாமல் ஊடியி ருந்தார். வன்றொண்டர் வேண்ட, ஆரூர் இறைவர் இரு கால் பரவையாரிடம தூது சென்று ஊடலை நீக்கி மீட்டும் இருவரும் இணைந்து வாழ அருள் புரிந்தார். இறைவரை ஏவல் கொண்டமைக்கு ஆற்றாத **ஏயர்கோன்கலிக்காம நாயனார்** நம்பியாரூரர்மேல் சினங்கொண்டிருக்க, அவ்விரு வரையும் நட்புக்கொள்ளச் செய்ய எண்ணிய இறைவர் கலிக்காமருக்குச் சூலைநோய் வரச்செய்து, அதனைத் தீர்க்கும் படி நம்பியாரூரரை அனுப்பினர். இவரால் நோய் தீர்வ தினும் இறப்பதே மேலென்று கருதிய ஏயர்கோன் உடை வாளால் தம்வயிற்றைக் கிழித்துக்கொண்டு இறந்தார். அதுகண்டு நம்பியாரூரர் வருந்தித் தாமும் உயிர்நீக்கத் துணிகையில் இறைவர் கலிக்காமரை உயிர்பெய்து எழுப்பி அவ்விரண்டு பெரியார்களையும் நண்பராக்கியருளினர்.

சேர அரசராகிய சேரமான் பெருமாள் நாயனார் நம்பியாரூரரை வந்து கண்டு நட்புப் பூண்டார். அவ்விருவரும் பல தலங்களைத் தரிசித்து வணங்கினர். ஆரூரர் சேர நாட்டுக்குச் சென்று சிலகாலம் தங்கி, அப்பால் திருவாரூர் வந்தார். பிறகு கொங்குநாட்டில் உள்ள திருப்புக் கொளியூர் அவிநாசியில் முதலைவிழுங்கிய 'பிள்ளையைப்பதிகம் பாடி வருவித்தார். மீட்டும் திருவஞ்சைக்களத்திலிருந்த சேரமான் பெருமாள் நாயனார்பால் சென்று தங்கியிருந்தார்.

ஒருநாள் திருவஞ்சைக்களத்துத் திருக்கோயிலுள் சென்று உலக வாழ்க்கையில் தமக்கு இருந்த வெறுப்பைப் பதிகம் பாடித் தெரிவித்தார். சிவபெருமான் தேவர்களோடு வெள்ளையானையை அனுப்பி நம்பியாரூரரைக் கைலாயத்திற்கு அழைத்துவரச் செய்தார். இதனை உணர்ந்த சேர வேந்தர் தாமும் குதிரையில் ஏறித் திருக்கைலாயம் சென்றார். பரவையாரும் சங்கிலியாரும் கைலை சென்று பண்டைநிலையில் தொண்டு பூண்டொழுகினர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் கைலாயம் அடைந்த நாள் ஆடி மாதம் சுவாதித்திருநாள் என்பர். பதினெட்டு ஆண்டுக் காலம் சுவாமிகள் பூவுலகில் வாழ்ந்தனர் என்று ஒரு பழம்பாடல் தெரிவிக்கிறது. ஆராய்ச்சியாளர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் 9-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவர் என்று கூறுவர்.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்

# தலமுறை

## (1) சோழநாட்டில் காவேரிக்கு வடகரையிலுள்ள தலங்கள்

### 1. கோயில் — பண்: குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

*மடித்தாடு மடிமைக்கண் அன்றியே*
*மனனேநீ வாழும் நாளும்*
*தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கில்*
*இடும்போது தடுத்தாட் கொள்வான்*
*கடுத்தாடு கரதலத்தில் தமருகமும்*
*எரிஅகலுங் கரிய பாம்பும்*
*பிடித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம்*
*பெருமானைப் பெற்றா மன்றே.* 1

பேராது காமத்திற் சென்றாற்போல்
அன்றியே பிரியா துள்கிச்
சீரார்ந்த அன்பராய்ச் சென்றுமுன்
அடிவீழுந் திருவினாரை

---

*1. அடிமைக்கண் மடித்து ஆடும்–தனக்கு அடிமையாக இருக்கும் தன்மையில் நம்மைத் திருப்பி ஆட்கொள்வான். அன்றியே–அஃது அல்லாமலும். வாழும் நாளைத்தடுத்து அலைத்து யமனுடைய ஏவலர் செக்கில் இடும்போதும் ஆட்கொள்வான், ஆட்டி–அலைத்து.*

ஓராது தருமனூர் தமர்செக்கில்
 இடும்போது தடுத்தாட் கொள்வான்
பேராளர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
 பெருமானைப் பெற்றா மன்றே. 2

நரியார்தங் கள்ளத்தாற் பக்கான
 பரிசொழிந்து நாளும் உள்கிப்*
பிரியாத அன்பராய்ச் சென்றுமுன்
 அடிவீழும் சிந்தை யாரைத்
தரியாது தருமனூர் தமர்செக்கில்
 இடும்போது தடுத்தாட் கொள்வான்
பெரியோர்கள் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
 பெருமானைப் பெற்றா மன்றே. 3

கருமையார் தருமனூர் தமர்நம்மைக்
 கட்டியகட் டறுப்பிப் பானை
அருமையாந் தன்னுலகந் தருவானை
 மண்ணுலகங் காவல் பூண்ட
உரிமையாற் பல்லவர்க்குத் திறைகொடா
 மன்னவரை மறுக்கஞ் செய்யும்
பெருமையார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
 பெருமானைப் பெற்றா மன்றே. 4

கருமானின் உரியாடைச் செஞ்சடைமேல்
 வெண்மதியக் கண்ணி யானை
உருமன்ன கூற்றத்தை உருண்டோட
 உதைத்துகந் துலவா இன்பம்

---

2. பேராது–தவிராமல். பேராளர்–புகழுடையார் வாழ்கின்ற.
3. பக்கு–பை. * 'மூழ்கிப்' என்றும் பாடம்.
4. மறுக்கம்–வருத்தம்.

தருவானைத் தரும்ஞர் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
பெருமாஞர் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்ரு மன்றே. 5

உய்த்தாடித் திரியாதே உள்ளமே
ஒழிகண்டாய் ஊன்கண் ஓட்டம்
எத்தாலுங் குறைவில்லை என்பர்காண்
நெஞ்சமே நம்மை நாளும்
பைத்தாடும் அரவினன் படர்சடையன்
பரஞ்சோதி பாவந் தீர்க்கும்
பித்தாடி புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்ரு மன்றே. 6

முட்டாத முச்சந்தி மூவா
யிரவர்க்கு மூர்த்தி என்னப்
பட்டானைப் பத்தராய்ப் பாவிப்பார்
பாவமும் வினையும் போக
விட்டானை மலையெடுத்த இராவணனைத்
தலைபத்தும் நெரியக் காலால்
தொட்டானைப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்ரு மன்றே. 7

கற்ருனுங் குழையுமா றன்றியே
கருதுமா கருதகிற்ருர்க்
கெற்ருலுங் குறைவில்லை என்பர்காண்
உள்ளமே நம்மை நாளுஞ்

---

5. உரும் அன்ன—இடியேற்றை ஒத்த.

6. ஊன்கண் ஓட்டம் ஒழி கண்டாய் – உடம்பினிடத்தே விருப்புக்கொண்டு ஓடுதலை விடுவாயாக. பித்தாடி, பெயர்.

7. முட்டாத – இடையீடுபடாத. காலால் மலையைத் தொட்ட அளவிலே இராவணன் தலைகள் நெரிந்தன என்றபடி.

செற்றாட்டித் தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
பெற்றேறிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 8

நாடுடைய நாதன்பால் நன்றென்றுஞ்
செய்மனமே நம்மை நாளும்
தாடுடைய தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
மோடுடைய சமணர்க்கும் முடையுடைய
சாக்கியர்க்கும் மூடம் வைத்த
பீடுடைய புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றா மன்றே. 9

பாரூரும் அரவல்குல் உமைநங்கை
யவள்பங்கன் பைங்கண் ஏற்றன்
ஊரூரன் தருமனார் தமர்செக்கில்
இடும்போது தடுத்தாட் கொள்வான்
ஆரூரன் தம்பிரான் ஆரூரன்
மீகொங்கில் அணிகாஞ் சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற்
றம்பலத்தே பெற்றா மன்றே. 10

திருச்சிற்றம்பலம்

---

8. கல்தானும். கருத கிற்றார்க்கு – கருதும் வன்மையை யுடையாருக்கு. செற்று–வருத்தி. பெற்று – பெற்றம்; இடபம்.

9. தாடு–தடுத்தல். மோடு–பெருவயிறு. முடை–நாற்றம். மூடம் – அறியாமை.

10. மீகொங்கு–மேல் கொங்குநாடு. காஞ்சிவாய்ப் பேரூர்–திருப்பேரூர் என்னும் தலம்; காஞ்சி–நொய்யில் என்னும் ஆறு.

## 2. திருக்கழிப்பாலை — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

செடியேன் தீவினையில் தடுமாறக் கண்டாலும்
அடியான் ஆவஎனு தொழிதல் தகவாமே
முடிமேல் மாமதியும் மரவும் உடன்துயிலும்
வடிவே தாம்உடையார் மகிழுங்கழிப் பாலையதே. 1

எங்கே னும்மிருந்துன் அடியேன் உனைநினைந்தால்
அங்கே வந்தென்னொடும் உடனாகி நின்றருளி
இங்கே என்வினையை அறுத்திட் டெனையாளும்
கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே. 2

ஒறுத்தாய் நின்னருளில் லடியேன் பிழைத்தனகள்
பொறுத்தாய் எத்தனையும் நாயேனைப் பொருட்படுத்துச்
செறுத்தாய் வேலைவிடம் அறியாமல் உண்டுகண்டம்
கறுத்தாய் தண்கழனிக் கழிப்பாலை மேயானே. 3

சுரும்பார் விண்டமலர் அவைதூவித் தூங்குகண்ணீர்
அரும்பா நிற்குமனத் தடியாரொடும் அன்புசெய்வன்
விரும்பேன் உன்னையல்லால் ஒருதெய்வம் என்மனத்தால்
கரும்பா ருங்கழனிக் கழிப்பாலை மேயானே. 4

ஒழிப்பாய் என்வினையை உகப்பாய் முனிந்தருளித்
தெழிப்பாய் மோதுவிப்பாய் விலைஆ வணம்உடையாய்
கழிப்பால் கண்டடங்கச் சுழியேந்து மாமறுகிற்
கழிப்பா லைமருவுங் கனல்ஏந்து கையானே. 5

---

3. பிழைத்தனகள் – செய்த குற்றங்களை. மறியாமல் மாட்டேன் என்று மறுக்காமல்.

4. விண்ட–மலரச் செய்த.

ஆர்த்தாய் ஆடரவை அரையார் புலிஅதள்மேற்
போர்த்தாய் ஆனையின்தோல் உரிவை புலால்நாறக்
காத்தாய் தொண்டுசெய்வார் வினைகள் அவைபோகப்
பார்த்தா னுக்கிடமாம் பழியில்கழிப் பாலையதே. 6

பருத்தாள் வன்பகட்டைப் படமாகமுன் பற்றிஅதள்
உரித்தாய் ஆனையின்தோல் உலகந்தொழும் உத்தமனே
எரித்தாய் முப்புரமும் இமையோர்கள் இடர்கடியும்
கருத்தா தண்கழனிக் கழிப்பாலை மேயானே. 7

படைத்தாய் ஞாலமெலாம் படர்புன்சடை எம்பரமா
உடைத்தாய் வேள்விதனை உமையாளையோர் கூறுடையாய்
அடர்த்தாய் வல்லரக்கன் தலைபத்தொடு தோள்நெரியக்
கடற்சா ருங்கழனிக் கழிப்பாலை மேயானே. 8

பொய்யா நாவதனால் புகழ்வார்கள் மனத்தினுள்ளே
மெய்யே நின்றெரியும் விளக்கேஒத்த தேவர்பிரான்
செய்யா னுங்கரிய நிறத்தா னும் தெரிவரியான்
மையார் கண்ணியொடு மகிழ்வான்கழிப் பாலையதே. 9

பழிசே ரில்புகழான் பரமன் பரமேட்டி
கழியார் செல்வமல்குங் கழிப்பாலை மேயானைத்
தொழுவான் நாவலர்கோன் ஆரூரன் உரைத்ததமிழ்
வழுவா மாலைவல்லார் வானோர்உல காள்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி : பால்வண்ணநாதர்; அம்பிகை : வேதநாயகி.

---

6. புலி அதள்–புலித்தோல்.

7. பருத்தாள் – பருமையான தாளை உடைய, பகட்டை – யானையை, படம் ஆக – ஆடை ஆகும்படி; படம் – துணி.

8. உடைத்தாய் – அழித்தாய்.

10. சேரில் – சேர்தல் இல்லாத.

## 3. திருவெண்காடு — பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

படங்கொள்நாகஞ் சென்னிசேர்த்திப் பாய்புலித்தோல் அரையில்வீக்கி, அடங்கலார்ஊர் எரியச்சீறி அன்றுமூவர்க் கருள்புரிந்தீர், மடங்கலானைச் செற்றுகந்தீர் மனைகள்தோ றும் தலைகையேந்தி, விடங்கராகித் திரிவதென்னே வேலை சூழ்வெண் காடனீரே. 1

இழித்துகந்தீர் முன்னைவேடம் இமையவர்க்கும் உரைகள்பேண, தொழித்துகந்தீர் நீர்முன்கொண்ட உயர் தவத்தை அமரர்வேண்ட, அழிக்கவந்த காமவேளை அவனு டைய தாதைகாண, விழித்துகந்த வெற்றிஎன்னே வேலை சூழ்வெண் காடனீரே. 2

படைகள்ஏந்திப் பாரிடமும் பாதம்போற்ற மாதும் நீரும், உடையோர்கோவ ணத்தராகி உண்மைசொல்லீர் உம்மையன்றே, சடைகள்தாழக் கரணம்இட்டுத் தன்மை பேசி இல்பலிக்கு, விடையதேறித் திரிவதென்னே வேலை சூழ்வெண் காடனீரே. 3

---

1. வீக்கி – இறுக்கிக்கட்டி. அடங்கலார் – பகைவர்; மூவர்க்கு – திரிபுரத்தின் தலைவர்களாகிய அசுரர்கள் மூவருக்கு; அருள் புரிதலாவது, திரிபுரங்களை மாத்திரம் அழித்து, அங் கிருந்த மூவரையும் வாயில் காவலராகவும் முழவுவாசிப்பவனாக வும் அமைத்தருளியது. விடங்கர்–பேரழகை உடையவர். வெண் காடனார் என்பதன் விளி, வெண்காடனீரே என்பது.

2. தாதை: திருமால்.

3. இல்பலிக்கு–வீடுகளில் பெறும் பிச்சைக்கு. கொடி – அம்பிகை.

பண்ணுளீராய்ப் பாட்டும்ஆனீர் பத்தர்சித்தம் பரவிக் கொண்டீர், கண்ணுளீராய்க் கருத்தில்உம்மைக் கருதுவார்கள் காணும்வண்ணம், மண்ணுளீராய் மதியம்வைத்தீர் வானநாடர் மருவிஏத்த, விண்ணுளீராய் நிற்பதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 4

நடம்எடுத்து நீரும்பூவும் கொண்டுதொண்டர் ஏவல் செய்ய, நடம்எடுத்தொன் றுடிப்பாடி நல்குவீர்நீர் புல்கும் வண்ணம், வடம்எடுத்த கொங்கைமாதோர் பாகமாக வார் கடல்வாய், விடம்மிடற்றில் வைத்தததென்னே வேலைசூழ் வெண் காடனீரே. 5

மாறுபட்ட வனத்தகத்தில் மருவவந்த வன்களிற்றைப், பீறிஇட்ட மாகப்போர்த்தீர் பெய்பலிக்கென் றில்லந் தோறும், கூறுபட்ட கொடியும்நீருங் குலாவிஏற்றை அடர ஏறி, வேறுபட்டுத் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 6

காதலாலே கருதுந்தொண்டர் காரணத்த ராகிநின்றே, பூதம்பாடப் புரிந்துநட்டம் புவனிஏத்த ஆடவல்லீர், நீதியாக ஏழில்ஓசை நித்தராகிச் சித்தர்சூழ, வேதம்ஓதித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 7

குரவுகொன்றை மதியம்மத்தம் கொங்கைமாதர் கங்கை நாகம், விரவுகின்ற சடைஉடையீர் விருத்தர்ஆனீர் கருத்தில் உம்மைப், பரவும்என்மேற் பழிகள்போக்கீர் பாகமாய மங்கைஅஞ்சி, வெருவவேழம் செற்றதென்னே வேலைசூழ் வெண் காடனீரே. 8

---

8. மத்தம் - ஊமத்தை.

மாடங்காட்டுங் கச்சியுள்ளீர் நிச்சயத்தால் நினைப் புளார்பாற், பாடுங்காட்டில் ஆடல்உள்ளீர் பரவும்வண்ணம் எங்ஙனேதான், நாடுங்காட்டில் அயனும்மாலும் நணுகா வண்ணம் அனலும்ஆய, வேடங்காட்டித் திரிவதென்னே வேலைசூழ்வெண் காடனீரே. 9

விரித்தவேதம் ஓதவல்லார் வேலைசூழ்வெண் காடுமேய, விருத்தனாய வேதன்றன்னை விரிபொழில்திரு நாவலூரன், அருத்தியால்ஆ ரூரன்தொண்டன் அடியன்கேட்ட மாலை பத்தும், தெரித்தவண்ணம் மொழியவல்லார் செம்மையாளர் வானுளாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: சுவேதாரணியேசுவரர்
அம்பிகை: பிரமவித்தியா நாயகி

---

## 4. திருக்குருகாவூர் வெள்ளடை — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

இத்தனை யாமாற்றை அறிந்திலேன் எம்பெருமான்
பித்தரே என்றும்மைப் பேசுவார் பிறரெல்லாம்
முத்தினை மணிதன்னை மாணிக்கம் முளைத்தெழுந்த
வித்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 1

ஆவியைப் போகாமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்
வாவியிற் கயல்பாயக் குளத்திடை மடைதோறும்
காவியுங் குவளையுங் கமலஞ்செங் கழுநீரும்
மேவிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 2

1. வித்தன் – செல்வன்.

பாடுவார் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவாய்
ஓடுநன் கலனாக உண்பலிக் குழல்வானே
காடுநின்* இடமாகக் கடுவிருள் நடமாடும்
வேடனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 3

வெப்பொடு பிணியெல்லாம் தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்
ஒப்புடை ஒளிநீலம் ஓங்கிய மலர்ப்பொய்கை
அப்படி அழகாய அணிநடை மடஅன்னம்
மெய்ப்படு குருகாவூர் வெள்ளடை நீயன்றே 4

வரும்பழி வாராமே தவிர்த்தென்னை ஆட்கொண்டாய்
சுரும்புடை மலர்க்கொன்றைச் சுண்ணவெண் ணீற்றானே
அரும்புடை மலர்ப்பொய்கை அல்லியும் மல்லிகையும்
விரும்பிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 5

பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற் சுவையொப்பாய்
கண்ணிடை மணியொப்பாய் கடுவிருட் சுடரொப்பாய்
மண்ணிடை அடியார்கள் மனத்திடர் வாராமே
விண்ணிடைக் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 6

போந்தனை தரியாமே நமன்தமர் புகுந்தென்னை
நோந்தனை செய்தாலும் நுன்னல தறியேன்நான்
சாந்தனை வருமேலுந் தவிர்த்தென்னை ஆட்கொண்ட
வேந்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 7

---

3. பாடுவார் பசியைத் தீர்ப்பாய்; இங்கே இறைவர் சுந்தரர் பசியைத் தீர்த்தார். கலன் - பிச்சைப் பாத்திரம். கடு இருள் — நள்ளிருள். * 'காடுகல்' என்றும் பாடம்.

4. நீலம் — கருங்குவளை மலர்.

6. நள்ளிரவில் தோன்றும் சோதியை ஒப்பாய்.

7. போந்தனை தரியாமே — என்பாலுள்ள கருணையால் என் துன்பத்தைத் தாங்காமல் என்னை ஆட்கொள்ள எழுந்தருளினாய். சாந்தனை - சாகும் அளவுக்கு.

மலக்கில்நின் அடியார்கள் மனத்திடை மால்தீர்ப்பாய்
சலச்சல மிடுக்குடைய தருமனூர் தமர்என்னைக்
கலக்குவான் வந்தாலுங் கடுந்துயர் வாராமே
விலக்குவாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 8

படுவிப்பாய் உனக்கேஆள் பலரையும் பணியாமே
தொடுவிப்பாய் துகிலொடுபொன் தோலுடுத் துழல்வானே
கெடுவிப்பாய் அல்லாதார் கேடிலாப் பொன்அடிக்கே
விடுவிப்பாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே. 9

வளங்கனி பொழில்மல்கு வயல்அணிந் தழகாய
விளங்கொளி குருகாவூர் வெள்ளடை உறைவானை
இளங்கிளை ஆரூரன் வனப்பகை யவள்அப்பன்
உளங்குளிர் தமிழ்மாலை பத்தர்கட் குரையாமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: வெள்ளடையப்பர்

அம்பிகை: காவியங்கண்ணியம்மை

**வரலாறு**; சுந்தரமூர்த்தி சுவாமிகள் சீகாழியைத் தரிசித்துக்கொண்டு திருக்குருகாவூரைத் தரிசிப்பதற்காகத் தம் பரிவாரங்களுடன் போய்க்கொண்டிருந்தார். அப்போது சுவாமிகளுக்குத் தாகமும் பசியும் அதிகமாயின. சிவபெருமான் நடுவழியில் ஒரு பந்தரை அமைத்து அதன்கண் தண்ணீரும் பொதிசோறும் வைத்துக்கொண்டிருந்து, சுந்தரர் வந்தவுடன் யாவருக்கும் வழங்கியருளினர். உண்டு சற்றே அவர்கள் உறங்கிப், பின் விழித்துப் பார்க்கையில் யாவையும் மறைந்ததைக் கண்டனர். எம்பெருமான் திருவருளென் றறிந்த சுந்தரர் இப்பதிகத்தைப் பாடியருளினர் [பெரிய புராணம், ஏயர்கோன் 155--163.]

---

8. மலக்கு இல் – கலக்கம் இல்லாத. மால் – அறியாமை. சலச்சலம் – மிக்க வஞ்சனை.

9. உனக்கே ஆள் படுவிப்பாய் – அடியேனை உன் ஒருவனுக்கே ஆளாகச் செய்வாய். துகிலொடு பொன்னை எனக்குத் தொடுவிப்பாய்.

10. இளங்கிளை–வயசில் இளைய சுற்றத்தான். உரை ஆம்– அடிக்கடி சொல்லும் உரையாகவே அமையும்.

## 5. திருக்கழுமலம் — பண்: தக்கேசி

*திருச்சிற்றம்பலம்*

சாதலும் பிறத்தலுந் தவிர்த்தெனை வகுத்துத்
தன்அருள் தந்தஎம் தலைவனை மலையின்
மாதினை மதித்தங்கொர் பால்கொண்ட மணியை
வருபுனல் சடையிடை வைத்தஎம் மானை
ஏதிலென் மனத்துக்கோர் இரும்புண்ட நீரை
எண்வகை ஒருவனை எங்கள்பி ரானைக்
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 1

மற்றொரு துணையினி மறுமைக்குங் காணேன்
வருந்தலுற் றேன்மற வாவரம் பெற்றேன்
சுற்றிய சுற்றமுந் துணைஎன்று கருதேன்
துணைஎன்று நான்தொழப் பட்டஒண் சுடரை
முத்தியும் ஞானமும் வானவர் அறியா
முறைமுறை பலபல நெறிகளுங் காட்டிக்
கற்பனை கற்பித்த கடவுளை அடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 2

திருத்தினை நகர்உறை சேந்தன் அப்பன்என்
செய்வினை அறுத்திடுஞ் செம்பொனை அம்பொன்
ஒருத்தனை அல்லதிங் காரையும் உணரேன்
உணர்வுபெற் றேன்உய்யுங் காரணந் தன்னால்

---

1. ஏது இல் என் – யாதொரு பற்றும் இல்லாத எனது. எண்வகை ஒருவன்–அட்டமூர்த்தி. கழுமல வளநகர்–சீகாழி.

3. சேந்தன் அப்பன்–முருகவேளுடைய தந்தை. வேலை – பிரளய காலத்தில் சமுத்திரத்திலே மிதந்த.

விருத்தனைப் பாலனைக் கனவிடை விரவி
விழித்தெங்குங் காணமாட் டாதுவிட் டிருந்தேன்
*கருத்தனை நிருத்தஞ்செய் காலனை வேலைக்*
*கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.* 3

மழைக்கரும் பும்மலர்க் கொன்றையி னானை
வளைக்கலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
பிழைத்தொரு கால்இனிப் போய்ப்பிற வாமைப்
பெருமைபெற் றேன்பெற்ற தார்பெறு கிற்பார்
*குழைக்கருங் கண்டனைக் கண்டுகொள் வானே*
*பாடுகின் றேன்சென்று கூடவும் வல்லேன்*
*கழைக்கரும் புங்கத லிப்பல சோலைக்*
*கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.* 4

*குண்டலங் குழைதிகழ் காதனே என்றும்*
*கொடுமழு வாட்படைக் குழகனே என்றும்*
*வண்டலம் பும்மலர்க் கொன்றையன் என்றும்*
*வாய்வெரு வித்தொழு தேன்விதி யாலே*
*பண்டைநம் பலமன முங்களைந் தொன்றாய்ப்*
*பசுபதி பதிவின விப்பல நாளும்*
*கண்டலங் கழிக்கரை ஓதம்வந் துலவும்*
*கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.* 5

வரும்பெரும் வல்வினை என்றிருந் தெண்ணி
வருந்தலுற் றேன்மற வாமனம் பெற்றேன்
விரும்பிஎன் மனத்திடை மெய்குளிர்ப் பெய்தி
வேண்டிநின் றேன்தொழு* தேன்விதி யாலே

---

4. *மழைக்கு அரும்பும்; கொன்றை கார் காலத்தில் மலர்வது. கழைக் கரும்பு-மூங்கிலைப்போல வளர்ச்சி பெற்ற கரும்பு.*

5. *குழகன்–இளமையை உடையவன். கண்டல்-முள்ளி. ஓதம் – பொங்கும் கடல் நீர்.*

* 'வேண்டிநின் றேதொழு' என்றும் பாடம்.

அரும்பினை அலரினை அமுதினைத் தேனை
ஐயனை அறவன்என் பிறவிவேர் அறுக்கும்
கரும்பினைப் பெருஞ்செந்நெல் நெருங்கிய கழனிக்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 6

அயலவர் பரவவும் அடியவர் தொழவும்
அன்பர்கள் சாயலுள் அடையலுற் றிருந்தேன்
முயல்பவர் பின்சென்று முயல்வலை யானை
படுமென மொழிந்தவர் வழிமுழு தெண்ணிப்
புயலினைத் திருவினைப் பொன்னின தொளியை
மின்னின துருவை என்னிடைப் பொருளைக்
கயலினஞ் சேலொடு வயல்விளை யாடுங்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 7

நினைதரு பாவங்கள் நாசங்க ளாக
நினைந்துமுன் தொழுதெழப் பட்டஒண் சுடரை
மலைதரு மலைமகள் கணவனை வானோர்
மாமணி மாணிக்கத் தைம்மறைப் பொருளைப்
புனைதரு புகழினை எங்களை தொளியை
இருவரும் ஒருவனென் றுணர்வரி யவனைக்
கனைதரு கருங்கடல் ஓதம்வந் துலவும்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 8

மறையிடைத் துணிந்தவர் மனையிடை இருப்ப
வஞ்சனைசெய்தவர் பொய்கையும் மாயத்
துறையுறக் குளித்துள தாகவைத் துய்த்த
உண்மை யெனுந்தக வின்மையை ஓரேன்

7. சாயலுள் – மென்மையான கூட்டத்தில்.

8. இருவரும் – திருமாலும் பிரமனும்.

பிறையுடைச் சடையனை எங்கள்பி ரானைப்
பேரரு ளாளனைக் காரிருள் போன்ற
கறையணி மிடறுடை அடிகளை அடியேன்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே. 9

செழுமலர்க் கொன்றையுங் கூவிள மலரும்
விரவிய சடைமுடி அடிகளை நினைந்திட்
டழுமலர்க் கண்ணிணை அடியவர்க் கல்லால்
அறிவரி தவன்திரு அடியிணை இரண்டும்
கழுமல வளநகர்க் கண்டுகொண் டூரன்
சடையன்றன் காதலன் பாடிய பத்தும்
தொழுமலர் எடுத்தகை அடியவர் தம்மைத்
துன்பமும் இடும்பையுஞ் சூழகி லாவே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பிரமபுரீசுவரர்
அம்பிகை: திருநிலைநாயகியம்மை

**வரலாறு:** சுந்தரமூர்த்தி சுவாமிகள் சிதம்பரத்தைத் தரிசித்துக்கொண்டு கொள்ளிடத்தைக் கடந்து சீகாழியை நோக்கி வந்தவர், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அவதரித்த அத்தலத்தைக் காலினால் மிதிக்க அஞ்சி, ஊர்ப்புறத்தே நின்று வணங்கி வலம் வருகையில், சிவபெருமான் அவருக்குக் காட்சி கொடுத்தருளினார். அப்போது ஆளுடைய நம்பிகள் பாடியபதிகம் இது. [பெரிய புராணம், தடுத்தாட்கொண்ட புராணம் 110-111.]

---

10. கூவிள மலர் - வில்வப்பூ.

## 6. திருக்கோலக்கா — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

புற்றில் வாளர வார்த்தபி ரானைப்
 பூத நாதனைப் பாதமே தொழுவார்
பற்று வான்துணை எனக்கெளி வந்த
 பாவ நாசனை மேவரி யானை
முற்ற லார்திரி புரம்ஒரு மூன்றும்
 பொன்ற வென்றிமால் வரைஅரி அம்பாக்
கொற்ற வில்லங்கை ஏந்திய கோனைக்
 கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 1

அங்கம் ஆறும்மா மறைஒரு நான்கும்
 ஆய நம்பனை வேய்புரை தோளி
தங்கு மாதிரு உருவுடை யானைத்
 தழல்ம திசடை மேற்புனைந் தானை
வெங்கண் ஆனையின் ஈருரி யானை
 விண்ணு ளாரொடு மண்ணுளார் பரசும்
கொங்கு லாம்பொழிற் குரவெறி கமழும்
 கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 2

பாட்ட கத்திசை ஆகிநின் றானைப்
 பத்தர் சித்தம் பரிவினி யானை
நாட்டகத் தேவர் செய்கையு ளானை
 நட்டம் ஆடியை நம்பெரு மானைக்

---

1. புற்றில் வாள் அரவு: சாதியை நோக்கிய விசேடணம். வான் துணை-மேலான துணை. முற்றலார்-பகைவர். திரிபுரம்-திரிந்த புரம். மால்வரையை வில்லாக ஏந்திய.

2. அங்கம்-சாத்திரம். வேய்-மூங்கில். பரசும்-புகழும். கொங்கு-நறுமணம். குர வெறி கமழும்-குராமலர் வாசனைவீசும்.

காட்ட கத்துறு புலியுரி யானைக்
கண்ணோர் மூன்றுடை அண்ணலை அடியேன்
கோட்ட கப்புன லார்செழுங் கழனிக்
கோலக் காவினிற் கண்டுகோண் டேனே. 3

ஆத்தம் என்றெனை ஆளுகந் தானை
அமரர் நாதனைக் குமரனைப் பயந்த
வார்த்த யங்கிய முலைமட மானை
வைத்து வான்மிசைக் கங்கையைக் கரந்த
தீர்த்த னைச்சிவ னைச்செழுந் தேனைத்
தில்லை அம்பலத் துள்நிறைந் தாடும்
கூத்த னைக்குரு மாமணி தன்னைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 4

அன்று வந்தெனை அகலிடத் தவர்முன்
ஆள தாகஎன் றுவணங் காட்டி
நின்று வெண்ணெய்நல் லூர்மிசை ஒளித்த
நித்தி லத்திரள் தொத்தினை முத்திக்
கொன்றி னொன்றனை உம்பர்பி ரானை
உயரும் வல்லர ணங்கெடச் சீறும்
குன்ற வில்லியை மெல்லிய லுடனே
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 5

காற்றுத் தீப்புனல் ஆகினின் றானைக்
கடவு ளைக்கொடு மால்விடை யானை
நீற்றுத் தீஉரு வாய்நிமிர்ந் தானை
நிரம்பு பல்கலை யின்பொரு ளாலே

---

3. கோட்டகம்–குளம்.

4. ஆத்தம்–ஆப்தம்; நெருங்கிய நட்பு. பயந்த–பெற்ற.

5. அகலிடத்தவர்–உலகத்தார். ஆவணம்–உரிமை யோலை, தொத்து–கொத்து.

போற்றித் தன்கழல் தொழுமவன் உயிரைப்
போக்கு வான்உயிர் நீக்கிடத் தாளாற்
கூற்றைத் தீங்குசெய் குரைகழ லானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 6

அன்ற யன்சிரம் அரிந்ததிற் பலிகொண்
டமர ருக்கருள் வெளிப்படுத் தானைத்
துன்று பைங்கழ லிற்சிலம் பார்த்த
சோதி யைச்சுடர் போல்ஒளி யானை
மின்ற யங்கிய இடைமட மங்கை
மேவும் ஈசனை வாசமா முடிமேற்
கொன்றை அஞ்சடைக் குழகனை அழகார்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 7

நாளும் இன்னிசை யால்தமிழ் பரப்பும்
ஞான சம்பந்த னுக்குல கவர்முன்
தாளம் ஈந்தவன் பாடலுக் கிரங்கும்
தன்மை யாளனை என்மனக் கருத்தை
ஆளும் பூதங்கள் பாடநின் றாடும்
அங்க ணன்றனை எண்கணம் இறைஞ்சும்
கோளி லிப்பெருங் கோயிலு ளானைக்
கோலக் காவினிற் கண்டுகொண் டேனே. 8

அரக்கன் ஆற்றலை அழித்தவன் பாட்டுக்
கன்றி ரங்கிய வென்றியி னானைப்
பரக்கும் பாரளித் தண்டுகந் தவர்கள்
பரவி யும்பணி தற்கரி யானைச்

---

6. தொழும் அவன் – மார்க்கண்டேயன். தீங்கு செய் – அழித்த.
7. அரிந்து அதில் பலிகொண்டு; பலி–பிச்சை. கழலில் – திருவடியில்.
8. தாளம் ஈந்தது, இத்திருத்தலத்தில்.

சிரக்கண் வாய்செவி மூக்குயர் காயம்
ஆகித் தீவினை தீர்த்தஎம் மானைக்
குரக்கி னங்குதி கொண்(டு)உகள் வயல்சூழ்
கோலக் காவினிற் கண்டு கொண்டேனே. 9

கோட ரம்பயில் சடையுடைக் கரும்பைக்
கோலக் காவுள்எம் மானைமெய்ம் மானப்
பாட ரங்குடி அடியவர் விரும்பப்
பயிலும் நாவலா ரூரன்வன் றொண்டன்
நாடி ரங்கிமுன் அறியுமந் நெறியால்
நவின்ற பத்திவை விளம்பிய மாந்தர்
காட ரங்கென நடம்நவின் றான்பாற்
கதியும் எய்துவர் பதியவர்க் கதுவே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: சத்தபுரீசுவரர்
அம்பிகை: ஓசை கொடுத்த நாயகியம்மை.

---

9. அரக்கன்–இராவணன். அளித்து உகந்தவர், பிரம தேவர்; உண்டு உகந்தவர், திருமால், அளித்தல் இங்கே சிருஷ்டி செய்தல். காயம் – உடம்பு.

10. கோடரம்–கிளை. மெய்ம்மானப் பாடர் அம்குடி அடியவர் – உண்மையும் பெருமையும் உடைய பாட்டையுடையவ ராகிய அழகிய குடியிற் பிறந்த அடியவர். காடு அரங்கு என; காடு–மயானம்.

## 7. திருநின்றியூர் - பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

அற்றவ னார்அடி யார்தமக் காயிழை பங்கினராம்
பற்றவ னார்எம் பராபரர் என்று பலர்விரும்பும்
கொற்றவ னார்குறு காதவர் ஊர்நெடு வெஞ்சரத்தால்
செற்றவ னார்க்கிடம் ஆவது நந்திரு நின்றியூரே. 1

வாசத்தி னார்மலர்க் கொன்றையுள் ளார்வடி வார்ந்தநீறு
பூசத்தி னார்புக லிந்நகர் போற்றும்எம் புண்ணியத்தார்
நேசத்தி னால்என்னை ஆண்டுகொண் டார்நெடு மாகடல்சூழ்
தேசத்தி னார்க்கிடம் ஆவது நந்திரு நின்றியூரே. 2

அங்கையின் மூவிலை வேலர் அமரர் அடிபரவச்
சங்கையை நீங்க அருளித் தடங்கடல் நஞ்சம்உண்டார்
மங்கையொர் பாகர் மகிழ்ந்த இடம்வள மல்குபுனற்
செங்கயல் பாயும் வயல்பொலி யுந்திரு நின்றியூரே. 3

ஆறுகந் தார்அங்கம் நான்மறை யார்எங்கும் ஆகிஅடல்
ஏறுகந் தார்இசை ஏழுகந் தார்முடிக் கங்கைதன்னை
வேறுகந் தார்விரி நூல்உகந் தார்பரி சாந்தமதா
நீறுகந் தார்உறை யும்மிட மாந்திரு நின்றியூரே. 4

வஞ்சங்கொண் டார்மனஞ் சேரகில் லார்நறு நெய்தயிர்பால்
அஞ்சுங்கொண் டாடிய வேட்கையி னார்அதி கைப்பதியே
தஞ்சங்கொண் டார்தமக் கென்றும் இருக்கை சரண்அடைந்தார்
நெஞ்சங்கொண் டார்க்கிடம் ஆவது நந்திரு நின்றியூரே. 5

---

2. பூசத்தினார்-பூசுதலை உடையவர்.

3. மூவிலை வேல்-திரிசூலம்.

4. இசைஏழு - சப்தஸ்வரம். சாந்தமதா - பூசுகின்ற சந்தனமாக.

ஆர்த்தவர் ஆடர வம்மரை மேற்புலி ஈர்உரிவை
போர்த்தவர் ஆனையின் தோலுடல் வெம்புலால் கையகலப்
பார்த்தவ ரின்னுயிர் பார்படைத் தான்சிர மஞ்சில்ஒன்றைச்
சேர்த்தவ ருக்குறை யும்மிட மாந்திரு நின்றியூரே. 6

தலையிடை யார்பலி சென்றகந் தோறுந் திரிந்தசெல்வர்
மலையுடை யாள்ஒரு பாகம்வைத் தார்கல் லுதைந்தநன்னீர்
அலையுடை யார்சடை எட்டுஞ் சுழல அருநடஞ்செய்
நிலையுடை யார்உறை யும்மிட மாந்திரு நின்றியூரே. 7

எட்டுகந் தார்திசை ஏழுகந் தார்எழுத் தாறும்அன்பர்
இட்டுகந் தார்மலர்ப் பூசையிச் சிக்கும் இறைவர்முன்னாள்
பட்டுகும் பாரிடைக் காலனைக் காய்ந்து பலியிரந்தூண்
சிட்டுகந் தார்க்கிடம் ஆவது நந்திரு நின்றியூரே. 8

காலமும் ஞாயிறும் ஆகிநின் றார்கழல் பேணவல்லார்
சீலமுஞ் செய்கையுங் கண்டுகப் பார்அடி போற்றிசைப்ப
மாலொடு நான்முகன் இந்திரன் மந்திரத் தால்வணங்க
நீலநஞ் சுண்டவ ருக்கிட மாந்திரு நின்றியூரே. 9

வாயார் மனத்தால் நினைக்கும் அவருக் கருந்தவத்தில்
தூயார் சுடுபொடி ஆடிய மேனியர் வானில்என்றும்
மேயார் விடைஉகந் தேறிய வித்தகர் போர்ந்தவர்க்குச்*
சேயார் அடியார்க் கணியவர் ஊர்திரு நின்றியூரே. 10

---

6. புலி ஈர் உரிவை–புலியை உரித்த தோலை.

8. எழுத்து ஏழு உகந்தார் – ஏழிசைக்குரிய எழுத்துக்கள் ஏழை விரும்பினர். அன்பர் பூசை ஆறும் இச்சிக்கும் – அன்பர்களது ஆறுகால பூசையையும் விரும்பும்; "பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து" [திருவிளையாடல்.]

10. போர்ந்தவர்க்கு – தம்மை நினையாமல் அகன்றவருக்கு. சேயார்–தூரத்தில் நிற்பவர். * 'போந்தவர்க்குச்' என்றும் பாடம்.

சேரும் புகழ்த்தொண்டர் செய்கை அருத்திரு நின்றியூரிற்
சீருஞ் சிவகதி யாயிருந் தானைத் திருநாவலா
ரூரன் உரைத்த உறுதமிழ் பத்தும்வல் லார்வினைபோய்ப்
பாரும் விசும்புந் தொழப்பர மன்னடி கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

## பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

[1]திருவும் வண்மையும் திண்டிறல் அரசும்
சிலந்தி யார்செய்த செய்பணி கண்டு
மருவு கோச்செங்க ணன்றனக் களித்த
வார்த்தை கேட்டுநுன் மலரடி அடைந்தேன்
பெருகு பொன்னிவந் துந்துபன் மணியைப்
பிள்ளைப் பல்கணம் பண்ணையுள் நண்ணித்
தெருவுந் தெற்றியும் முற்றமும் பற்றித்
திரட்டுந் தென்திரு நின்றியூ ரானே. 1

அணிகோள் ஆடையம் பூண்அணி மாலை
அமுது செய்தமு தம்பெறு சண்டி
இணைகோள் ஏழெழு நூறிரு பனுவல்
ஈன்ற வன்திரு நாவினுக் கரையன்

1. திரு முதலியவற்றைச் செங்கணான் தனக்கு அளித்த என்று கூட்டுக. பண்ணை - விளையாட்டிடம். தெற்றி—திண்ணை.

2. அமுதம்-முத்தி. பனுவல் - திருப்பதிகங்கள். கணை - அம்பு. இணைகோள் - பொருட் பிரிவாகிய ஐந்து இணைகளைக் கொண்ட; திண்ணையிலே மாணவர் பயிலத் தெரிந்துகொண்ட எனினும் பொருந்தும்.

கலைகோள் கண்ணப்பன் என்றிவர் பெற்ற
காத லின்னருள் ஆதரித் தடைந்தேன்
திலைகோள் செந்தமிழ் பைங்கிளி தெரியும்
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. 2

மொய்த்த சீர்மூந் நூற் றறுபது வேலி
மூன்று நூறுவே தியரொடு நுனக்கு
ஒத்த பொன்மணிக் கலசங்கள் ஏந்தி
ஓங்கு நின்றியூர் என்றுனக் களிப்பப்
பத்தி செய்தஅப் பரசுரா மற்குப்
பாதங் காட்டிய நீதிகண் டடைந்தேன்
சித்தர் வானவர் தானவர் வணங்கும்
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. 3

இரவி நீள்சுடர் எழுவதன் முன்னம்
எழுந்து தன்முலைக் கலசங்கள் ஏந்திச்
சுரபி பால்சொரிந் தாட்டிநின் பாதந்
தொடர்ந்த வார்த்தை திடம்படக் கேட்டுப்
பரவி உள்கிவன் பாசத்தை அறுத்துப்
பரம வந்துநுன் பாதத்தை அடைந்தேன்
நிரவி நித்திலம் அத்தகு செம்பொன்
அளிக்குந் தென்றிரு நின்றியூ ரானே. 4

வந்தோர் இந்திரன் வழிபட மகிழ்ந்து
வான நாடுநீ ஆள்கென அருளிச்
சந்தி மூன்றிலுந் தாபரம் நிறுத்திச்
சகளி செய்திறைஞ் சகத்தியர் தமக்குச்

---

4. சுரபி–காமதேனு. நித்திலத்தை நிரவி.

5. கற்பந்தோறும் இந்திரர் வேறுபடுதலின் ஓர் இந்திரன் என்றார். சந்தி மூன்றிலும் – காலை, நண்பகல், மாலை என்ற மூன்று சந்திகளிலும். தாபரம் நிறுத்தி – இலிங்கத்தைப் பிரதிட்டை செய்து. சகளிசெய்து – உருவம் படைத்து. பொதியிற் சேர்வு நல்கிய–பொதிய மலை வாழ்க்கையை அருளிச் செய்த.

சிந்து மாமணி அணிதிருப் பொதியிற்
சேர்வு நல்கிய செல்வங்கண் டடைந்தேன்
செந்தண் மாமலர்த் திருமகள் மருவும்
செல்வத் தென்றிரு நின்றியூ ரானே. 5

காது பொத்தரைக் கின்னரர் உழுவை
கடிக்கும் பன்னகம் பிடிப்பருஞ் சீயம்
கோதில் மாதவர் குழுவுடன் கேட்பக்
கோல ஆல்நிழற் கீழ்அறம் பகர
ஏதஞ் செய்தவர் எய்திய இன்பம்
யானுங் கேட்டுநின் இணைஅடி அடைந்தேன்
நீதி வேதியர் நிறைபுகழ் உலகில்
நிலவு தென்றிரு நின்றியூ ரானே. 6

கோடு நான்குடைக் குஞ்சரங் குலுங்க
நலங்கொள் பாதம்நின் றேத்திய பொழுதே
பீடு விண்மிசைப் பெருமையும் பெற்ற
பெற்றி கேட்டுநின் பொற்கழல் அடைந்தேன்
பேடை மஞ்ஞையும் பிணைகளின் கன்றும்
பிள்ளைக் கிள்ளையும் எனப்பிறை நுதலார்
நீடு மாடங்கள் மாளிகை தோறும்
நிலவு தென்றிரு நின்றியூ ரானே. 7–10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மகாலட்சுமிநாதர்; அம்பிகை: உலகநாயகி.

---

6. காது பொத்து – இன்னிசையன்றிப் பிற ஒலிக்ளைக் கேட்டால் காதைப் பொத்திக்கொள்ளும். கின்னரர் – தேவ சாதியில் ஒரு வகையினர். உழுவை – புலி. சீயம் – சிங்கம். உடன்கேட்ப–ஒருங்கே இருந்து கேட்கும்படி. ஏதஞ்செய்தவர் – முன்பு பிறருக்குத் துன்பம் செய்தவர்கள்.

7. குஞ்சரம் – ஐராவதம். பிணைகள் – பெண் மான்கள்.

## 8. திருப்புன்கூர் — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

அந்த ணாளன்உன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்றன் ஆருயி ரதனை
வவ்வினாய்க் குன்றன் வண்மைகண் டடியேன்
எந்தை நீஎனை நமன்தமர் நலியின்
இவன்மற் றென்னடி யானென விலக்குஞ்
சிந்தை யால்வந்துன் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே. 1

வையக முற்றும் மாமழை மறந்து
வயலில் நீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை என்ன
ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளுஞ்
செய்கை கண்டுநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே. 2

ஏத நன்னிலம் ஈரறு வேலி
ஏயர் கோன்உற்ற இரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற

---

1. மார்க்கண்டேயர் வரலாற்றைக் குறிக்கின்றார்.

2. தருகோம்–தேவதானமாக அளிப்போம்.

3. இரும்பிணி யென்றது சூலை நோயை. கோதனங்கள் – பசுக்களாகிய செல்வம். சண்டி–சண்டேசர். பூத ஆளி – பூதங்களைக் கணங்களாக உடையவன்.

தாதை தாள்அற எறிந்தசண் டிக்குன்
சடைமி சைமலர் அருள்செயக் கண்டு
பூத ஆளிநின் பொன்னடி அடைந்தேன்
பூம்பொ ழில்திருப் புன்கூர் உளானே. 3

நற்ற மிழ்வல்ல ஞானசம் பந்தன்
நாவி னுக்கரையன் நாளைப்போ வானும்
கற்ற சூதன்நற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினும் குணம்எனக் கருதும்
கொள்கை கண்டுநின் குரைகழல் அடைந்தேன்
பொற்றி ரள்மணிக் கமலங்கள் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூர் உளானே. 4

கோல மால்வரை மத்தென நாட்டிக்
கோளரவு சுற்றிக் கடைந்தெ ழுந்த
ஆல நஞ்சுகண் டவர்மிக இரிய
அமரர் கட்கருள் புரிவது கருதி
நீலம் ஆர்கடல் விடந்தனை உண்டு
கண்டத் தேவைத்த பித்தநீ செய்த
சீலங் கண்டுநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே. 5

இயக்கர் கின்னரர் யமனொடு வருணர்
இயங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்கம் இல்புலி வானரம் நாகம்
வசுக்கள் வானவர் தானவர் எல்லாம்

---

5. இரிய–ஓட.

அயர்ப்பொன் றின்றிநின் திருவடி யதனை
அர்ச்சித் தார்பெறும் ஆரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே. 6

போர்த்த நீள்செவி யாளர்அந் தணர்க்குப்
பொழில்கொள் ஆல்நிழற் கீழறம் புரிந்து
பார்த்த னுக்கன்று பாசுப தங்கொடுத்
தருளி னாய்பண்டு பகீரதன் வேண்ட
ஆர்த்து வந்திழி யும்புனற் கங்கை
நங்கை யாளைநின் சடைமிசைக் கரந்த
தீர்த்த னேநின்றன் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே. 7

மூவெ யில்செற்ற ஞான்றுய்ந்த மூவரில்
இருவர் நின்திருக் கோயிலின் வாய்தல்
காவ லாளர்என் றேவிய பின்னை
ஒருவ* நீகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநடம் மகிழ
மணிமு ழாமுழக் கஅருள் செய்த
தேவ தேவநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே. 8

---

7. போர்த்த நீள் செவியாளர் – கேள்வி போர்த்து நீண்ட செவியை உடைய சனகாதி முனிவர். அறம் புரிந்து–தருமோபதேசம் செய்து. பார்த்தன் – அருச்சுனன். தீர்த்தனே – தூயவனே. கங்கையைச் சடையிற் கரந்தமையால் தூய்மை பெறாமல், இயல்பாகவே தூயவன் என்றபடி.

8. இருவர்–தாரகாட்சன், வித்யுன்மாலி. வாய்தல் – திருவாயில். ஒருவன்–வாணாசுரன். கரிகாடு–சுடுகாடு.

* 'ஒருவன்' என்றும் பாடம்.

அறிவி னால்மிக்க அறுவகைச் சமயம்
அவ்வ வர்க்கங்கே ஆரருள் புரிந்து
எறியு மாகடல் இலங்கையர் கோனைத்
துலங்க மால்வரைக் கீழ்அடர்த் திட்டுக்
குறிகொள் பாடலின் இன்னிசை கேட்டுக்
கோல வாளொடு நாளது கொடுத்த
செறிவு கண்டுநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானே. 9

கம்ப மால்களிற் றின்னுரி யானைக்
காமற் காய்ந்ததோர் கண்உடை யானைச்
செம்பொ னேஒக்குந் திருவுரு வானைச்
செழும்பொ ழில்திருப் புன்கூர் உளானை
உம்ப ராளியை உமையவள் கோனை
ஊரன் வன்றொண்டன் உள்ளத் தால்உகந்
தன்பி னாற்சொன்ன அருந்தமிழ் ஐந்தோ
டைந்தும் வல்லவர் அருவினை இலரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: சிவலோகநாதர்; அம்பிகை: சொக்கநாயகி.

**வரலாறு:** சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏயர்கோன் கலிக்காம நாயனாருடன் சென்று தரிசித்துப் பாடியது [**பெரிய புராணம்,** ஏயர்கோன், 406.]

---

9. குறிகொள்–பொருட்குறிப்பையுடைய.

## 9. திருநீடூர் — பண்: தக்கேசி

### திருச்சிற்றம்பலம்

ஊர்வ தோர்விடை ஒன்றுடை யானை
ஒண்ணு தற்றனிக் கண்ணுத லானைக்
கார தார்கறை மாமிடற் றானைக்
கருத லார்புரம் மூன்றெரித் தானை
நீரில் வாளை வரால்குதி கொள்ளும்
நிறைபு னற்கழ னிச்செல்வ நீடூர்ப்
பாரு ளார்பர வித்தொழ நின்ற
பரம னைப்பணி யாவிட லாமே. 1

துன்னு வார்சடைத் தூமதி யானைத்
துயக்கு றவகை தோன்றுவிப் பானைப்
பன்னு நான்மறை பாடவல் லானைப்
பார்த்த னுக்கருள் செய்த பிரானை
என்னை இன்னருள் எய்துவிப் பானை
ஏதி லார்தமக் கேதிலன் றன்னைப்
புன்னை மாதவி போதலர் நீடூர்ப்
புனித னைப்பணி யாவிட லாமே. 2

கொல்லும் மூவிலை வேலுடை யானைக்
கொடிய காலனை யுங்குமைத் தானை
நல்ல வாநெறி காட்டுவிப் பானை
நாளும் நாம்உகக் கின்றபி ரானை

---

1. ஒள் நுதல் தனிக்கண் நுதலானை – ஒள்ளிய, யாவரும் சிறப்பித்துப் பேசும் ஒரு கண்ணை நெற்றியிலே உடையவனை. பணியா விடலாமே–பணியாமல் விடுதல் கூடுமோ?

2. துயக்குறு வகை–கலக்கமில்லாதபடி. ஏதிலார்–அயலார். தன்னை அணுகாமல் அயலாக இருப்பவனுக்குத் தானும் அயலாக இருப்பான் என்றபடி.

அல்ல லில்லரு ளேபுரி வானை
ஆடு நீர்வயல் சூழ்புனல் நீடூர்க்
கொல்லை வெள்ளெரு தேறவல் லானைக்
கூறி நாம்பணி யாவிட லாமே. 3

தோடு காதிடு தூநெறி யானைத்
தோற்ற முந்துறப் பாயவன் றன்னைப்
பாடு மாமறை பாடவல் லானைப்
பைம்பொ ழிற்குயில் கூவிட மாடே
ஆடு மாமயில் அன்னமோ டாட
அலைபு னற்கழ னித்திரு நீடூர்
வேட னையபி ரானவன் றன்னை
விரும்பி நாம்பணி யாவிட லாமே. 4

குற்றம் ஒன்றடி யார்இலர் ஆறற்
கூடு மாறத னைக்கொடுப் பானைக்
கற்ற கல்வியி லும்மினி யானைக்
காணப் பேணும வர்க்கெளி யானை
முற்ற அஞ்சுந் துறந்திருப் பானை
மூவ ரின்முத லாயவன் றன்னைச்
சுற்று நீள்வயல் சூழ்திரு நீடூர்த்
தோன்ற லைப்பணி யாவிட லாமே. 5

---

3. குமைத்தானை – வருத்தினவனை. கொல்லை - தினைக் கொல்லையையுடைய முல்லை நிலம்.

4. காதில் தோட்டை இடு. தோற்றம் முந்துறப் பாயவன் தன்னை–சிருஷ்டிக்கு முன்பே எங்கும் பரவியிருப்பவனை. மாடே– பக்கத்தில்.

5. அஞ்சும்–ஐம்பொறிகளையும்; "பொறிவாயி லைந்தவித் தான்" (குறள்.)

காடில் ஆடிய கண்ணுத லானைக்
காலனைக்கடிந் திட்ட பிரானைப்
பாடி ஆடும்பரி சேபுரிந் தானைப்
பற்றி னேடுசுற் றம்மொழிப் பானைத்
தேடி மாலயன் காண்பரி யானைச்
சித்த முந்தெளி வார்க்கெளி யானைக்
கோடி தேவர்கள் கும்பிடு நீடூர்க்
கூத்த னைப்பணி யாவிட லாமே. 6

விட்டி லங்கெரி யார்கையி னானை
வீடி லாத வியன்புக ழானைக்
கட்டு வாங்கந் தரித்தபி ரானைக்
காதி லார்கன கக்குழை யானை
விட்டி லங்குபுரி நூலுடை யானை
வீந்த வர்தலை ஓடுகை யானைக்
கட்டி யின்கரும் போங்கிய நீடூர்க்
கண்டு நாம்பணி யாவிட லாமே. 7

மாய மாய மனங்கெடுப் பானை
மனத்து ளேமதி யாய்இருப் பானைக்
காய மாயமும் ஆக்குவிப் பானைக்
காற்று மாய்க்கன லாய்க்கழிப் பானை

6. பாடி ஆடுந் திறத்தை என்பால் அமையச் செய்தவனை.

7. வீடிலாத – அழியாத. கட்டுவாங்கம் – யோகதண்டம். வீந்தவர்–இறந்தவர்களுடைய. கட்டி இன் கரும்பு – கற்கண்டு இனிதாகக் காரணமான கரும்பு.

8. மதி – அறிவு. மனம் என்றது அந்தக்கரணத்தை: மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு பகுதிகள் அமைந்த அதில் மதியாகிய புத்தி ஒன்று. காயம் – உடம்பு. ஒல்லை–விரைவில். வேய் கொள் தோளுமை: தலத்து அம்பிகை,

ஓயு மாறுரு நோய்புணர்ப் பானை
ஒல்லை வல்வினை கள்கெடுப் பானை
வேய்கொள் தோள்உமை பாகனை நீடூர்
வேந்த னைப்பணி யாவிட லாமே. 8

கண்ட முங்கறுத் திட்டபி ரானைக்
காணப் பேணு மவர்க்கெளி யானைத்
தொண்ட ரைப்பெரி தும்முகப் பானைத்
துன்ப முந்துறந் தின்பினி யானைப்
பண்டை வல்வினை கள்கெடுப் பானைப்
பாக மாமதி யானவன் றன்னைக்
கெண்டை வாளை கிளர்புனல் நீடூர்க்
கேண்மை யாற்பணி யாவிட லாமே. 9

அல்லல் உள்ளன தீர்த்திடு வானை
அடைந்த வர்க்கமு தாயிடு வானைக்
கொல்லை வல்லர வம்மசைத் தானைக்
கோல மார்கரி யின்னுரி யானை
நல்ல வர்க்கணி ஆனவன் றன்னை
நானுங் காதல்செய் கின்ற பிரானை
எல்லி மல்லிகை யேகமழ் நீடூர்
ஏத்தி நாம்பணி யாவிட லாமே. 10

பேரொ ராயிர மும்முடை யானைப்
பேசி னற்*பெரி தும்மினி யானை
நீரூர் வார்சடை நின்மலன் றன்னை
நீடூர் நின்றுகந் திட்டபி ரானை

---

9. பாகமா மதியான் அவன் றன்னை; பாகமாமதி–பிறை.
10. கொல் ஐ – கொல்லுகின்ற அழகிய. எல்லி-இரவில்.
11. பேசினற்பெரிதும் இனியானை; "பேசப் பெரிது மினி யாய் நீயே" (அப்பர் தேவாரம்,) * 'பேரினல்' என்றும் பாடம்.

ஆரூ ரன்னடி காண்பதற் கன்பாய்
ஆத ரித்தழைத் திட்டஇம் மாலை
பாரூ ரும்பர வித்தொழ வல்லார்
பத்த ராய்முத்தி தாம்பெறு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி:சோமநாதேசுவரர்; அம்பிகை:வேயுறுதோளியம்மை.

**வரலாறு:** திருநின்றியூரைத் தரிசித்த திருநாவலூரர் அவ்வூரை விட்டுப் புறப்பட்டு, அருகில் உள்ள திருநீடூரைப் பணியாமல் செல்லும்பொழுதில், இடையிலே உணர்வு பெற்று இப்பதிகத்தை ஓதித் திருநீடூர் வந்து பணிந்தார் [**பெரிய புராணம்,** ஏயர்கோன், 150–152.]

---

## 10. திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும்

### பண்: காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மின்னுமா மேகங்கள் பொழிந்திழிந் தருவி
வெடிபடக் கரையொடுந் திரைகொணர்ந் தெற்றும்
அன்னமாங் காவிரி அகன்கரை உறைவார்
அடியிணை தொழுதெழும் அன்பராம் அடியார்
சொன்னவா றறிவார் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
என்னைநான் மறக்குமா றெம்பெரு மானை
என்னுடம் படும்பிணி இடர்கெடுத் தானை. 1

---

1. வெடிபட – துள்ள. **அன்னம் ஆம் – அன்னங்கள்** ஆக்கத்தைப் பெறும்; சோற்றை விளைவிக்கும் எனலுமாம். சொன்னவாறறிவார்: தல்த்துப் பெருமான் திருநாமம். செடியனேன் – கெட்டவன். நான் மறக்குமாறு என்னை. உடம்பு அடும் – உடலை வருத்தும்.

கூடுமா றுள்ளன கூடியுங் கோத்துங்
　　கொய்புன* ஏனலோ டைவனஞ் சிதறி
மாடுமா கோங்கமே மருதமே பொருது
　　மலையெனக் குலைகளை மறிக்குமா றுந்தி
ஓடுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
　　குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
பாடுமா றறிகிலேன் எம்பெரு மானைப்
　　பழவினை உள்ளன பற்றறுத் தானை. 2

கொல்லுமால் யானையின் கொம்பொடு வம்பார்
　　கொழுங்கனிச் செழும்பயன் கொண்டுகூட் டெய்திப்
புல்கியுந் தாழ்ந்தும் போந்து தவஞ்செய்யும்
　　போகரும் யோகரும் புலரிவாய் மூழ்கச்
செல்லுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
　　குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
சொல்லுமா றறிகிலேன் எம்பெரு மானைத்
　　தொடர்ந்தடுங் கடும்பிணித் தொடர்வறுத் தானை. 3

பொறியுமா சந்தனத் துண்டமோ டகிலும்
　　பொழிந்திழிந் தருவிகள் புன்புலங் கவரக்
கறியுமா மிளகொடு கதலியும் உந்திக்
　　கடலுற விளைப்பதே கருதித்தன் கைபோய்

---

2. கொய்புன ஏனலோடு – புனத்திலே கொய்யப்படும் தினையோடு. ஐவனம் – மலைநெல். மாடு – பக்கத்தில். குலைகளை – கரைகளை. * 'கொய்புனல்' என்றும் பாடம்.

3. வம்பு-வாசனை. புலரிவாய்-விடியற்காலையில். போகரும் யோகரும் –இல்லறத்தினரும், துறவறத்தினரும்.

4. கறியும் – சிறுமிளகும். மாமிளகு – பெரிய மிளகு. கை போய்-கரைகளிடத்தே போய். எறியும்-மோதும். ஆசு–பற்று.

எறியுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
அறியுமா றறிகிலேன் எம்பெரு மானை
அருவினை உள்ளன ஆசறுத் தானை. 4

பொழிந்திழி மும்மதக் களிற்றின மருப்பும்
பொன்மலர் வேங்கையின் நன்மலர் உந்தி
இழிந்திழிந் தருவிகள் கடும்புனல் ஈண்டி
எண்டிசை யோர்களும் ஆடவந் திங்கே
சுழிந்திழி காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
ஒழிந்திலேன் பிதற்றுமா றெம்பெரு மானை
உற்றநோய் இற்றையே உறவொழித் தானை. 5

புகழுமா சந்தனத் துண்டமோ டகிலும்
பொன்மணி வரன்றியும் நன்மலர் உந்தி
அகழுமா அருங்கரை வளம்படப் பெருகி
ஆடுவார் பாவந்தீர்த் தஞ்சனம் அலம்பித்
திகழுமா காவிரித் துருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
இகழுமா றறிகிலேன் எம்பெரு மானை
இழித்தநோய் இம்மையே ஒழிக்கவல் லானை. 6

வரையின்மாங் கனியொடு வாழையின் கனியும்
வருடியும் வணக்கியும் மராமரம் பொருது
கரையுமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க்
காம்பீலி சுமந்தொளிர் நித்திலங் கைபோய்

---

5. பொன்மலர் வேங்கை – பொன்னைப்போல மலர்கின்ற வேங்கை. கடும்புனல் – வேகமுள்ள நீர்.

6. வரன்றியும் – அரித்தும். அஞ்சனம் அலம்பி – மடவார் கண்களில் தீட்டிய மையைக் கழுவி.

விரையுமா காவிரித் திருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
உரையுமா றறிகிலேன் எம்பெரு மானை
உலகறி பழவினை அறவொழித் தானை. 7

ஊருமா தேசமே மனம்உகந் துள்ளிப்
புள்ளினம் பலபடிந் தொண்கரை உகளக்
காருமா கருங்கடல் காண்பதே கருத்தாய்க்
கவரிமா மயிர்சுமந் தொண்பளிங் கிடறித்
தேருமா காவிரித் திருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
ஆருமா றறிகிலேன் எம்பெரு மானை
அம்மைநோய் இம்மையே ஆசறுத் தானை. 8

புலங்களை வளம்படப் போக்கறப் பெருகிப்
பொன்களே சுமந்தெங்கும் பூசல்செய் தார்ப்ப
இலங்குமார் முத்தினோ டிணமணி இடறி
இருகரைப் பெருமரம் பீழ்ந்துகொண் டெற்றிக்
கலங்குமா காவிரித் திருத்தியார் வேள்விக்
குடியுளார் அடிகளைச் செடியனேன் நாயேன்
விலங்குமா றறிகிலேன் எம்பெரு மானை
மேலைநோய் இம்மையே வீடுவித் தானை. 9

---

7. வருடியும் – மெல்லத் தடவியும். வணக்கியும் – வளையச் செய்தும். கரையும்–ஒலிக்கும். காம்பீலி: காம்பு பீலி என்பதன் விகாரம்; காம்பையுடைய மயிற்பீலி.

8. உகள – துள்ள. காரும் – கருமை நிறம்பெற்ற.

9. புலங்களை–வயல்களை. போக்கு அற–குற்றம் நீங்கவும். புலங்கள் வளம்படவும் மக்கள் குற்றம் நீங்கவும் பெருகும் என்க. பொன்களே சுமந்து: பொன்னி என்னும் பெயர்ப் பொருளைக் குறிப்பித்தபடி. பூசல்செய்து – ஆரவாரம் செய்து. பீழ்ந்து – பிளந்து. விலங்குமாறு–விட்டுப் போகுமாறு.

*மங்கையோர் கூறுகந் தேறுகந் தேறி*
*மாறலார் திரிபுரம் நீறெழச் செற்ற*
*அங்கையான் கழலடி அன்றிமற் றறியான்*
*அடியவர்க் கடியவன் தொழுவனா ரூரன்*
*கங்கையார் காவிரித் துருத்தியார் வேள்விக்*
*குடியுளார் அடிகளைச் சேர்த்திய பாடல்*
*தங்கையால் தொழுதுதம் நாவின்மேற் கொள்வார்*
*தவநெறி சென்றம ருலகம்ஆள் பவரே.* 10

திருச்சிற்றம்பலம்

**திருத்துருத்தி:** *சுவாமி: முத்தாவதேசுரர்:*
*அம்பிகை: அமிர்தமுகிழம்பிகை.*

**திருவேள்விக்குடி:** *சுவாமி: கலியாணசுந்தரர்;*
*அம்பிகை: பரிமளசுகந்தநாயகி.*

**வரலாறு:** *திருத்துருத்தியை அடைந்த சுந்தர மூர்த்தி சுவாமிகள், தம் திருமேனியிற் கண்ட பிணியைப் போக்கியருள வேண்டுமென்று தொழுது வணங்க, இறைவர், "வடகுளத்தே குளிப்பாயாக" என்று அருள் செய்ய, அப்படியே அத்தீர்த் தத்தில் மூழ்கினார்; மூழ்கி எழுந்தபோது பிணி நீங்கிப் பண் டைத் திருமேனி பெற்றுத் திருக்கோயிலை வந்தடைந்து இத் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.* (பெரிய புராணம், ஏயர்கோன், *297-301.*)

---

*10. மாறலார் – மாறுதலையுடைய பகைவர்; மாறு அலார் – போரில் பகைவர்களுடைய எனலும் ஆம். தொழுவன்–தொழும் தொழில் உடையவன்.*

## மூப்பதும் இல்லை — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

மூப்பதும் இல்லை பிறப்பதும் இல்லை இறப்பதில்லை
சேர்ப்பது காட்டகத் தூரினு மாகச்சிந் திக்கினல்லால்
காப்பது வேள்விக் குடிதண் டுருத்திஎங் கோன் அரைமேல்
ஆர்ப்பது நாகம் அறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 1

கட்டக்காட்டில்நடம் ஆடுவரியாவர்க்கும்காட்சியொண்ணார்
சுட்டவெண் ணீறணிந் தாடுவர் பாடுவர் தூயநெய்யால்
வட்டக்குண் டத்தில் எரிவளர்த் தோம்பி மறைபயில்வார்
அட்டக்கொண் டுண்ப தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே.

பேருமோர் ஆயிரம் பேருடை யார்பெண்ணோ டாணும்அல்லர்
ஊருமதொற்றியூர் மற்றையூர் பெற்றவா நாம்அறியோம்
காருங் கருங்கடல் நஞ்சமு துண்டுகண் டங்கறுத்தார்க்
காரம்பாம் பாவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 3

ஏனக்கொம் பும்மிள ஆமையும் பூண்டங்கோர் ஏறும்ஏறிக்
கானக்காட் டிற்றொண்டர் கண்டன சொல்லியுங் காமுறவே
மானைத்தோல் ஒன்றை உடுத்துப் புலித்தோல் பியற்குமிட்டு
யானைத்தோல் போர்ப்பதறிந்தோமேல் நாமிவர்க்காட்படோமே.

ஊட்டிக்கொண் டுண்பதோ ரூணில ரூரிடு பிச்சைஅல்லால்
பூட்டிக்கொண் டேற்றினை ஏறுவர் ஏறியோர் பூதந்தம்பால்
பாட்டிக்கொண் டுண்பவர் பாழிதொ றும்பல பாம்புபற்றி
ஆட்டிக்கொண் டுண்ப தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே

---

1. ஆர்ப்பது--இறுக்கிக் கட்டுவது.
2. அட்டக்கொண்டு—பிச்சையிட அதனைக் கொண்டு.
4. பியற்கு—பின்பக்கத்தில்; பியல்—பிடரி.
5. பிச்சை அல்லால் ஊண் இலர். பாட்டிக்கொண்டு — பாடச் செய்துகொண்டு. பாழி-குகை.

குறவனார் தம்மகள் தம்மக னார்மண வாட்டிகொல்லை
மறவனா ராயங்கோர் பன்றிப்பின் போவது மாயங்கண்டீர்
இறைவனார் ஆதியார் சோதிய ராயங்கோர் சோர்வுபடா
அறவனார் ஆவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 6

பித்தரை ஒத்தொரு பெற்றியர் நற்றவை என்னைப்பெற்ற
முற்றவை தம்மனை தந்தைக்குந் தவ்வைக்குந் தம்பிரானார்
செத்தவர் தந்தலை யிற்பலி கொள்வதே செல்வமாகில்
அத்தவம் ஆவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 7

உம்பரான் ஊழியான் ஆழியான் ஓங்கி மலர்உறைவான்
தம்பரம் அல்லவர் சிந்திப் பவர்தடு மாற்றறுப்பார்
எம்பரம் அல்லவர் என்நெஞ்சத் துள்ளும் இருப்பதாகில்
அம்பரம் ஆவ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 8

இந்திர னுக்கும் இராவண னுக்கும் அருள்புரிந்தார்
மந்திரம் ஓதுவர் மாமறை பாடுவர் மான்மறியர்
சிந்துரக் கண்ணனும் நான்முக னும்முட னாய்த்தனியே
அந்தரஞ் செல்வ தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே. 9

கூடலர் மன்னன் குலநாவ லூர்க்கோன் நலத்தமிழைப்
பாடவல் லபர மன்னடி யார்க்கடி மைவழுவா
நாடவல் லதொண்டன் ஆரூரன் ஆட்படு மாறுசொல்லிப்
பாடவல் லார்பர லோகத் திருப்பது பண்டமன்றே. 10

திருச்சிற்றம்பலம்

---

6. குறவர் மகள் சிவபிரானுடைய குமாரராகிய முருக வேளுக்கு மனைவி.

7. நற்றவை–நல்ல அன்னை. முற்றவை–பாட்டி. தவ்வை–தாய்.

9. சிந்துரக் கண்ணன்–திருமால்.

# 11. திருஎதிர்கொள்பாடி—பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

மத்தயானை ஏறிமன்னர் சூழ வருவீர்காள்
செத்தபோதில் ஆரும்இல்லை சிந்தையுள் வைம்மின்கள்
வைத்த உள்ளம் மாற்றவேண்டா வம்மின் மனத்தீரே
அத்தர் கோயில் எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 1

தோற்றம்உண்டேல் மரணம்உண்டு துயரம் மனைவாழ்க்கை
மாற்றம்உண்டேல் வஞ்சம்உண்டு நெஞ்ச மனத்தீரே
நீற்றர்ஏற்றர் நீலகண்டர் நிறைபுனல் நீள்சடைமேல்
ஏற்றர்கோயில் எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 2

செடிகொளாக்கை சென்றுசென்றுதேய்ந் தொல்லை வீழாமுன்
வடிகொள் கண்ணார் வஞ்சனையுட் பட்டு மயங்காதே
கொடிகொள்ஏற்றர் வெள்ளைநீற்றர் கோவண ஆடையுடை
அடிகள்கோயில் எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 3

வாழ்வர்கண்டீர் நம்முள்ஐவர் வஞ்ச மனத்தீரே
யாவராலும் இகழப்பட்டிங் கல்ல லில்வீழாதே
மூவராயும் இருவராயும் முதல்வன் அவனேயாம்
தேவர்கோயில் எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 4

அரித்துநம்மேல் ஐவர்வந்திங் காறலைப் பான்பொருட்டால்
சிரித்தபல்வாய் வெண்டலைபோய் ஊர்ப்புறஞ் சேராமுன்
வரிக்கொடுத்திவ் வாள்அரக்கர் வஞ்ச மதில்மூன்றும்
எரித்தவில்லி எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 5

---

1. ஆரும் இல்லை–துணையாவார் யாரும் இல்லை.
2. தோற்றம்–பிறவி. மாற்றம்–மாறுபாடு; சொல்லுமாம்.
3. செடி–நாற்றம். ஒல்லை–விரைவில். வடி–கூர்மை.
5. அரித்து–பகைத்து. ஊர்ப்புறம்–மயானம்.

பொய்யர்கண்டீர் வாழ்க்கையாளர் பொத்தடைப் பான்பொருட் [டால்
மையல்கொண்டீர் எம்மோடாடி நீரும் மனத்தீரே
ஐயவேண்டா இம்மைஎத்த அம்மை நமக்கருளும்
ஐயர்கோயில் எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 6

கூசம்நீக்கிக் குற்றம்நீக்கிச் செற்ற மனம்நீக்கி
வாசம்மல்கு குழலினர்கள் வஞ்ச மனைவாழ்க்கை
ஆசைநீக்கி அன்புசேர்த்தி என்பணிந் தேறேறும்
ஈசர்கோயில் எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 7

இன்பம்உண்டேல் துன்பம்உண்டு ஏழை மனைவாழ்க்கை
முன்புசொன்ன மோழைமையான் முட்டை மனத்தீரே
அன்பரல்லால் அணிகொள்கொன்றை அடிக ளடிசேரார்
என்பர்கோயில் எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 8

தந்தையாரும் தவ்வையாரும் எட்டனைச் சார்வாகார்
வந்துநம்மோ டுள்ளளாவி வான நெறிகாட்டும்
சிந்தையீரே நெஞ்சினீரே திகழ்ம தியஞ்சூடும்
எந்தைகோயில் எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 9

குருதிசோர ஆனையின்தோல் கொண்ட குழற்சடையன்
மருதுகீறி ஊடுபோன மாலய னுமறியாச்
சுருதியார்க்குஞ் சொல்லவொண்ணச் சோதிஎம் ஆதியான்
கருதுகோயில் எதிர்கொள்பாடி என்ப தடைவோமே. 10

---

6. பொத்து அடைப்பான் பொருட்டால் – வயிற்றுக்குழியை நிரப்பும் பொருட்டு.

7. கூசம்–கூச்சம்.

8. மோழைமை–அறியாமை. முட்டை மனம் – பாழ்பட்டமனம்; அறியாமையையுடைய மனம்.

9. தவ்வையார்–தாயார். எட்டனை–எள் தனை – எள்ளளவேனும்.

முத்துநீற்றுப் பவளமேனிச் செஞ்சடை யான்உறையும்
பத்தர்பந்தத் தெதிர்கொள்பாடிப் பரமனை யேபணியச்
சித்தம்வைத்ததொண்டர்தொண்டன்சடையனவன்சிறுவன்
பத்தன்ஊரன் பாடல்வல்லார் பாதம் பணிவாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அயிராவத நாதர்; அம்பிகை: மலர்க்குழல்நாயகி.

---

## 12. திருக்கருப்பறியலூர் — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

சிம்மாந்து சிம்புளித்துச் சிந்தையினில்
வைத்துகந்து திறம்பா வண்ணம்
கைம்மாவின் உரிவைபோர்த் துமைவெருவக்
கண்டானைக் கருப்ப றியலூர்க்
கொய்ம்மாவின் மலர்ச்சோலைக் குயில்பாட
மயில்ஆடுங் கொகுடிக் கோயில்
எம்மானை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 1

நீற்றாரும் மேனியராய் நினைவார்தம்
உள்ளத்தே நிறைந்து தோன்றும்
காற்றானைத் தீயானைக் கதிரானை
மதியானைக் கருப்ப றியலூர்க்

---

11. சடையன்: சுந்தரமூர்த்தி சுவாமிகள் தந்தையார்.

1. சிம்மாந்து – செம்மாந்து; பெருமிதங்கொண்டு. சிம்புளித்து – கண்ணை மூடி. கொகுடி – ஒருவகை முல்லை.

கூற்றானைக் கூற்றுதைத்துக் கோல்வளையாள்
அவளோடுங் கொகுடிக் கோயில்
ஏற்றானை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 2

முட்டாமே நாள்தோறும் நீர்மூழ்கிப்
பூப்பறித்து மூன்று போதும்
கட்டார்ந்த இண்டைகொண் டடிச்சேர்த்தும்
அந்தணர்தங் கருப்ப றியலூர்க்
கொட்டாட்டுப் பாட்டாகி நின்றானைக்
குழகனைக் கொகுடிக் கோயில்
எட்டான மூர்த்தியை நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 3

விருந்தாய சொன்மாலை கொண்டேத்தி
வினைபோக வேலி தோறும்
கருந்தாள வாழைமேற் செங்கனிகள்
தேன்சொரியும் கருப்ப றியலூர்க்
குருந்தாய முள்எயிற்றுக் கோல்வளையாள்
அவளோடுங் கொகுடிக் கோயில்
இருந்தானை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 4

பொடியேறு திருமேனிப் பெருமானைப்
பொங்கரவக் கச்சை யானைக்
கடிநாறும் பூம்பொய்கைக் கயல்வாளை
குதிகொள்ளும் கருப்ப றியலூர்க்

---

2. கோல்வளையாள் – தலத்து அம்பிகை.

3. முட்டாமே–தடைப்படாமல். இண்டை–ஒருவகைமாலை.

4. விருந்து – புதுமை கருந்தாள – கரிய அடிமரத்தை உடைய. குருந்து – மயிலிறகின் அடிக்குருத்து.

கொடியேறி வண்டினமுந் தண்டேனும்
பண்செய்யுங் கொகுடிக் கோயில்
அடியேறு கழலானை நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 5

பொய்யாத வாய்மையாற் பொடிப்பூசிப்
போற்றிசைத்துப் பூசை செய்து
கையினால் எரிஓம்பி மறைவளர்க்கும்
அந்தணர்தங் கருப்ப றியலூர்க்
கொய்யுலாம் மலர்ச்சோலைக் குயில்கூவ
மயில்ஆலுங் கொகுடிக் கோயில்
ஐயனைஎன் மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 6

செடிகொள்நோய் உள்ளனவுந் தீவினையுந்
தீர்ந்தொழியச் சிந்தை செய்ம்மின்
கடிகொள்பூந் தடமண்டிக் கருமேதி
கண்படுக்குங் கருப்ப றியலூர்க்
கொடிகொள்பூ நுண்இடையாள் கோல்வளையாள்
அவளோடுங் கொகுடிக் கோயில்
அடிகளைஎன் மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 7

பறையாத வல்வினைகள் பறைந்தொழியப்
பண்ணாரும் பாடி ஆடிக்
கறைஆர்ந்த கண்டத்தன் எண்தோளன்
முக்கண்ணன் கருப்ப றியலூர்க்

---

6. வாய்மையால் - மந்திரத்தைக் கூறுவதோடு. கொய்தல் விரவிய மலரையுடைய சோலை.

7. செடி- தீமை; வருத்தம்.

குறையாத மறைநாவர் குற்றேவல்
ஒழியாத கொகுடிக் கோயில்
உறைவானை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 8

சங்கேந்து கையானுந் தாமரையின்
மேலானுந் தன்மை காணாக்
கங்கார்ந்த வார்சடைகள் உடையானை
விடையானைக் கருப்ப றியலூர்க்
கொங்கார்ந்த பொழிற்சோலை சூழ்கனிகள்
பலவுதிர்க்குங் கொகுடிக் கோயில்
எங்கோனை மனத்தினால் நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 9

பண்டாழின் இசைமுரலப் பன்னாளும்
பாவித்துப் பாடி ஆடிக்
கண்டார்தங் கண்குளிருங் களிக்கமுகம்
பூஞ்சோலைக் கருப்ப றியலூர்க்
குண்டாடுஞ் சமணருஞ் சாக்கியரும்
புறங்கூறுங் கொகுடிக் கோயில்
எண்டோளெம் பெருமானை நினைந்தபோ
தவர்நமக் கினிய வாறே. 10

கலைமலிந்த தென்புலவர் கற்றோர்தம்
மிடர்தீர்க்குங் கருப்ப றியலூர்க்
குலைமலிந்த கோட்டெங்கு மட்டொழுகும்
பூஞ்சோலைக் கொகுடிக் கோயில்

---

8. பறையாத – தேயாத.

9. கங்கு – கங்கை; ஓரமுமாம்.

10. பண் தாழ் இன்இசை – பண் தங்கிய இனிய இசை. குண்டு ஆடும் – கீழ்மையிலே உழலும்.

இலைமலிந்த மழுவாளை மனத்தினால்
அன்புசெய் தின்பம் எய்தி
மலைமலிந்த தோள்ஊரன் வனப்பகையப்
பன்னுரைத்த வண்டமிழ்களே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: குற்றம் பொறுத்த ஈசுவரர்
அம்பிகை: கோல்வளை நாயகி

---

## 13. திருவாழ்கொளிபுத்தூர் — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

தலைக்க லன்தலை மேல்தரித் தானைத்
தன்னைஎன் னைநினைக் கத்தரு வானைக்
கொலைக்கையா னைஉரி போர்த்துகந் தானைக்
கூற்றுதைத் தகுரை சேர்கழ லானை
அலைத்தசெங் கண்விடை ஏறவல் லானை
ஆணை யால்அடி யேன்அடி நாயேன்
மலைத்தசெந் நெல்வயல் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 1

---

11. தென் புலவர் – தமிழ்ப்புலவர். வண்தமிழ்களே என்றது, திருவருளை வியந்து, வண்டமிழ் இருந்தவாறென்னே என்னும் குறிப்பை உடையது.

1. தலைக்கலன் – தலையாகிய ஆபரணத்தை. தன்னை நினைக்க என்னைத் தருவானை. குரைசேர்–ஒலி சேர்ந்த. என் நினைக்கேன் – எதை நினைப்பேன். மாணிக்கம்: மாணிக்க வண்ணர் என்பது இத்தல மூர்த்தியின் திருநாமம்.

படைக்கட் சூலம் பயிலவல் லானைப்
பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானைக்
கடைக்கட்பிச் சைக்கிச்சை காதலித் தானைக்
காமன்ஆ கந்தனைக் கட்டழித் தானைச்
சடைக்கட் கங்கையைத் தாழவைத் தானைத்
தண்ணீர்மண் ணிக்கரை யானைத்தக் கானை
மடைக்கண்நீ லம்அலர் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 2

வெந்த நீறுமெய் பூசவல் லானை
வேத மால்விடை ஏறவல் லானை
அந்தம் ஆதிஅறி தற்கரி யானை
ஆறலைத் தசடை யானைஅம் மானைச்
சிந்தை யென்தடு மாற்றறுப் பானைத்
தேவ தேவன்என் சொல்முனி யாதே
வந்தென் உள் ளம்புகும் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 3

தடங்கை யால்மலர் தூய்த்தொழு வாரைத்
தன்னடிக் கேசெல்லு மாறுவல் லானைப்
படங்கொள்நா கம்அரை ஆர்த்துகந் தானைப்
பல்லின்வெள் ளைத்தலை ஊணுடை யானை
நடுங்கஆ னைஉரி போர்த்துகந் தானை
நஞ்சம் உண்டு கண் டங்கறுத் தானை
மடந்தை பாகனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 4

---

2. பாவி – பரவி. கடைக்கண் – வாயிலில். தாழ – தங்க. மண்ணி–ஓர் ஆறு.

3. வேத விடை, மால்விடை இரண்டையும் ஊர்பவனை.

4. வெள்ளைத் தலையில் இரந்து உண்ணும் உணவை உடையவனை.

வளைக்கைமுன் கைமலை மங்கை மணாளன்
மாரனார்உடல் நீறெழச் செற்றுத்
துளைத்தஅங் கத்தொடு தூமலர்க் கொன்றை
தோலும்நூ லுந்துதைந் தவரை மார்பன்
திளைக்குந் தெவ்வர் திரிபுரம் மூன்றும்
அவுணர் பெண்டிரும் மக்களும் வேவ
வளைத்த வில்லியை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 5

திருவின் நாயகன் ஆகிய மாலுக்
கருள்கள் செய்திடும் தேவர் பிரானை
உருவி னானைஒன் றுவறி வொண்ணா
மூர்த்தி யைவிச யற்கருள் செய்வான்
செருவில் ஏந்திஓர் கேழற்பின் சென்று
செங்கண் வேடனாய் என்னொடும் வந்து
மருவி னான்றனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 6

எந்தையை எந்தை தந்தை பிரானை
ஏதமாய இடர் தீர்க்கவல் லானை
முந்தி யாகிய மூவரின் மிக்க
மூர்த்தி யைமுதல் காண்பரி யானைக்

---

5. மாரனார்: பன்மை, இழிவுக்குறிப்பு. வரைமார்பன் – தாழ்வரையைப் போன்ற திருமார்பை உடையவன். தெவ்வர் – பகைவர். திரிபுரம்–வானிலே திரிந்த புரங்கள். அவுணருடைய பெண்டிரும் மக்களும் வேவ, அவுணராகிய மூவரும் வெந்திலர்.

6. செரு வில்–போருக்குரிய வில்லை. கேழல்–பன்றி.

7. முந்தி – முதல். கந்தின் மிக்க – கட்டுத்தறியைவிட அளவிலே மிக்க.

கந்தின் மிக்ககரி யின்மருப் போடு
காரகில்கவ ரிம்மயிர் மண்ணி
வந்து வந்திழி வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 7

தேனை ஆடிய கொன்றையி னானைத்
தேவர் கைதொழுந் தேவர் பிரானை
ஊனம் ஆயின தீர்க்கவல் லானை
ஒற்றை ஏற்றனை நெற்றிக்கண் ணானைக்
கான ஆனையின் கொம்பினைப் பீழ்ந்த
கள்ளப் பிள்ளைக்குங் காண்பரி தாய
வான நாடனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 8

காளை யாகி வரைஎடுத் தான்றன்
கைகள் இற்றவன் மொய்தலை எல்லாம்
மூளை போத ஒருவிரல் வைத்த
மூர்த்தி யைமுதல் காண்பரி யானைப்
பாளை தெங்கு பழம்விழ மண்டிச்
செங்கண் மேதிகள் சேடெறிந் தெங்கும்
வாளை பாய்வயல் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 9

திருந்த நான்மறை பாடவல் லானைத்
தேவர்க் குந்தெரி தற்கரி யானைப்
பொருந்த மால்விடை ஏறவல் லானைப்
பூதிப் பைபுலித் தோலுடை யானை

8. கான ஆனையின் கொம்பினைப் பீழ்ந்த – குவலயாபீட மென்னும் காட்டுயானையின் கொம்பைப் பிடுங்கிய. கள்ளப் பிள்ளை–கண்ணன்.

9. சேடு-சேறு.

இருந்துண் தேரரும் நின்றுணும்* சமணும்
ஏச நின்றவன் ஆருயிர்க் கெல்லாம்
மருந்த னுன்றனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 10

மெய்யனை மெய்யின் நின்றுணர் வானை
மெய்யிலாதவர் தங்களுக் கெல்லாம்
பொய்ய னைப்புரம் மூன்றெரித் தானைப்
புனித னைப்புலித் தோ லுடை யானைச்
செய்ய னைவெளி யதிரு நீற்றில்
திகழு மேனியன் மான்மறி ஏந்தும்
மைகொள் கண்டனை வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனே. 11

வளங்கி ளர்பொழில் வாழ்கொளி புத்தூர்
மாணிக்கத் தைமறந் தென்நினைக் கேனென்
றுளங்கு ளிர்தமிழ் ஊரன்வன் றொண்டன்
சடையன் காதலன் வனப்பகை அப்பன்
நலங்கி ளர்வயல் நாவலர் வேந்தன்
நங்கை சிங்கடி தந்தை பயந்த
பலங்கி ளர்தமிழ் பாடவல் லார்மேற்
பறையு மாஞ்செய்த பாவங்க டாமே. 12

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மாணிக்கவண்ணர்

அம்பிகை: வண்டமர் பூங்குழலம்மை

**வரலாறு:** சுந்தரமூர்த்தி சுவாமிகள் மண்ணிப் படிக்கரையைத் தரிசித்துவிட்டுச் செல்லுகையில் அருகில் உள்ள திருவாழ்கொளிபுத்தூருக்குப் போகாமல் செல்லும்போது, இடையே நினைவு வந்து மீண்டு, இப்பதிகம் பாடி அத்தலத்துக்கு வந்து சிவபெருமானைத் தரிசித்தார். (பெரியபுராணம், ஏயர்கோன், *118–119*.) * 'நின்றுண்' என்றும் பாடம்.

---

*10*. தேரர்–பௌத்தர்.
*12*. நாவலர்–நாவலூரில் உள்ளார். பறையும்–தேயும்.

## 14. திருப்பழமண்ணிப்படிக்கரை — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

முன்னவன் எங்கள்பிரான் முதல் காண்பரி தாயபிரான்
சென்னியின் எங்கள்பிரான் திரு நீலமிடற் றெம்பிரான்
மன்னிய எங்கள்பிரான் மறை நான்குங்கல் லால்நிழற்கீழ்ப்
பன்னிய எங்கள்பிரான் பழ மண்ணிப் படிக்கரையே. 1

அண்டக பாலஞ்சென்னி அடி மேல்அலர் இட்டுநல்ல
தொண்டங் கடிபரவித் தொழு தேத்திநின் றுடும்இடம்
வெண்டிங்கள் வெண்மழுவன் விரை யார்கதிர் மூவிலைய
பண்டங்கன் மேயவிடம் பழ மண்ணிப் படிக்கரையே. 2

ஆடுமின் அன்புடையீர் அடிக் காட்பட்ட தூளிகொண்டு
சூடுமின் தொண்டருள்ளீர் உம ரோடெமர் சூழவந்து
வாடும்இவ் வாழ்க்கைதன்னை வருந் தாமல் திருந்தச்சென்று
பாடுமின் பத்தருள்ளீர் பழ மண்ணிப் படிக்கரையே. 3

அடுதலை யேபுரிந்தான் அவை அந்தர மூவெயிலும்
கெடுதலை யேபுரிந்தான் கிள ருஞ்சிலை நாணியிற்கோல்
நடுதலை* யேபுரிந்தான் நரி† கான்றிட்ட எச்சில்வெள்ளைப்
படுதலை யேபுரிந்தான் பழ மண்ணிப் படிக்கரையே. 4

உங்கைக ளாற்கூப்பி உகந் தேத்தித் தொழுமின்தொண்டீர்
மங்கையொர் கூறுடையான் வா னோர்முத லாயபிரான்
அங்கையில் வெண்மழுவன் அலை யார்கதிர் மூவிலைய
பங்கய பாதனிடம் பழ மண்ணிப் படிக்கரையே. 5

---

2. தொண்டு – தொண்டர்.

4. கோல் – அம்பு. * 'அடுதலை' என்றும் பாடம். நரியும் உண்ண இயலாதென்று ஒதுக்கிய தசையொழிந்த வெண்டலையை. அரி என்று பிரித்தலுமாம்.

செடிபடத் தீவிளைத்தான் சிலை யார்மதிற் செம்புனஞ்சேர்
கொடிபடு மூரிவெள்ளை எரு தேற்றையும் ஏறக்கொண்டான்
கடியவன் காலன்தன்னைக் கறுத் தான்கழற் செம்பவளப்
படியவன் பாசுபதன் பழ மண்ணிப் படிக்கரையே. 6

கடுத்தவன் தேர்கொண்டோடிக் கயி லாயநன் மாமலையை
எடுத்தவன் ஈரைந்துவாய் அரக் கன்முடி பத்தலற
விடுத்தவன் கைநரம்பால் வேத கீதங்கள் பாடலுறப்
படுத்தவன் பால்வெண்ணீற்றன் பழ மண்ணிப் படிக்கரையே. 7

திரிவன மும்மதிலும் மெரித் தான்இமை யோர்பெருமான்
அரியவன் அட்டபுட்பம் அவை கொண்டடி போற்றிநல்ல
கரியவன் நான்முகனும் அடி யும்முடி காண்பரிய
பரியவன் பாசுபதன் பழ மண்ணிப் படிக்கரையே. 8

வெற்றரைக் கற்றமணும் விரை யாதுவிண் டால முண்ணும்
துற்றரைத் துற்றறுப்பான் துன்ன ஆடைத் தொழிலுடையீர்
பெற்றரைப் பித்தரென்று கரு தேன்மின் படிக்கரையுள்
பற்றரைப் பற்றிநின்று பழி பாவங்கள் தீர்மின்களே. 9

பல்லுயிர் வாழுந்தெண்ணீர்ப் பழ மண்ணிப் படிக்கரையை
அல்லியந் தாமரைத்தார் ஆ ரூரன் உரைத்ததமிழ்
சொல்லுதல் கேட்டல் வல்லாரவர்க் குந்தமர்க் குங்கிளைக்கும்
எல்லியும் நன்பகலும்* இடர் கூருதல் இல்லையன்றே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: நீலகண்டர்; அம்பிகை: அமிர்தகரவல்லி.

---

6. செடிபட - பரவ. கொடிபடும் - கொடியிலே அமைந்த. மூரி-வலிமை. கறுத்தான் - கோபித்தான். படி - உருவம்.

7. கடுத்த - வேகமாகச் சென்ற. பாடலுற விடுத்தவன்.

9. வெறு அரை - ஆடையற்ற இடையையுடைய. கன்று அமணும் - கன்றைப்போல அனுபவம் அற்ற அமணர் கூட்டம். துற்றரை - உணவாக உள்ளவரை. துன்ன ஆடை - தையலை யுடைய உடை. பெற்றரை - இடபவாகனம் உடையவரை;

10. தாமரைத் தார் அந்தணருக்குரியது. எல்லி - இரவு.

* 'நண்பகலும்' என்றும் பாடம்.

## 15. திருக்கானாட்டுமுள்ளூர்
## பண் : கொல்லிக் கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

வள்வாய மதிமிளிரும் வளர்சடையி னானை
மறையவனை வாய்மொழியை வானவர்தங் கோனைப்
புள்வாயைக் கீண்டுலகம் விழுங்கிஉமிழ்ந் தானைப்
பொன்னிறத்தின் முப்புரிநூல் நான்முகத்தி னானை
முள்வாய மடல்தழுவி முடத்தாழை ஈன்று
மொட்டலர்ந்து விரைநாறும் முருகுவிரி பொழில்சூழ்
கள்வாய கருங்குவளை கண்வளருங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 1

ஒருமேக முகிலாகி ஒத்துலகந் தானாய்
ஊர்வனவும் நிற்பனவும் ஊழிகளுந் தானாய்ப்
பொருமேவு கடலாகிப் பூதங்கள் ஐந்தாய்ப்
புனைந்தவனைப் புண்ணியனைப் புரிசடையி னானைத்
திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த
திருத்தக்க அந்தணர்கள் ஓதுநகர் எங்கும்
கருமேதி செந்தாம ரைமேயுங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 2

இரும்புயர்ந்த மூவிலைய சூலத்தி னானை
இறைவனை மறையவனை எண்குணத்தி னானைச்
சுரும்புயர்ந்த கொன்றையொடு தூமதியஞ் சூடும்
சடையானை விடையானைச் சோதியெனும் சுடரை

---

1. வள்வாய–கூர்மையான முனையையுடைய. மதி–இங்கே பிறை. உமிழ்ந்தானை – உமிழ்ந்த திருமாலாக இருப்பவனை.

அரும்புயர்ந்த அரவிந்தத் தணிமலர்கள் ஏறி
அன்னங்கள் விளையாடும் அகன்றுறையின் அருகே
கரும்புயர்ந்து பெருஞ்செந்நெல் நெருங்கிவிளை கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 3

பூளைபுனை கொன்றையொடு புரிசடையி னானைப்
புனலாகி அனலாகிப் பூதங்கள் ஐந்தாய்
நாளைஇன்று நெருலாய் ஆகாயம் ஆகி
ஞாயிறாய் மதியமாய் நின்றஎம் பரனைப்
பாளைபடு பைங்கமுகின் சூழலிளந் தெங்கின்
படுமதஞ்செய் கொழுந்தேறல் வாய்மடுத்துப் பருகிக்
காளைவண்டு பாடமயில் ஆலும்வளர் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 4

செருக்குவாய்ப் பைங்கண்வெள் அரவரையி னானைத்
தேவர்கள்சூ ளாமணியைச் செங்கண்விடை யானை
முருக்குவாய் மலர்ஒக்குந் திருமேனி யானை
முன்னிலையாய் முழுதுலகம் ஆயபெரு மானை
இருக்குவாய் அந்தணர்கள் எழுபிறப்புள் எங்கும்
வேள்வியிருந் திருநிதியம் வழங்குநகர் எங்கும்
கருக்குவாய்ப் பெண்ணையொடு தெங்கமலி சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 5

விடைஅரவக் கொடிஏந்தும் விண்ணவர்தம் கோனை
வெள்ளத்து மாலவனும் வேதமுத லானும்
அடியிணையுந் திருமுடியுங் காணஅரி தாய
சங்கரனைத் தத்துவனைத் தையல்மட வார்கள்

---

4. நெருநலாய்—நேற்றாகி.

5. முருக்குவாய் மலர் – முள்ளுமுருங்கைப்பூ. இருக்கு – வேதம். பெண்ணை—பனை.

உடைஅவிழக் குழல்அவிழக் கோதைகுடைந் தாடக்
குங்குமங்கள் உந்திவரும் கொள்ளிடத்தின் கரைமேல்
கடைகள்விடு வார்குவளை களைவாருங் கழனிக்
காறாட்டு மூள்ளூரிற் கண்டுதொழு தேனே. 6

அருமணியை முத்தினை ஆன்அஞ்சும் ஆடும்
அமரர்கள்தம் பெருமானை அருமறையின் பொருளைத்
திருமணியைத் தீங்கரும்பின் ஊறலிருந் தேனைத்
தெரிவரிய மாமணியைத் திகழ்தருசெம் பொன்னைக்
குருமணிகள் கொழித்திழிந்து சுழித்திழியுந் திரைவாய்க்
கோல்வளையார்குடைந்தாடுங்கொள்ளிடத்தின்கரைமேல்
கருமணிகள் போல்நீலம் மலர்கின்ற கழனிக்
காறாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 7

இழைதழுவு வெண்ணூலும் மேவுதிரு மார்பின்
ஈசன்றன் எண்டோள்கள் வீசியெரி ஆடக்
குழைதழுவு திருக்காதிற் கோளரவம் அசைத்துக்
கோவணம்கொள் குழகனைக் குளிர்சடையி னானைத்
தழைதழுவு தண்ணிறத்த செந்நெலதன் அயலே
தடந்தரள மென்கரும்பின் தாழ்கிடங்கின் அருகே
கழைதழுவித் தேன்தொடுக்குங் கழனிசூழ் பழனக்
காறாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 8

குனிவினிய கதிர்மதியம் சூடுசடை யானைக்
குண்டலஞ்சேர் காதவனை வண்டினங்கள் பாடப்
பனிஉதிருஞ் சடையானைப் பால்வெண்ணீற் றானைப்
பலஉருவுந் தன்உருவே ஆயபெரு மானைத்

---

6. விடையாகிய முழக்கத்தையுடைய கொடியைப் பிடிக்கும்; அரவம்–முழக்கம். குவளை களைவாரும் – குவளையைக்களையாக எடுத்தெறியும்.

8. கழை–மூங்கில்.

துணிவினிய தூயமொழித் தொண்டைவாய் நல்லார்
தூநீலங் கண்வளருஞ் சூழ்கிடங்கின் அருகே
கனிவினிய கதலிவனந் தழுவுபொழிற் சோலைக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 9

தேவியம்பொன் மலைக்கோமான் தன்பாவை ஆகத்
தனதுருவம் ஒருபாகஞ் சேர்த்துவித்த பெருமான்
மேவியவெந் நரகத்தில் அழுந்தாமை நமக்கு
மெய்ந்நெறியைத் தான்காட்டும் வேதமுத லானைத்
தூவிவாய் நாரையொடு குருகுபாய்ந் தார்ப்பத்
துறைக்கெண்டை மிளிர்ந்துகயல் அள்ளிவிளை யாடக்
காவிவாய் வண்டுபல பண்செய்யுங் கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே. 10

திரையினார் கடல்சூழ்ந்த தென்னிலங்கைக் கோனைச்
செற்றவனைச் செஞ்சடைமேல் வெண்மதியி னானைக்
கரையினார் புனல்தழுவு* கொள்ளிடத்தின் கரைமேற்
கானாட்டு முள்ளூரிற் கண்டுகழல் தொழுது
உரையினார் மதயானை நாவலா ரூரன்
உரிமையால் உரைசெய்த ஒண்தமிழ்கள் வல்லார்
வரையினார் வகைஞாலம் ஆண்டவர்க்குந் தாம்போய்
வானவர்க்குந் தலைவராய் நிற்பரவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பதஞ்சலியீசுவரர்
அம்பிகை: கோல்வளைக்கையம்மை

---

9. குனிவு—வளைவு. துணிவு இனிய தூய மொழி – ஊடற் காலத்தும் இனிமையும் தூய்மையும் உள்ள வார்த்தை.

* 'நுரையினார் கரைதழுவு' என்றும் பாடம்.

## 16. திருப்புறம்பயம் — பண்: கொல்லி

திருச்சிற்றம்பலம்

அங்கம்ஓதிஓர் ஆறைமேற்றளி
நின்றும்போந்துவந் தின்னம்பர்த்
தங்கினோமையும் இன்னதென்றிலர்
ஈசனார்எழு நெஞ்சமே
கங்குல்ஏமங்கள் கொண்டுதேவர்கள்
ஏத்திவானவர் தாந்தொழும்
பொங்குமால்விடை ஏறிசெல்வப்
புறப்பயந்தொழப் போதுமே. 1

பதியுஞ்சுற்றமும் பெற்றமக்களும்
பண்டையாரலர் பெண்டிரும்
நிதியிலிம்மனை வாழும்வாழ்க்கையும்
நினைப்பொழிமட நெஞ்சமே
மதியஞ்சேர்சடைக் கங்கையானிடம்
மகிழும்மல்லிகை செண்பகம்
புதியபூமலர்ந் தெல்லிநாறும்
புறம்பயந்தொழப் போதுமே. 2

புறந்திரைந்து நரம்பெழுந்து
நரைத்துநீயுரை யால்தளர்ந்
தறம்புரிந்து நினைப்பதாண்மை
அரிதுகாண்இஃ தறிதியேல்

1. அங்கம் ஓதி – வேதாங்கங்களாகிய சாத்திரங்களை ஓதியவன். கங்குல் – இரவில். ஏமங்கள்–இன்பந்தரும் பொருள்களை. ஏறி – ஏறுபவன்.

2. எல்லி – இரவில்.

திறம்பியாதெழு நெஞ்சமேசிறு
காலைநாமுறு வாணியம்
புறம்பயத்துறை பூதநாதன்
புறம்பயந்தொழப் போதுமே. 3

குற்றொருவரைக் கூறைகொண்டு
கொலைகள்சூழ்ந்த களவெலாம்
செற்றொருவரைச் செய்ததீமைகள்
இம்மையேவருந் திண்ணமே
மற்றொருவரைப் பற்றிலேன்மற
வாதெழுமட நெஞ்சமே
புற்றரவுடைப் பெற்றமேறி
புறம்பயந்தொழப் போதுமே. 4

கள்ளிநீசெய்த தீமைஉள்ளன
பாவமும்பறை யும்படி
தெள்ளிதாஎழு நெஞ்சமேசெங்கண்
சேவுடைச்சிவ லோகனூர்
துள்ளிவெள்ளிள வாளைபாய்வயற்
றோன்றுதாமரைப் பூக்கள்மேல்
புள்ளிநள்ளிகள் பள்ளிகொள்ளும்
புறம்பயந்தொழப் போதுமே. 5

படையெலாம்பக டாரஆளிலும்
பௌவஞ்சூழ்ந்தர சாளிலும்
கடையெலாம்பிணைத் தேரைவால்கவ
லாதெழுமட நெஞ்சமே

---

3. திரைந்து – சுருங்கி. திறம்பியாது – திறம்பாமல். சிறு காலை நாம்உறு வாணியம் – மிக இளமையிலே நாம் பெறும் ஊதியத்தோடு கூடிய வியாபாரம். 4. குற்று – அவிழ்த்து.

5. கள்ளி – திருடி. பறையும்படி – தேயும் வண்ணம். சே – இடபம். புள்ளி நள்ளிகள்–புள்ளியை உடைய நண்டுகள்.

மடையெலாங்கழு நீர்மலர்ந்து
மருங்கெலாங்கரும் பாடத்தேன்
புடையெலாம்மணம் நாறுசோலைப்
புறம்பயந்தொழப் போதுமே. 6

முன்னைச்செய்வினை இம்மையில்வந்து
மூடும்ஆதலின் முன்னமே
என்னைநீதியக் காதெழுமட
நெஞ்சமேஎந்தை தந்தையூர்
அன்னச்சேவலோ டூடிப்பேடைகள்
கூடிச்சேரு மணிபொழில்
புன்னைக்கன்னி கழிக்கணாறும்*
புறம்பயந்தொழப் போதுமே. 7

மலமெலாம்அறும் இம்மையேமறு
மைக்கும்வல்வினை சார்கிலா
சலமெலாம்ஒழி நெஞ்சமேஎங்கள்
சங்கரன்வந்து தங்கும்ஊர்
கலமெலாங்கடல் மண்டுகாவிரி
நங்கைஆடிய கங்கைநீர்
புலமெலாம்மண்டிப் பொன்விளைக்கும்
புறம்பயந்தொழப் போதுமே. 8

---

6. படையெலாம் பகடு ஆர – சேனைகளில் எல்லாம் யானை நிரம்பும்படி. பவ்வஞ்சூழ்ந்து அரசாளிலும் - தன் நாட்டுக்குக் கடலே எல்லையாக இருக்கும்படி உலகத் தனியரசை ஆண்டாலும், கடை எலாம் பிணைத்தேரைவால் – கடைசியில் இந்தப் பதவியெல்லாம் பெண் தேரையின் வால் தேய்வது போலத் தேய்ந்துவிடும். கவலாது – கவலை அடையாமல்.

7. தியக்காது – கலங்கச் செய்யாமல். புன்னைக்கன்னி – புதிதாகப் பூத்த புன்னைமரம். * 'களக்கரும்பு' என்றும் பாடம்.

8. சலம் – தீய செயல். கலம் – கப்பல்.

பண்டரீயன செய்ததீமையும்
பாவமும்பறை யும்படி
கண்டரீயன கேட்டியேற்கவ
லாதெழுமட நெஞ்சமே
தொண்டரீயன பாடித்துள்ளிநின்
றாடிவானவர் தாந்தொழும்
புண்டரீக மலரும்பொய்கைப்
புறம்பயந்தொழப் போதுமே. 9

துஞ்சியும்பிறந் துஞ்சிறந்துந்
துயக்கறாத மயக்கிவை
அஞ்சிஊரன் திருப்புறம்பயத்
தப்பனைத்தமிழ்ச் சீரினால்
நெஞ்சினாலே புறம்பயந்தொழு
துய்துமென்று நினைத்தன
வஞ்சியாதுரை செய்யவல்லவர்*
வல்லவானுல காள்வரே.† 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: சாட்சிவரதேசுவரர்
அம்பிகை: கரும்படுசொல்லம்மை

**வரலாறு:** ஆறைமேற்றளியைத் தரிசித்துப் பின் இன்னம்பரையும் தரிசித்துக்கொண்டு, திருப்புறம்பயத்தைத் தரிசிக்கும் ஆவலோடு நம்பியாரூரர் இப்பதிகத்தைப் பாடியருளினார். (**பெரிய புராணம்,** ஏயர்கோன், *94-98.*)

---

*10.* துஞ்சியும் – இறந்துபட்டும். துயக்கு – தொடர்பு.
* 'செய்யவல்லர்'; † 'வல்லர் வானுல காளவே' என்றும் பாடம்.

## 17. திருவையாறு — பண்: காந்தார பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பரவும் பரிசொன் றறியேனான்
　　பண்டே உம்மைப் பயிலாதேன்
இரவும் பகலும் நினைந்தாலும்
　　எய்த நினைய மாட்டேன்நான்
கரவில் அருவி கமுகுண்ணத்
　　தெங்கங் குலைக்கீழ்க் கருப்பாலை
அரவந் திரைக்கா விரிக்கோட்டத்
　　தையா றுடைய அடிகளோ. 1

எங்கே போவே னாயிடினும்
　　அங்கே வந்தென் மனத்தீராய்ச்
சங்கை ஒன்றும் இன்றியே
　　தலைநாள் கடைநாள் ஒக்கவே
கங்கை சடைமேற் கரந்தானே
　　கலைமான் மறியுங் கனல்மழுவும்
தங்குந் திரைக்கா விரிக்கோட்டத்
　　தையா றுடைய அடிகளோ. 2

மருவிப் பிரிய மாட்டேனான்
　　வழிநின் றொழிந்தேன் ஒழிகிலேன்
பருவி விச்சி மலைச்சாரற்
　　பட்டைகொண்டு பகடாடிக்

---

1. பயிலாதேன்-பழகாதவன். கரவு இல் அருவி-நீரோட்டத்தைக் கரவாமல் தரும் அருவி. கோட்டம்-கரை; அம், சாரியை.

2. தலைநாள் கடைநாள் ஒக்க-முதல் நாளில் இருந்த நிலை வரவர மாறாமல் கடைநாள் அளவும் ஒத்து நிற்க.

3. பருவி விச்சி-பருத்தியை விதைத்து. பகடு ஆடி – விளையாடி. ஓப்பி-ஓட்டி.

குருவி ஓப்பிக் கிளிகடிவார்
குழல்மேல் மாலை கொண்டோட்டந்
தரவந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகளோ. 3

பழகா நின்று பணிசெய்வார்
பெற்ற பயனொன் றறிகிலேன்
இகழா துமக்காட் பட்டோர்க்கு
வேக படமொன் றரைச்சாத்தி
குழகா வாழைக் குலைத்தெங்கு
கொணர்ந்து கரைமேல் எறியவே
அழகார் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகளோ. 4

பிழைத்த பிழையொன் றறியேனான்
பிழையைத் தீரப் பணியாயே
மழைக்க ணல்லார் குடைந்தாட
மலையும் நிலனுங் கொள்ளாமைக்
கழைக்கொள் பிரசங் கலந்தெங்குங்
கழனி மண்டிக் கையேறி
அழைக்குந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகளோ. 5

கார்க்கொள் கொன்றை சடைமேலொன்
றுடையாய் விடையாய் கையினால்
மூர்க்கர் புரமூன் றெரிசெய்தாய்
முன்னீ பின்னீ முதல்வன்நீ

---

4. வேகபடம் — சீறும் பாம்பு. ஏகபடம் ஒன்று — ஒற்றை ஆடையை. குழகா — இளமையை உடையவனே.

5. கழைக்கொள் பிரசம்—கரும்பின்மேல் தொடுத்த தேன். கை ஏறி—பக்கத்தில் உள்ள கரையின் மீதூர்ந்து. அழைக்கும் — ஒலிக்கும்.

வார்க்கொள் அருவி பலவாரி
மணியும் முத்தும் பொன்னுங்கொண்
டார்க்குந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகளோ. 6

மலைக்கண் மடவாள் ஒருபாலாய்ப்
பற்றி உலகம் பலிதேர்வாய்
சிலைக்கொள் கணையால் எயில்எய்த
செங்கண் விடையாய் தீர்த்தன்நீ
மலைக்கொள் அருவி பலவாரி
மணியும் முத்தும் பொன்னுங்கொண்
டலைக்குந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகளோ. 7

போழும் மதியும் புனக்கொன்றை
புனல்சேர் சென்னிப் புண்ணியா
சூழும் அரவச் சுடர்ச்சோதீ
உன்னைத் தொழுவார் துயர்போக
வாழும் அவர்கள் அங்கங்கே
வைத்த சிந்தை உய்த்தாட்ட
ஆழுந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகளோ. 8

கதிர்க்கொள் பசியே ஒத்தேநான்
கண்டே னும்மைக் காணாதேன்
எதிர்த்து நீந்த மாட்டேனேன்
எம்மான் தம்மான் தம்மானே

---

6. கார்க்கொள் கொன்றை – கார்காலத்தை மலரும் பருவமாகக்கொண்ட கொன்றைமலர். மூர்க்கர் – திரிபுராதியர். வார்க்கொள்–ஒழுகுதலைக் கொண்ட.
7. பால்–பாகம்.
8. போழும் மதி–பிளந்தாற்போன்ற பிறை.

விதிர்த்து மேகம் மழைபொழிய
வெள்ளம் பரந்து நுரைசிதறி
அதிர்க்குந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகளோ. 9

கூசி அடியார் இருந்தாலுங்
குணம்ஒன் றில்லீர் குறிப்பிலீர்
தேச வேந்தன் திருமாலும்
மலர்மேல் அயனுங் காண்கிலாத்
தேசம் எங்குந் தெளித்தாடத்
தெண்ணீ ரருவி கொணர்ந்தெங்கும்
வாசந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகளோ. 10

கூடி அடியார் இருந்தாலுங்
குணம்ஒன் றில்லீர் குறிப்பிலீர்
ஊடி இருந்தும் உணர்கிலேன்
உம்மைத் தொண்ட னூரனேன்
தேடி எங்குங் காண்கிலேன்
திருவா ரூரே சிந்திப்பன்
ஆடுந் திரைக்கா விரிக்கோட்டத்
தையா றுடைய அடிகளோ.* 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: செம்பொற்சோதி
அம்பிகை: அறம் வளர்த்த நாயகி

**வரலாறு:** சேரமான் பெருமாள் நாயனாருடைய விருப்பத்தின்படி அவருடன் மலைநாட்டுக்குப் புறப்பட்ட சுந்தரமூர்த்தி

9. விதிர்த்து-நடுங்கும்படியாக இடித்து.
10. தேச வேந்தன்—ஒளியை உடைய இந்திரன்.
* 'அடிகேளோ' என்றும் பாடம்.

சுவாமிகள், இடையே பல தலங்களைத் தரிசித்துத் திருக்கண்டியூர் வந்து பணிந்து புறம் போந்தார், அப்போது காவிரியின் வடகரையில் திருவையாறு தோன்றச் சேரமன்னர் அத்தலத்துக்குச் சென்று பணியவேண்டுமென்ற தம் விருப்பத்தை உரைத்தார். அப்போது காவிரியில் பெருவெள்ளம் (ஓடம் போக இயலாதபடி) உண்டாக, அதுகண்ட சுவாமிகள் இப்பதிகத்தைப் பாடியருளினார். உடனே காவிரி இடையே வழிவிட, அவ்வழியே சென்று திருவையாற்றைத் தரிசித்து, மீண்டும் அவ்வழியே வந்தனர். காவிரி பழையபடியே செல்லலாயிற்று. [பெரிய புராணம், சேரமான் பெருமாள், *131--139*]

---

## 18. திருமழபாடி — பண்: நட்டராகம்

*திருச்சிற்றம்பலம்*

*பொன்னார் மேனியனே புலித்தோலை அரைக்கசைத்து*
*மின்னார் செஞ்சடைமேல் மிளிர் கொன்றை அணிந்தவனே*
*மன்னே மாமணியே மழ பாடியுள் மாணிக்கமே*
*அன்னே உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே.* 1

*கீளார் கோவணமுந் திரு நீறுமெய் பூசிஉன்றன்*
*தாளே வந்தடைந்தேன் தலை வாளனை என்றுகொள்நீ*
*வாளார் கண்ணிபங்கா மழ பாடியுள் மாணிக்கமே*
*ஆளாய்* நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே.* 2

---

1. அரைக்கு அசைத்து – இடையிலே கட்டி. நினைக்கேன்–நினைப்பேன்.

2. கீள்–கிழித்த துணி. * 'கேளா'; 'கேளாய்' என்றும் பாடம்.

எம்மான் எம்மனையென் றனக் கெட்டனைச் சார்வாகார்
இம்மா யப்பிறவி பிறந் தேஇறந் தெய்த்தொழிந்தேன்
மைம்மாம் பூம்பொழில்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
அம்மான் நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 3

பண்டே நின்னடியேன் அடி யாரடி யார்கட்கெல்லாம்
தொண்டேபூண்டொழிந்தேன்தொடராமைத்துரிசறுத்தேன்
வண்டார் பூம்பொழில்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
அண்டா நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 4

கண்ணாய் ஏழுலகுங் கருத் தாய அருத்தமுமாய்ப்
பண்ணார் இன்றமிழாய்ப் பர மாய பரஞ்சுடரே
மண்ணார் பூம்பொழில்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
அண்ணா நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 5

நாளார் வந்தணுகி நலி யாமுனம் நின்றனக்கே
ஆளா வந்தடைந்தேன் அடி யேனையும் ஏன்றுகொள்நீ
மாளா நாளருளும் மழ பாடியுள் மாணிக்கமே
ஆளா நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 6

சந்தா ருங்குழையாய் சடை மேற்பிறை தாங்கிநல்ல
வெந்தார் வெண்பொடியாய் விடை ஏறிய வித்தகனே
மைந்தார் சோலைகள்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
எந்தாய் நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 7

வெய்ய விரிசுடரோன் மிகு தேவர் கணங்களெல்லாம்
செய்ய மலர்கள்இட மிகு செம்மையுள் நின்றவனே
மையார் பூம்பொழில்சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
ஐயா நின்னை அல்லால் இனி யாரை நினைக்கேனே. 8

---

3. எம்மான் எம் அனை – எம் தந்தை தாய். எட்டனை - எள் தனை – எள்ளளவும். சார்வு – பற்றுக் கோடு.

4. துரிசு தொடராமல் அறுத்தேன்.

6. நாளார் – நாளைப் பார்த்து நிற்கும் காலன்.

நெறியே நின்மலனே நெடு மால்அயன் போற்றிசெய்யும்
குறியே நீர்மையனே கொடி யேரிடை யாள்தலைவா
மறிசேர் அங்கையனே மழ பாடியுள் மாணிக்கமே
அறிவே நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே. 9

ஏரார் முப்புரமும் எரி யச்சிலை தொட்டவனை
வாரார் கொங்கையுடன் மழ பாடியுள் மேயவனைச்
சீரார் நாவலர்கோன் ஆ ரூரன் உரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பர லோகத் திருப்பாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: வச்சிரத்தம்பநாதர்; அம்பிகை: அழகம்மை.

வரலாறு: சுந்தரமூர்த்தி சுவாமிகள் பல தலங்களையும் தரிசிப்பாராகித் திருவாலம்பொழிலுக்கு வந்து தரிசித்துத் தங்கி இரவில் துயில் கொள்கையில், சிவபிரான் கனவில் எழுந்தருளி, "மழபாடியினில் வருவதற்கு நினைக்க மறந்தாயோ" என்று அருள, எழுந்து திருமழபாடி அடைந்து தரிசித்து இப்பதிகத்தைப் பாடியருளினார். (பெரியபுராணம், ஏயர்கோன், 71-74.)

---

## 19. திருவானைக்கா — பண்: காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

மறைகள் ஆயின நான்கும் மற்றுள பொருள்களு மெல்லாம்
துறையுந் தோத்திரத் திறையுந் தொன்மையும் நன்மையும் ஆய
அறையும் பூம்புனல் ஆனைக் காவுடை ஆதியை நாளும்
இறைவன் என்றடி சேர்வார் எம்மையும் ஆளுடை யாரே. 1

---

9. கொடி ஏர் இடையாள் – கொடியைப் போன்ற இடையையுடைய அம்பிகை. மறி – மான்.

1. தோத்திரத்து இறையும் – யாவரும் செய்யும் தோத்திரங்களை உடைய இறைவனும்.

வங்கம் மேவிய வேலை நஞ்செழ வஞ்சர்கள் கூடித்
தங்கள் மேல்அட ராமை உண்ணென உண்டிருள் கண்டன்
அங்கம் ஓதிய ஆனைக் காவுடை ஆதியை நாளும்
எங்கள் ஈசனென் பார்கள் எம்மையும் ஆளுடை யாரே. 2

நீல வண்டறை கொன்றை நேரிழை மங்கைஓர் திங்கள்
சால வாள்அர வங்கள் தங்கிய செஞ்சடை எந்தை
ஆல நீழலுள் ஆனைக் காவுடை ஆதியை நாளும்
ஏலு மாறுவல் லார்கள் எம்மையும் ஆளுடை யாரே. 3

தந்தை தாயுல குக்கோர் தத்துவன் மெய்த்தவத் தோர்க்குப்
பந்த மாயின பெருமான் பரிசுடை யவர்திரு வடிகள்
அந்தண் பூம்புனல் ஆனைக் காவுடை ஆதியை நாளும்
எந்தை என்றடி சேர்வார் எம்மையும் ஆளுடை யாரே. 4

கணைசெந் தீயர வந்நாண் கல்வளை யுஞ்சிலை யாகத்
துணைசெய் மும்மதில் மூன்றுஞ் சுட்டவ னேஉல குய்ய
அணையும் பூம்புனல் ஆனைக் காவுடை ஆதியை நாளும்
இணைகொள் சேவடி சேர்வார் எம்மையும் ஆளுடை யாரே.

விண்ணின் மாமதி சூடி விலையிலி கலன்அணி விமலன்
பண்ணின் நேர்மொழி மங்கை பங்கினன் பசுவுகந் தேறி

---

2. வஞ்சர்கள் – தேவர்கள். அடராமை – வருத்தாமல்.

3. மங்கை – கங்கை. ஏலுமாறு – மனத்திலே ஏற்றுக் கொள்ளும் திறத்தில்.

4. பந்தமாயின – விடாத தொடர்பாகிய.

5. கணையாகச் செந்தீயையும், அரவத்தை நாணாகவும், மலையை வளையும் வில்லாகவும் கொண்டு, திரிபுர சங்கார காலத்தில் அக்கினி, வாயு, திருமால் ஆகிய மூவரும் அம்பாக இருந்தனர் என்பது புராண வரலாறு. இணை – இரண்டு.

அண்ண லாகிய ஆனைக் காவுடை ஆதியை நாளும்
எண்ணு மாறுவல் லார்கள் எம்மையும் ஆளுடை யாரே. 6

தார மாகிய பொன்னித் தண்டுறை ஆடி விழுத்தும்
நீரில் நின்றடி போற்றி நின்மலா கொள்என ஆங்கே
ஆரங் கொண்டஎம் ஆனைக் காவுடை ஆதியை நாளும்
ஈரம் உள்ளவர் நாளும் எம்மையும் ஆளுடை யாரே. 7

உரவம் உள்ளதோர் உழையின் னுரிபுலி அதளுடை யானை
விரைகொள் கொன்றையி னானை விரிசடை மேற்பிறை யானை
அரவம் வீக்கிய ஆனைக் காவுடை ஆதியை நாளும்
இரவும் எல்லியும் பகலும் ஏத்துவார் எமைஉடை யாரே. 8

வலங்கொள் வாரவர் தங்கள் வல்வினை தீர்க்கும் மருந்து
கலங்கக் காலனைக் காலாற் காமனைக் கண்சிவப் பானை
அலங்கல் நீர்பொரும் ஆனைக் காவுடை ஆதியை நாளும்
இலங்கு சேவடி சேர்வார் எம்மையும் ஆளுடை யாரே. 9

ஆழி யாற்கருள் ஆனைக் காவுடை ஆதிபொன் னடியின்
நீழ லேசர ணாக நின்றருள் கூர நினைந்து
வாழ வல்லவன் றொண்டன் வண்டமிழ் மாலைவல் லார்போய்
ஏழு மாபிறப் பற்று வெம்மையும் ஆளுடை யாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: சம்புகேசுவரர்; அம்பிகை: அகிலாண்டநாயகி.

---

6. விலையில்லாத கலனை, என்றது பாம்பை.

7. பொன்னி-காவிரி. விழுத்தும்-வீழ்த்திய. ஆரங்கொண்ட பெருமான் என்பது இத்தலத்துச் சுவாமியின் திருநாமங்களுள் ஒன்று. ஈரம்-அன்பு.

8. உரவம்-வலிமை. உழையின் உரி-மான்தோல். வீக்கிய - கட்டிய.

## 20. திருப்பைஞ்ஞீலி — பண்: கொல்லி

திருச்சிற்றம்பலம்

காரு லாவிய நஞ்சை உண்டிருள்
கண்டர் வெண்டலை யோடுகொண்
டூரெ லாந்திரிந் தென்செய் வீர்பலி
ஓரி டத்திலே கொள்ளும்நீர்
பாரெ லாம்பணிந் தும்மை யேபர
விப்ப ணியும்பைஞ் ஞீலியீர்
ஆர மாவது நாக மோசொலும்
ஆர ணீய விடங்கரே. 1

சிலைத்து நோக்கும்வெள் ளேறு செந்தழல்
வாய பாம்பது மூசெனும்
பலிக்கு நீர்வரும் போது நுங்கையிற்
பாம்பு வேண்டா பிரானிரே
மலைத்த சந்தொடு வேங்கை கோங்கமும்
மன்னு காரகில் சண்பகம்
அலைக்கும் பைம்புனல் சூழ்பைஞ் ஞீலியில்
ஆர ணீய விடங்கரே. 2

தூய வர்கண்ணும் வாயும் மேனியுந்
துன்ன ஆடை சுடலையில்
பேயொ டாடலைத் தவிரும் நீரொரு
பித்த ரோஎம் பிரானிரே
பாயும் நீர்க்கிடங் கார்கமலமும்
பைந்தண் மாதவி புன்னையும்
ஆய பைம்பொழில் சூழ்பைஞ் ஞீலியில்
ஆர ணீய விடங்கரே. 3

---

2. சிலைத்து–முழங்கி. மூசெனும் – மூசென்ற ஒலியோடு சீறும். சந்து-சந்தன மரம். 3. துன்ன ஆடை–தைத்த ஆடை.

செந்த மிழ்த்திறம் வல்லி ரோசெங்கண்
அரவ முன்கையில் ஆடவே
வந்து நிற்குமி தென்கொ லோபலி
மாற்ற மாட்டோம் இடகிலோம்
பைந்தண் மாமலர் உந்து சோலைகள்
கந்தம் நாறுபைஞ் ஞீலியீர்
அந்தி வானமும் மேனியோ சொலும்
ஆர ணீய விடங்கரே. 4

நீறு நுந்திரு மேனி நித்திலம்
நீனெ டுங்கண்ணி னாளொடும்
கூற ராய்வந்து நிற்றி ராற்கொணர்ந்
திடுகி லோம்பலி நடமினோ
பாறு வெண்டலை கையில் ஏந்திப்பைஞ்
ஞீலி யேனென்றீ ரடிகள்நீர்
ஆறு தாங்கிய சடைய ரோசொலும்
ஆர ணீய விடங்கரே. 5

குரவம் நாறிய குழலி னார்வளை
கொள்வ தேதொழில் ஆகிநீர்
இரவும் இம்மனை அறிதி ரே இங்கே
நடந்து போகவும் வல்லிரே
பரவி நாடொறும் பாடு வார்வினை
பற்ற றுக்கும்பைஞ் ஞீலியீர்
அரவம் ஆட்டவும் வல்லி ரோசொலும்
ஆர ணீய விடங்கரே. 6

---

4. மாற்ற மாட்டோம் இடகிலோம்-இடாமல் திரும்பவும் வலியில்லோம்; பிச்சையிடவும் வலியில்லோம்.

5. பாறு-பருந்து.

ஏடு லாமலர்க் கொன்றை சூடுதிர்
என்பெ லாமணிந் தென்செய்வீர்
காடு நும்பதி ஓடு கையது
காதல் செய்பவர் பெறுவதென்
பாடல் வண்டிசை ஆலுஞ் சோலைப்பைஞ்
ஞீலி யேன்என்று நிற்றிரால்
ஆடல் பாடலும் வல்லி ரோசொலும்
ஆர ணீய விடங்கரே. 7

மத்த மாமலர் கொன்றை வன்னியுங்
கங்கை யாளொடு திங்களும்
மொய்த்த வெண்டலை கொக்கி றகொடு
வெள்ளெ ருக்கமுஞ் சடையதாம்
பத்தர் சித்தர்கள் பாடி ஆடும்பைஞ்
ஞீலி யேன்என்று நிற்றிரால்
அத்தி யீர்உரி போர்த்தி ரோசொலும்
ஆர ணீய விடங்கரே. 8

தக்கை தண்ணுமை தாளம் வீணை
தகுணிச் சங்கிணை சல்லரி
கொக்க ரைகுட முழவி னோடிசை
கூடிப் பாடிநின் றாடுவீர்
பக்க மேகுயில் பாடுஞ் சோலைப்பைஞ்
ஞீலி யேன்என்று நிற்றிரால்
அக்கும் ஆமையும் பூண்டி ரோசொலும்
ஆர ணீய விடங்கரே. 9

கையொர் பாம்பரை ஆர்த்தொர் பாம்பு
கழுத்தொர் பாம்பவை பின்புதாழ்
மெய்யெ லாம்பொடிக் கொண்டு பூசுதிர்
வேதம் ஓதுதிர் கீதமும்

7. கையது ஓடு. 9. அக்கு-ருத்திராட்சம்; எலும்பு.

பைய வேவிடங் காக நின்றுபைஞ்
ஞீலி யேன்என்றீர் அடிகள்நீர்
ஐயம் ஏற்குமி தென்கொ லோசொ லும்
ஆர ணீய விடங்கரே. 10

அன்னஞ் சேர்வயல் சூழ்பைஞ் ஞீலியில்
ஆர ணீய விடங்கரை
மின்னும் நுண்ணிடை மங்கை மார்பலர்
வேண்டிக் காதல் மொழிந்தசொல்
மன்னு தொல்புகழ் நாவ லூரன்வன்
றொண்டன் வாய்மொழி பாடல்பத்
துன்னி இன்னிசை பாடு வார்உமை
கேள்வன் சேவடி சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மெய்ஞ்ஞான நீலகண்டேசுவரர்

அம்பிகை: விசாலாட்சியம்மை

**வரலாறு:** திருப்பைஞ்ஞீலிக்கு வந்த நம்பியாரூரர், கோபுரத்தை இறைஞ்சித் திருக்கோயிலை வலமாகவந்தபோது கங்காள மூர்த்தியைத் தரிசித்து மனம் உருகி, அப்பெருமான் பலிக்கு எழுந்தருளியபோது அவர் அழகிய வடிவைக் கண்ட மாதர்கள் மயலடைந்து வினவிய கூற்றாக இப்பதிகத்தைப் பாடியருளினார். [பெரிய புராணம், ஏயர்கோன், 83-84.]

---

## 21. திருப்பாச்சிலாச்சிராமம் — பண்: தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

வைத்தனன் தனக்கே தலையுமென் னாவும்
நெஞ்சமும் வஞ்சமொன் றின்றி
உய்த்தனன் தனக்கே திருவடிக் கடிமை
உரைத்தக்கால் உவமனே ஒக்கும்

---

10. ஐயம்-பிச்சை.

பைத்தபாம் பார்த்தோர் கோவணத் தோடு
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பித்தரே ஒத்தோர் நச்சில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 1

அன்னையே என்னேன் அத்தனே என்னேன்
அடிகளே அமையுமென் றிருந்தேன்
என்னையும் ஒருவன் உளன்என் றுகருதி
இறையிறை திருவருள் காட்டாய்
அன்னமாம் பொய்கை சூழ்தரு பாச்சி
லாச்சிரா மத்துறை அடிகள்
பின்னையே அடியார்க் கருள்செய்வ தாகில்
இவரலா தில்லையோ பிரானார். 2

உற்றபோ தல்லால் உறுதியை உணரேன்
உள்ளமே அமையும்என் றிருந்தேன்
செற்றவர் புரமூன் றெரிஎழச் செற்ற
செஞ்சடை நஞ்சடை கண்டர்
அற்றவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத்
தடிகள்தா மியாதுசொன் னலும்
பெற்றபோ துகந்து பெறாவிடில் இகழில்
இவரலா தில்லையோ பிரானார். 3

நாச்சில பேசி நமர்பிறர் என்று
நன்றுதீ தென்கிலர் மற்றோர்
பூச்சிலை நெஞ்சே பொன்விளை கழனிப்
புள்ளினஞ் சிலம்புமாம் பொய்கைப்

---

**1.** பைத்த–படத்தை உடைய. 4. பரிந்து–இரங்கி.

பாச்சிலாச் சிராமத் தடிகளென் றிவர்தாம்
 பலரையும் ஆட்கொள்வர் பரிந்தோர்
பேச்சிலர் ஒன்றைத் தரவில ராகில்
 இவரலா தில்லையோ பிரானார். 4

வரிந்தவெஞ் சிலையால் அந்தரத் தெயிலை
 வாட்டிய வகையின ரேனும்
புரிந்தஅந் நாளே புகழ்தக்க அடிமை
 போகுநாள் வீழுநா ளாகிப்
பரிந்தவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத்
 தடிகள்தா மியாதுசொன் னாலும்
பிரிந்திறைப் போதிற் பேர்வதே *ஆகில்
 இவரலா தில்லையோ பிரானார். 5

செடித்தவஞ் செய்வார் சென்றுழிச் செல்லேன்
 தீவினை செற்றிடும் என்று
அடித்தவம் அல்லால் ஆரையும் அறியேன்
 ஆவதும் அறிவர்எம் அடிகள்
படைத்தலைச் சூலம் பற்றிய கையர்
 பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பிடித்தவெண் ணீறே பூசுவ தானால்§
 இவரலா தில்லையோ பிரானார். 6

கையது கபாலம் காடுறை வாழ்க்கை
 கட்டங்கம் ஏந்திய கையர்
மெய்யது புரிநூல் மிளிரும்புன் சடைமேல்
 வெண்திங்கள் சூடிய விகிர்தர்

---

5. அடிமை போகுநாள் வீழுநாள் – தொண்டு பூணும் நிலை நீங்குநாள் இறந்துபடும் நாள். * 'போவதே' எனினுமாம்.

§ 'பூசுத லானா' என்றும் பாடம்.

பையர வல்குற் பாவையர் ஆடும்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
மெய்யரே ஒத்தோர் பொய்செய்வ தாகில்
இவரலா தில்லையோ பிரானார். 7

நிணம்படும் உடலை நிலைமையென் றோரேன்
நெஞ்சமே தஞ்சமென் றிருந்தேன்
கணம்படிந் தேத்திக் கங்குலும் பகலும்
கருத்தினாற் கைதொழு தெழுவேன்
பணம்படும் அரவம் பற்றிய கையர்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பிணம்படு காட்டில் ஆடுவ தாகில்
இவரலா தில்லையோ பிரானார். 8

குழைத்துவந் தோடிக் கூடுதி நெஞ்சே
குற்றேவல் நாள்தொறுஞ் செய்வான்
இழைத்தநாள் கடவார் அன்பில ரேனும்
எம்பெரு மான்என்றெப் போதும்
அழைத்தவர்க் கருள்செய் பாச்சிலாச் சிராமத்
தடிகள்தா மியாதுசொன் னாலும்
பிழைத்தது பொறுத்தோன் றீகில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 9

துணிப்படும் உடையுஞ் சுண்ணவெண் ணீறும்
தோற்றமுஞ் சிந்தித்துக் காணில்
மணிப்படு கண்டனை வாயினாற் கூறி
மனத்தினால் தொண்டனேன் நினைவேன்

8. பணம் – படம். 9. குழைத்து – உருகி.

10. துணிப்படும் உடை – துண்டமாக்கிய ஆடை. . பிணிப்பட – கட்டுப்படும்படி.

பணிப்படும் அரவம் பற்றிய கையர்
பாச்சிலாச் சிராமத்தெம் பரமர்
பிணிப்பட ஆண்டு பணிப்பில* ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 10

ஒருமையே அல்லேன் எழுமையும் அடியேன்
அடியவர்க் கடியனும் ஆனேன்
உரிமையால் உரியேன் உள்ளமும் உருகும்
ஒண்மலர்ச் சேவடி காட்டாய்
அருமையாம் புகழார்க் கருள்செயும் பாச்சி
லாச்சிரா மத்தெம் மடிகள்
பெருமைகள் பேசிச் சிறுமைகள் செய்யில்
இவரலா தில்லையோ பிரானார். 11

ஏசின அல்ல இகழ்ந்தன அல்ல
எம்பெரு மானென்றெப் போதும்
பாயின புகழான் பாச்சிலாச் சிராமத்
தடிகளை அடிதொழப் பன்னாள்
வாயினாற் கூறி மனத்தினால் நினைவான்
வளவயல் நாவலா ரூரன்
பேசின பேச்சைப் பொறுக்கில ராகில்
இவரலா தில்லையோ பிரானார். 12

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மாற்றறி வரதர்; அம்பிகை: பாலசுந்தரி.

**வரலாறு:** சுந்தரர் திருவானைக்காவைத் தரிசித்து அதன் அருகில் உள்ள தலங்களுக்குச் சென்று வழிபடுவாராகிப் பாச்சிலாச்சிராமம் அடைந்து, சிவபெருமானை வழிபட்டுப் பொருளை வேட்டு நின்றார். அதனை இறைவர் அருளாதொழியவும், தோழமை புறவினால் முறையிடுவார்போல இப்பதிகம் பாடினார்; சிவபெருமான் விழுநிதிக்குவை அளித்தருளினார். [பெ. ஏ. 84]

---

* 'பிணிப்பில' என்றும் பாடம்.

## (2) சோழ நாட்டில் காவேரிக்குத் தென்கரையில் உள்ள தலங்கள்

### 1. திருக்கற்குடி — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

விடையா ருங்கொடியாய் வெறியார்மலர்க்கொன்றையினாய்
படையார் வெண்மழுவா பர மாய பரம்பரனே
கடியார் பூம்பொழில்சூழ் திருக் கற்குடி மன்னிநின்ற
அடிகேள் எம்பெருமான் அடி யேனையும் அஞ்சலென்னே.1

மறையோர் வானவருந் தொழு தேத்தி வணங்கநின்ற
இறைவா எம்பெருமான் எனக் கின்னமு தாயவனே
கறையார் சோலைகள்சூழ் திருக் கற்குடி மன்னிநின்ற
அறவா அங்கணனே அடி யேனையும் அஞ்சலென்னே. 2

சிலையால் முப்புரங்கள் பொடி யாகச் சிதைத்தவனே
மலைமேல் மாமருந்தே மட மாதிடங் கொண்டவனே
கலைசேர் கையினனே திருக் கற்குடி மன்னிநின்ற
அலைசேர் செஞ்சடையாய் அடியேனையும அஞ்சலென்னே.3

செய்யார் மேனியனே திரு நீல மிடற்றினனே
மையார் கண்ணிபங்கா மத யானை உரித்தவனே
கையார் சூலத்தினாய் திருக் கற்குடி மன்னிநின்ற
ஐயா எம்பெருமான் அடி யேனையும் அஞ்சலென்னே. 4

---

1. வெறி – வாசனை. பரம் – மேலான பொருள். அஞ்சல் என்னே – அஞ்சாதே என்று திருவாய் மலர்ந்தருள்வாயாக. என் – என்று சொல்.

2. கறைஆர்–செறிவினால் கறுப்புநிறம் பெற்ற.

3. கலை–மான்.

சந்தார் வெண்குழையாய் சரி கோவண ஆடையனே
பந்தா ரும்விரலாள் ஒரு பாகம் அமர்ந்தவனே
கந்தார் சோலைகள்சூழ் திருக் கற்குடி மன்னிநின்ற
எந்தாய் எம்பெருமான் அடி யேனையும் ஏன்றுகொள்ளே. 5

அரையார் கீளொடுகோ வண மும்மர வும்மசைத்து*
விரையார் கொன்றையுடன் விளங் கும்பிறை மேலுடையாய்
கரையா ரும்வயல்சூழ் திருக் கற்குடி மன்னிநின்ற
அரையா எம்பெருமான் அடி யேனையும் அஞ்சலென்னே. 6

பாரார் விண்ணவரும் பர விப்பணிந் தேத்தநின்ற
சீரார் மேனியனே திகழ் நீல மிடற்றினனே
காரார் பூம்பொழில்சூழ் திருக் கற்குடி மன்னிநின்ற
ஆரா இன்னமுதே அடி யேனையும் அஞ்சலென்னே. 7

நிலனே நீர்வளிதீ நெடு வானகம் ஆகிநின்ற
புலனே புண்டரிகத் தயன் மாலவன் போற்றிசெய்யும்
கனலே கற்பகமே திருக் கற்குடி மன்னிநின்ற
அனல்சேர் கையினனே அடி யேனையும் அஞ்சலென்னே. 8

வருங்கா லன்னுயிரை மடி யத்திரு மெல்விரலால்
பெரும்பா லன்றனக்காய்ப் பிரி வித்த பெருந்தகையே
கரும்பா ரும்வயல்சூழ் திருக் கற்குடி மன்னிநின்ற
விரும்பா எம்பெருமான் அடி யேனையும் வேண்டுதியே. 9

---

5. சந்து-மூட்டுவாய். கந்து-கந்தம்; வாசனை.

* 'அரையார் கீளொடு் கோவணமும் அரைக்கசைத்து' என்றும் பாடம்.

8. புலன் – பொறிகளால் நுகரும் பொருள் ஆனவனே; அறிவு உருவினனே எனினுமாம்.

9. பெரும்பாலன் - புகழ்ாத் பெரிய சிறுவராகிய மார்க்கண்டேயர். உயிரைப் பிரிவித்த. விரும்பா – விருப்பம் உடையவனே.

அலையார் தண்புனல்சூழ்ந் தழ காகி விழவமரும்
கலையார் மாதவர்சேர் திருக் கற்குடிக் கற்பகத்தைச்
சிலையார் வாள்நுதலாள் நல்ல சிங்கடி யப்பன்உரை
விலையார் மாலைவல்லார் வியன் ழுவுல காள்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: உஜ்ஜீவனநாதர்; அம்பிகை: அஞ்சனாட்சி.

---

## 2. திருச்சோற்றுத்துறை — பண்: கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

அழல்நீர் ஒழுகி அனைய சடையும்
உழையீர் உரியும் முடையான் இடமாம்
கழைநீர் முத்துங் கனகக் குவையும்
சுழல்நீர்ப் பொன்னிச் சோற்றுத் துறையே. 1

பண்டை வினைகள் பறிய நின்ற
அண்ட முதல்வன் அமலன் னிடமாம்
இண்டை கொண்டன் பிடைஅ றாத
தொண்டர் பரவுஞ் சோற்றுத் துறையே. 2

கோல அரவுங் கொக்கின் இறகும்
மாலை மதியும் வைத்தான் இடமாம்
ஆலும் மயிலும் ஆடல் அளியும்
சோலை தருநீர்ச் சோற்றுத் துறையே. 3

---

10. கலை-சாத்திரம்.

1. நெருப்பில் நீர் ஓடினது போன்ற சடையும்; கங்கை யமைந்த சடையாதலின் இங்ஙனம் கூறினார். உழையீர் உரி — மான்தோல். கழைநீர்முத்தும் — மூங்கிலில் உண்டான நல்ல இயல்பையுடைய முத்தும்.

2. இண்டை — ஒருவகை மாலை.

3. ஆலும் — ஆடும். ஆடல் — அசைதல்.

பளிக்குத் தாரை பவள வெற்பில்
குளிக்கும் போல்நூற் கோமாற் கிடமாம்
அளிக்கும் ஆத்தி அல்லால் மதுவம்
துளிக்குஞ் சோலைச் சோற்றுத் துறையே. 4

உதையுங் கூற்றுக் கொல்கா விதிக்கு
வதையுஞ் செய்த மைந்தன் இடமாம்
திதையுந் தாதுந் தேனுஞ் ஞிமிறும்
துதையும் பொன்னிச் சோற்றுத் துறையே. 5

ஓதக் கடல்நஞ் சினைஉண் டிட்ட
பேதைப் பெருமான் பேணும் பதியாம்
சீதப் புனல்உண் டெரியைக் காலும்
சூதப் பொழில்சூழ் சோற்றுத் துறையே. 6

இறந்தார் என்பும் எருக்குஞ் சூடிப்
புறங்காட் டாடும் புனிதன் கோயில்
சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே. 7

---

4. பளிக்குத் தாரை – பளிங்கின் நீட்சி; இது பூணூலுக்கு உவமை. பவளவெற்பு, சிவபெருமான் திருமேனிக்கு உவமை.

5. கூற்றுக்கு உதையும் விதிக்கு வதையும் செய்த; விதி – பிரமதேவன். திதையும் – சிதறிய. தேன், ஞிமிறு - வண்டின் வகை. துதையும் – பொருந்தும்.

6. பேதைப்பெருமான் – கருணை செய்யுமிடத்துத் தகுதி பாராத பேதைமையை உடைய பெருமான்; அருள்மடம் உடையவன். எரியைக் காலும் சூதப் பொழில் – நெருப்பைக் கொப்புளித்தாற்போலச் செந்நிறத் தளிரைத் தழைக்கச்செய்யும் மாஞ்சோலை.

7. புறங்காடு – மயானம். தமக்கு அன்பு முதலியவற்றாற் சிறந்தவரையும் சுற்றத்தாரையும் செல்வத்தையும் பிற பொருள்களையும் துறந்தவர்கள்.

6.

காமன் பொடியாக் கண்ஒன் றிமைத்த
ஓமக் கடலார் உகந்த இடமாம்
தேமன்* குழலார் சேக்கை புகைத்த
தூமம் விசும்பார் சோற்றுத் துறையே. 8

இலையால் அன்பால் ஏத்தும் அவர்க்கு
நிலையா வாழ்வை நீத்தார் இடமாம்
தலையால் தாழுந் தவத்தோர்க் கென்றும் §
தொலையாச் செல்வச் சோற்றுத் துறையே. 9

சுற்றூர் தருநீர்ச் சோற்றுத் துறையுள்
முற்றா மதிசேர் முதல்வன் பாதத்
தற்றார் அடியார் அடிநாய் ஊரன்
சொற்றான் இவைகற் றார்துன் பிலரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: தொலையாச் செல்வர்

அம்பிகை: ஒப்பிலாவம்மை

---

8. கண்ஒன்று என்றார், நுதற்கண்ணாதலின். தேம்மன் குழலார்; தேம் – வாசனை. * 'தேமென்' என்றும் பாடம். சேக்கை-இருப்பிடங்களில், குழலுக்குப் புகையூட்டும் பொருட்டுப் புகைத்தனர்.

9. இலையால் – பத்திரங்களைக் கொண்டு. நிலையா வாழ்வை நீத்தார் – நிலையாமையை உடைய உலக வாழ்வை நீக்கி நிலை பெற்ற முத்தியின்பத்தை அருள்பவர். § 'தவத்தோ ரென்றும்' என்றும் பாடம்.

10. சுற்று ஊர்தரும் நீர்–சுற்றிலும் நிறைந்த நீரை உடைய. முற்றா மதி – பிறை.

## 3. திருநாகேச்சரம் — பண்: பஞ்சமம்

### திருச்சிற்றம்பலம்

பிறையணி வாள்நுதலாள் உமையாளவள் பேழ்கணிக்க
நிறையணி நெஞ்சனுங்க நீலமால்விடம் உண்டதென்னே
குறையணி குல்லைமுல்லை அளைந்துகுளிர் மாதவிமேல்
சிறையணி வண்டுகள்சேர் திருநாகேச் சரத்தானே.* 1

அருந்தவ மாமுனிவர்க் கருளாகியொர் ஆலதன்கீழ்
இருந்தற மேபுரிதற் கியல்பாகிய தென்னைகொலாம்
குருந்தய லேகுரவம் மரவின்னெயி றேற்றரும்பச்
செருந்திசெம் பொன்மலருந் திருநாகேச் சரத்தானே. 2

பாலனு தாருயிர்மேற் பரியாது பகைத்தெழுந்த
காலனை வீடுவித்துக் கருத்தாக்கிய தென்னைகொலாம்
கோல மலர்க்குவளைக் கழுநீர்வயல் சூழ்கிடங்கில்
சேலொடு வாளைகள்பாய் திருநாகேச் சரத்தானே. 3

குன்ற மலைக்குமரி கொடியேரிடை யாள்வெருவ
வென்றி மதகரியின் னுரிபோர்த்ததும் என்னைகொலாம்
முன்றில் இளங்கமுகின் முதுபாளை மதுவளைந்து
தென்றல் புகுந்துலவுந் திருநாகேச் சரத்தானே. 4

அரைவிரி கோவணத்தோ டரவார்த்தொரு நான்மறைநூல்
உரைபெரு கவ்வுரைத்தன் றுகந்தருள் செய்ததென்னே
வரைதரு மாமணியும் வரைச்சந்தகி லோடும்உந்தித்
திரைபொரு தண்பழனத் திருநாகேச் சரத்தானே. 5

---

1. பேழ்கணிக்க - அஞ்ச. அனுங்க - வருந்த. குல்லை - கஞ்சங்குல்லை; துளவமும் ஆம். * 'சரத்தரனே' என்றும் பாடம்.

2. குரா அரும்புக்குப் பாம்பின் பல் உவமை.

3. பாலன்-மார்க்கண்டேயர். பரியாது-இரங்காமல்.

4. முன்றில்-சோலையின் முன்னிடத்தில் உள்ள.

5. மணி-வயிரம். சந்து-சந்தனம்.

தங்கிய மாதவத்தின் தழல்வேள்வியி னின்றெழுந்த
சிங்கமும் நீள்புலியுஞ் செழுமால்கரி யோடலறப்
பொங்கிய போர்புரிந்து பிளந்தீருரி போர்த்ததென்னே
செங்கயல் பாய்கழனித் திருநாகேச் சரத்தானே. 6

நின்றஇம் மாதவத்தை ஒழிப்பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூக்கணைவேள் பொடியாக விழித்தலென்னே
பங்கய மாமலர்மேல் மதுஉண்டுவண் தேன்முரலச்
செங்கயல் பாய்வயல்சூழ் திருநாகேச் சரத்தானே. 7

வரியரா நாணதாக மாமேரு வில்லதாக
அரியன முப்புரங்கள் எவைஆரழல் ஊட்டல்என்னே
விரிதரு மல்லிகையும் மலர்ச்சண்பக மும்மளைந்து
திரிதரு வண்டுபண்செய் திருநாகேச் சரத்தானே. 8

அங்கியல் யோகுதன்னை அழிப்பான்சென் றணைந்துமிகப்
பொங்கிய பூங்கணைவேள் பொடியாக விழித்தல்என்னே
பங்கய மாமலர்மேல் மதுவுண்டுபண் வண்டறையச்
செங்கயல் நின்றுகளுந் திருநாகேச் சரத்தானே. 9

குண்டரைக் கூறையின்றித் திரியுஞ்சமண் சாக்கியப்பேய்
மிண்டரைக் கண்டதன்மை விரவாகிய தென்னைகொலோ
தொண்டிரைத் துவணங்கித் தொழில்பூண்டடி யார்பரவும்
தெண்டிரைத் தண்வயல்சூழ் திருநாகேச் சரத்தானே. 10

---

6. வேள்வி–தாருகாவனத்து முனிவர் செய்த யாகம்.

7. பூங்கணை வேள் – மலராகிய அம்பையுடைய காமன். தேன்–வண்டு.

8. வரி அரநாணதாக–கோடுகளை உடைய பாம்பு நாண் கயிறாக.

10. குண்டு–தாழ்வையுடைய. அரைக்கூறையின்றி–இடையிலே ஆடையுமில்லாமல். தொண்டு–தொண்டர்கள். இரைத்து–முழங்கி.

கொங்கணை வண்டரற்றக் குயிலும்மயி லும்பயிலும்
தெங்கணை பூம்பொழில்சூழ் திருநாகேச் சரத்தானை
வங்கம் மலிகடல்சூழ் வயல்நாவலா ரூரன்*சொன்ன
பங்கமில் பாடல்வல்லா ரவர்தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: சண்பகாரணியர்; அம்பிகை: குன்றமுலையம்மை

---

## 4. திருவிடைமருதூர் — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

கழுதை குங்குமந் தான்சுமந் தெய்த்தாற்
 கைப்பர் பாழ்புக மற்றது போலப்
பழுது நான்உழன் றுட்டடு மாறிப்
 படுசு ழித்தலைப் பட்டனன் எந்தாய்
அழுது நீஇருந் தென்செய்தி மனனே
 அங்க ணாளரை னேயென மாட்டா
இழுதை யேனுக்கோர் உய்வகை அருளாய்
 இடைம ருதுறை எந்தைபி ரானே. 1

நரைப்பு மூப்பொடு பிணிவரும் இன்னே
 நன்றி யில்வினை யேதுணிந் தெய்த்தேன்
அரைத்த மஞ்சள தாவதை அறிந்தேன்
 அஞ்சி னேன்நம னாரவர் தம்மை

---

11. கொங்கு – பூந்தாது. தெங்கு – தென்னை. வங்கம் – கப்பல். வயல்கள் கப்பல் மலிந்த கடலை நினைக்கச் செய்கின்றன. பரப்பும் நீர்வளமும் இத்தகையன என்றபடி. * 'நாவலவூரன்' என்றும் பாடம்.

1. எய்த்தால் – சோர்ந்து போனால். கைப்பர் பாழ்புக – பாழ்வெளியிலே போகும்படித் துரத்துவார்கள். இழுதையேன்– தாழ்ந்தவன்.

உரைப்பன் நான்உன சேவடி சேர
உணரும் வாழ்க்கையை ஒன்றறி யாத
இரைப்ப னேனுக்கோர் உய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 2

புன்னு னைப்பனி வெங்கதிர் கண்டாற்
போலும் வாழ்க்கை பொருள்இலை நாளும்
என்னே னக்கினி இற்றைக்கு நாளை
என்றி ருந்திடர் உற்றனன் எந்தாய்
முன்ன மேஉன சேவடி சேரா
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
இன்னம் என்றனக் குய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 3

முந்திச் செய்வினை இம்மைக்கண் நலிய
மூர்க்க னாகிக் கழிந்தன காலம்
சிந்தித் தேமனம் வைக்கவும் மாட்டேன்
சிறுச்சிறி தேஇரப் பார்கட்கொன் றீயேன்
அந்தி வெண்பிறை சூடும்எம் மானே
ஆரூர் மேவிய அமரர்கள் தலைவா
எந்தை நீஎனக் குய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 4

---

2. இன்னே – இப்பொழுதே. இரைப்பன் – மோகத்தை உடையவன்; இரைப்பு – மோகம்.

3. புல்லின் நுனியிலே உள்ள பனி, வெவ்விய சூரியனைக் கண்டால் உடனே மறைவதுபோல நிலையாமையையுள்ள வாழ்க்கை; "புல்நுனி மேல் நீர்போல் நிலையாமை" (நாலடி). பொருள் இலை – பயனுடையதன்று. எனக்கு இனி என்.

4. சிறுச்சிறிதே – மிகச் சிறிய அளவேனும்.

அழிப்பர் ஐவர் புரவுடை யார்கள்
ஐவ ரும்புர வாசற ஆண்டு
கழித்துக் காற்பெய்து போயின பின்னைக்
கடைமு றைஉனக் கேபொறை ஆனேன்
விழித்துக் கண்டனன் மெய்ப்பொருள் தன்னை
வேண்டேன் மானுட வாழ்க்கைஈ தாகில்
இழித்தேன் என்றனக் குய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 5

குற்றந் தன்னொடு குணம்பல பெருக்கிக்
கோல நுண்ணிடை யாரொடு மயங்கிக்
கற்றி லேன்கலை கள்பல ஞானங்
கடிய ஆயின கொடுமைகள் செய்தேன்
பற்ற லாவதோர் பற்றுமற் றில்லேன்
பாவி யேன்பல பாவங்கள் செய்தேன்
எற்று ளேன்எனக் குய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 6

கொடுக்க கிற்றிலேன் ஒண்பொருள் தன்னைக்
குற்றம் செற்றம் இவைமுத லாக
விடுக்க கிற்றிலேன் வேட்கையுஞ் சினமும்
வேண்டில் ஐம்புலன் என்வசம் அல்ல
நடுக்கம் உற்றதோர் மூப்புவந் தெய்த
நமன்த மர்நர கத்திடல் அஞ்சி
இடுக்கண் உற்றனன் உய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 7

5. ஐவர் புரவுடையார்கள் – இந்த உடம்பை ஆளும் ஆட்சியையுடைய ஐம்பொறிகள். ஆசு அற ஆண்டு – சிறிதும் எஞ்சுதலின்றி ஆட்சி செய்து. கழித்து – நீத்து. காற்பெய்து – காலடியிலே போட்டுவிட்டு. பொறை – பாரம். விழித்து – உணர்வுபெற்று.

7. செற்றம் – பகைமை.

ஐவ கையர் ஐயரவ ராகி
ஆட்சி கொண்டொரு காலவர் நீங்கார்
அவ்வ கையவர் வேண்டுவ தானல்
அவர வர்வழி ஒழுகிநான் வந்து
செய்வ கைஅறி யேன்சிவ லோகா
தீவ ணசிவ னேயெரி யாடீ
எவ்வ கைஎனக் குய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 8

ஏழை மானுட இன்பினை நோக்கி
இளைய வர்வலைப் பட்டிருந் தின்னம்
வாழை தான்பழுக் குந்நமக் கென்று
வஞ்ச வல்வினை யுள்வலைப் பட்டுக்
கூழை மாந்தர்தஞ் செல்கதிப் பக்கம்
போக மும்பொருள் ஒன்றறி யாத
ஏழை யேனுக்கோர் உய்வகை அருளாய்
இடைம ருதுறை எந்தைபி ரானே. 9

அரைக்குஞ் சந்தனத் தோடகில் உந்தி
ஐவ னஞ்சுமந் தார்த்திரு பாலும்
இரைக்குங் காவிரித் தென்கரை தன்மேல்
இடைம ருதுறை எந்தைபி ரானை

---

8. ஐவகையர் ஐயர் அவராகி – ஐந்து வெவ்வேறு வகையினவாகிய பொறிகள் தலைவர் ஆகி.

9. இளையவர் – இளைய மங்கையர். ஒருமுறை பழுத்த வாழை மற்ற மரங்களைப்போல மீண்டும் பழுக்கும் என்று எண்ணி ஏமாந்ததுபோல ஏமாந்து. கூழை மாந்தர் – தாழ்வுடைய மக்கள்.

உரைக்கும் ஊரன் ஒளிதிகழ் மாலை
உள்ளத் தால்உகந் தேத்தவல் லார்கள்
நரைப்பு மூப்பொடு நடலையும் இன்றி
நாதன் சேவடி நண்ணுவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மகாலிங்கம்; அம்பிகை: பெருநன்முலை நாயகி.

---

## 5. திருவாவடுதுறை — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மறைய வனொரு மாணிவந் தடைய
வார மாய்அவன் ஆருயிர் நிறுத்தக்
கறைகொள் வேலுடைக் காலனைக் காலாற்
கடந்த காரணங் கண்டுகண் டடியேன்
இறைவன் எம்பெரு மான்என்றெப் போதும்
ஏத்தி ஏத்திநின் றஞ்சலி செய்துன்
அறைகொள் சேவடிக் கன்பொடும் அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 1

தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்தி ரப்பந்தர் சிக்கன இயற்றச்
சுருண்ட செஞ்சடை யாய்அது தன்னைச்
சோழன் ஆக்கிய தொடர்ச்சிகண் டடியேன்

---

10. ஐவனம் – மலைநெல். இரைக்கும் – ஒலிக்கும். நடலை – துன்பம்.

1. மாணி-பிரமசாரி. வாரமாய்-அன்பாகி. கறை—உயிர்களைக்கொன்ற கறை. வேல்-சூலம். கடந்த-வென்ற. அஞ்சலி செய்து-கும்பிட்டு. அறைகொள்-சிலம்பு முதலியன ஒலித்தலையுடைய.

புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றிஎன் றன்பொடு புலம்பி
அருண்டேன் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 2

திகழும் மாலவன் ஆயிர மலரால்
ஏத்து வான்ஒரு நீள்மலர் குறையப்
புகழி னால்அவன் கண்இடந் திடலும்
புரிந்து சக்கரங் கொடுத்தல்கண் டடியேன்
திகழும் நின்திருப் பாதங்கள் பரவித்
தேவ தேவநின் திறம்பல பிதற்றி
அகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 3

வீரத் தால்ஒரு வேடுவ னாகி
விசைத்தொர்* கேழலைத் துரந்துசென் றணைந்து
போரைத் தான்விச யன்றனக் கன்பாய்ப்
புரிந்து வான்படை கொடுத்தல்கண் டடியேன்
வாரத் தால்உன நாமங்கள் பரவி
வழிபட் டுன்திற மேநினைந் துருகி
ஆர்வத் தோடும்வந் தடியிணை அடைந்தேன்
ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 4

---

2. சிக்கன—திண்ணிதாக, 'சிக்கென' என்றும் பாடம். சோழனுக்கிய — கோச்செங்கட் சோழனைப் பிறக்கச் செய்த. அருண்டு—கலங்கி.

3. இடந்து இடலும்—பறித்துத் திருவடிக்கீழ் அருசித்த வுடன். புரிந்து—விரும்பி.

4. விசைத்து—விரைந்து. * 'விசைந்தோர்' என்றும் பாடம். துரந்து — ஓட்டி. படை — பாசு பதாஸ்திரம். வாரத்தால்— அன்பினால்.

ஒக்க முப்புரம் ஓங்கெரி தூவ
　　உன்னை உன்னிய மூவர்நின் சரணம்
புக்கு மற்றவர் பொன்னுல காளப்
　　புகழி னல்அருள் ஈந்தமை அறிந்து
மிக்க நின்கழ லேதொழு தரற்றி
　　வேதி யாஆதி மூர்த்திநின் அரையில்
அக்க ணிந்தஎம் மான்உனை அடைந்தேன்
　　ஆவ டுதுறை ஆதிஎம் மானே. 5-10

திருச்சிற்றம்பலம்

---

## பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

கங்கை வார்சடை யாய்கண நாதா
　　கால காலனே காமனுக் கனலே
பொங்கு மாகடல் விடமிடற் றானே
　　பூத நாதனே புண்ணியா புனிதா
செங்கண் மால்விடை யாய்தெளி தேனே
　　தீர்த்த னேதிரு வாவடு துறையுள்
அங்க ணாஎனை அஞ்சல்என் றருளாய்
　　ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 1

மண்ணின் மேல்மயங் கிக்கிடப் பேனை
　　வலிய வந்தெனை ஆண்டுகொண் டானே
கண்ணி லேன்உடம் பில்லடு நோயாற்
　　கருத்த ழிந்துனக் கேபொறை ஆனேன்

---

5. மூவர்–திரிபுரங்களின் தலைவராகிய மூவர். அக்கு–என்பு.

1. தீர்த்தனே – தூயவனே. 2. பொறை – பாரம்.

தெண்ணி லாஎறிக் குஞ்சடை யானே
தேவ னேதிரு வாவடு துறையுள்
அண்ண லேயெனை அஞ்சலென் றருளாய்
ஆரெ னக்குற வமரர்கள் ஏறே. 2

ஒப்பி லாமுலை யாள்ஒரு பாகா
உத்த மாமத்தம் ஆர்தரு சடையாய்
முப்பு ரங்களைத் தீவளைத் தங்கே
மூவ ருக்கருள் செய்யவல் லானே
செப்ப ஆல்நிழற் கீழிருந் தருளுஞ்
செல்வ னேதிரு வாவடு துறையுள்
அப்ப னேயெனை அஞ்சலென் றருளாய்
ஆரெ னக்குற வமரர்கள் ஏறே. 3

கொதியி னால்வரு காளிதன் கோபங்
குறைய ஆடிய கூத்துடை யானே
மதியி லேன்உடம் பில்லடு நோயால்*
மயங்கி னேன்மணி யேமண வாளா
விதியி னால்இமை யோர்தொழு தேத்தும்
விகிர்த னேதிரு வாவடு துறையுள்
அதிப னே‡யெனை அஞ்சலென் றருளாய்
ஆரெ னக்குற வமரர்கள் ஏறே. 4

வந்த வாளரக் கன்வலி தொலைத்து
வாழும் நாள்கொடுத் தாய்வழி முதலே
வெந்த வெண்பொடிப் பூசவல் லானே
வேட னாய்விச யற்கருள் புரிந்த

---

3. ஒப்பிலா முலையாள்: தலத்து அம்பிகை. மத்தம் — ஊமத்த மலர். செப்ப — உபதேசம் செய்ய.

4. கொதி — மனக்கொதிப்பு. மணி—மாசிலாமணி-தலத்துப் பெருமான் திருநாமம். விதியினால் — முறைமையோடு. * 'பாலடு நோயின்'; ‡ 'அதியனே' என்றும் பாடம்.

இந்து சேகர னேஇமை யோர்சீர்
ஈச னேதிரு வாவடு துறையுள்
அந்த ணாளனே அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 5

குறைவி லாநிறை வேகுணக் குன்றே
கூத்த னேகுழைக் காதுடை யானே
உறவி லேன்உனை அன்றிமற் றடியேன்
ஒருபி ழைபொறுத் தால்இழி வுண்டே
சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூர்ச்
செம்பொ னேதிரு வாவடு துறையுள்
அறவ னேயெனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 6

வெய்ய மாகரி ஈருரி யானே
வேங்கை ஆடையி னாய்விதி முதலே
மெய்ய னேஅடல் ஆழியன் றரிதான்
வேண்ட நீகொடுத் தருள்புரி விகிர்தா
செய்ய மேனிய னேதிகழ் ஒளியே
செங்க ணாதிரு வாவடு துறையுள்
ஐய னேயெனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 7

கோதி லாவமு தேஅருள் பெருகு
கோல மேஇமை யோர்தொழு கோவே
பாதி மாதொரு கூறுடை யானே
பசுப தீபர மாபர மேட்டி

---

5. இந்துசேகரன் – சந்திரனை முடித்தவன்.

7. விதி முதலே–பிரமாவுக்கும் முதல்வனானவனே; விதிக்கின்ற முதல்வனே எனலும் ஆம். ஆழியை அன்று அரி வேண்ட.

தீதி லாமலை யேதிரு வருள்சேர்
சேவ காதிரு வாவடு துறையுள்
ஆதி யேயெனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 8

வான நாடனே வழித்துணை மருந்தே
மாசி லாமணி யேமறைப் பொருளே
ஏன மாவெயி றாமையும் எலும்பும்
ஈடு தாங்கிய மார்புடை யானே
தேனெய் பால்தயிர் ஆட்டுகந் தானே
தேவ னேதிரு* ஆவடு துறையுள்
ஆனை யேயெனை அஞ்சல்என் றருளாய்
ஆர்எ னக்குற வமரர்கள் ஏறே. 9

வெண்ட லைப்பிறை கொன்றையும் அரவும்
வேரி மத்தமும் விரவிமுன் முடித்த
இண்டை மாமலர்ச் செஞ்சடை யானை
ஈச னைத்திரு வாவடு துறையுள்
அண்ட வாணனைச் சிங்கடி யப்பன்
அணுக்க வன்றொண்டன் ஆர்வத்தால் உரைத்த
தண்ட மிழ்மலர் பத்தும்வல் லார்கள்
சாத லும்பிறப் பும்மறுப் பாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மாசிலாமணி ஈசுவரர்

அம்பிகை: ஒப்பிலாமுலையம்மை

---

8. சேவகா – வீரனே.

9. ஏன மா எயிறு – பன்றியின் பெரிய கொம்பையும். ஈடு – இடுதலை. ஆட்டு – அபிடேகம். *'தேவதேவனே' என்றும் பாடம். 10. வேரி – வாசனை.

**வரலாறு:** சுந்தரர் திருவொற்றியூரில் இழந்த இருகண்ணில் ஒரு கண்ணைக் காஞ்சிபுரத்தில் பெற்றுத் திருவாரூரை நோக்கி வருகையில், இத்தலத்தைத் தரிசித்துப் பாடியது (**பெரிய புராணம்**, ஏயர்கோன், 296.)

---

## 6. திருநனிபள்ளி — பண்: பஞ்சமம்

*திருச்சிற்றம்பலம்*

ஆதியன் ஆதிரை யன்னயன் மால்அறி தற்கரிய
சோதியன் சொற்பொரு ளாய்ச்சுருங் காமறைநான்கினையும்
ஓதியன் உம்பர்தங் கோன்உல கத்தினுள் எவ்வுயிர்க்கும்
நாதியன் நம்பெரு மான்நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 1

உறவிலி ஊன மிலிஉண ரார்புரம் மூன்றெரியச்
செறுவிலி தன்னினை வார்வினை யாயின தேய்ந்தழிய
அறவில கும்மரு ளான்மரு ளார்பொழில்* வண்டறையும்
நறவிரி கொன்றையி னான்நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 2

வானுடை யான்பெரி யான்மனத் தாலும் நினைப்பரியான்
ஆனிடை ஐந்தமர்ந் தான்அணு வாகியொர் தீஉருக்கொண்
டூனுடை இவ்வுட லம்ஒடுங் கிப்புகுந் தான்பரந்தான்
நானுடை மாடெம் பிரான்நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 3

---

1. **ஆதிரையன்**–திருவாதிரை நட்சத்திரத்துக்கு உரியவன். **ஓதியன்**–உரைத்தவன். நாதியன்–பற்றுக்கோடாக இருப்பவன்.

2. எரியும் படியாகச் செற்றவில்லை-யுடையவன்; **விலி**-வில்லி. தன்னைத் தியானிப்பவர் பாவங்கள் தேய்ந்து அழியவும் அறவும் விளங்குகின்ற திருவருளை உடையவன். மருள்ஆர்–செறிவினாலிருண்டு மயக்கம் நிறைந்த. * 'மொழி' என்றும் பாடம்.

3. அமர்ந்தான்–**விரும்பியவன்**. மாடு–செல்வம்.

ஓடுடை யன்கல னுடை கோவண வன்னுமையோர்
பாடுடை யன்பலி தேர்ந்துணும் பண்புடை யன்பயிலக்
காடுடை யன்னிட மாமலை ஏழுங் கருங்கடல்சூழ்
நாடுடை நம்பெரு மான்நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 4

பண்ணற் கரிய தொருபடை ஆழி தனைப்படைத்துக்
கண்ணற் கருள்புரிந் தான்கரு தாதவர் வேள்விஅவி
உண்ணற் கிமையவ ரைஉருண் டோட உதைத்துகந்து
நண்ணற் கரிய பிரான்நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 5

மல்கிய செஞ்சடை மேல்மதி யும்மர வும்முடனே
புல்கிய ஆரணன் எம்புனி தன்புரி நூல்விகிர்தன்
மெல்கிய விற்றொழி லான்விருப் பன்பெரும் பார்த்தனுக்கு
நல்கிய நம்பெரு மான்நண்ணும் ஊர்நனி பள்ளியதே. 6

அங்கமொ ராறவை யும்மரு மாமறை வேள்விகளும்
எங்கும் இருந்தந் தணர்எரி மூன்றவை ஓம்பும்இடம்
பங்கய மாமுகத் தாள்உமை பங்கன் உறைகோயில்
செங்கயல் பாயும் வயல்திரு வூர்நனி பள்ளியதே. 7

---

4. கலனுக ஓட்டை உடையவன். ஓர் பாடு–ஒரு பக்கத்தில்.

5. படை ஆழி – சக்கராயுதம். கண்ணற்கு – கண்ணை அருச்சித்த திருமாலுக்கு. தன்னை எண்ணாத தக்கனைச் சார்ந்தோர் செய்த வேள்வியில் அவியை உண்டதற்காகத் தேவரை உருண்டு ஓடும்படி உதைத்து உகந்தவன்.

6. மல்கிய–நிறைந்த. ஆரணன் – வேதப்பொருளாக உள்ளவன். பெரும்பார்த்தனிடத்தில் மென்மையாகச் செய்த விற்றொழிலை உடையவன்.

7. அங்கம்–சாத்திரம். எரி மூன்று – ஆகவனீயம், தாக்ஷிணாக்கினி, காருகபத்தியம். முகத்தாளாகிய உமை.

திங்கட் குறுந்தெரி யல்திகழ் கண்ணியன் நுண்ணியனாய்
நங்கட் பிணிகளை வான்அரு மாமருந் தேழ்பிறப்பும்
மங்கத் திருவிர லால்அடர்த் தான்வல் அரக்கனையும்
நங்கட் கருளும் பிரான்நண் ணும் ஊர்நனி பள்ளியதே. 8

ஏன மருப்பி னொடும்எழில் ஆமையும் பூண்டுகந்து
வான மதில்அர ணம்மலை யேசிலை யாவளைத்தான்
ஊனமில் காழிதன் னுள்ளுயர் ஞானசம் பந்தர்க்கன்று
ஞானம் அருள்புரிந் தான்நண் ணும் ஊர்நனி பள்ளியதே. 9

காலமும் நாழிகை யுந்நனி பள்ளி மனத்தின்உள்கிக்
கோலம தாய வனைக்குளிர் நாவல ஊரன்சொன்ன
மாலை மதித்துரைப் பார்மண் மறந்துவா னோர்உலகில்
சாலநல் இன்பம்எய் தித்தவ லோகத் திருப்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: நற்றுணையப்பர்; அம்பிகை: பர்வதராசபுத்திரி.

---

## 7. திருவலம்புரம் — பண்: காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

எனக்கினித் தினைத்தனைப் புகலிடம் அறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்தமர்க் கினியவன் எழுமையும்
மனக்கினி யவன்றன திடம்வலம் புரமே. 1

---

8. ஏழ் பிறப்பாலும் அரிய பெரிய மருந்தாக இருப்பவன்.
9. ஆமை—இங்கே ஆமை ஓடு.
10. கோலமது ஆயவன்-அழகிய திருக்கோலமாகி நிற்பவன்.. தவலோகத்து—தவம் செய்தோர் வாழும் சிவலோகத்தில்.
1. தமர்க்கு – என் சுற்றத்தார்க்கு. மனக்கு – மனத்துக்கு.

புரமவை எரிதர வளைந்தவில் லினன்அவன்
மரவுரி புலியதள் அரைமிசை மருவினன்
அரவுரி இரந்தயன் இரந்துண விரும்பிநின்
றிரவெரி யாடிதன் இடம்வலம் புரமே. 2

நீறணி மேனியன் நெருப்புமிழ் அரவினன்
கூறணி கொடுமழு வேந்தியோர் கையினன்
ஆறணி அவிர்சடை அழல்வளர் மழலைவெள்
ஏறணி அடிகள்தம் இடம்வலம் புரமே. 3

கொங்கணை சுரும்புண நெருங்கிய குளிர்இளம்
தெங்கொடு பனைபழம் படும்இடந் தேவர்கள்
தங்கிடும் இடந்தடங் கடற்றிரை புடைதர
எங்கள தடிகள்நல் இடம்வலம் புரமே. 4

கொடுமழு விரகினன் கொலைமலி சிலையினன்
நெடுமதில் சிறுமையின் நிரவவல் லவனிடம்
படுமணி முத்தமும் பவளமும் மிகச்சுமந்
திடுமணல் அடைகரை இடம்வலம் புரமே. 5

கருங்கடக் களிற்றுரிக் கடவுள திடங்கயல்
நெருங்கிய நெடும்பெணை அடும்பொடு விரவிய
மருங்கொடு வலம்புரி சலஞ்சலம் மணம்புணர்ந்
திருங்கடல் அடைகரை இடம்வலம் புரமே. 6

நரிபுரி காடரங் காநடம் ஆடுவர்
வரிபுரி பாடநின் றாடும்எம் மான்இடம்
புரிசுரி வரிகுழல் அரிவையொர் பால்மகிழ்ந்
தெரியெரி யாடிதன் இடம்வலம் புரமே. 7

---

4. கொங்கு – பூந்தாது. 5. நெடுமதில் – திரிபுரங்களை.
6. அடும்பு–நெய்தல் நிலத்தில் படரும் ஒரு வகைக்கொடி.
7. வரி - பாட்டு.

பாறணி முடைதலை கலன்என மருவிய
நீறணி நிமிர்சடை முடியினன் நிலவிய
மாறணி வருதிரை வயல்அணி பொழிலது
ஏறுடை அடிகள்தம் இடம்வலம் புரமே. 8

சடசட விடுபெணை பழம்படும் இடவகை
படவட* கத்தொடு பலிகலந் துலவிய
கடைகடை பலிதிரி கபாலிதன் இடமது
இடிகரை மணல்அடை இடம்வலம் புரமே. 9

குண்டிகைப் படப்பினில் விடக்கினை ஒழித்தவர்
கண்டவர் கண்டடி வீழ்ந்தவர் கனைகழல்
தண்டுடைத் தண்டிதன் இனமுடை அரவுடன்
எண்டிசைக் கொருசுடர் இடம்வலம் புரமே. 10

---

8. பாறு – பருந்து. முடைதலை – புலால் நாற்றம் நாறும் கபாலம். கலன் – பிச்சை ஏற்கும் பாத்திரம்.

9. சடசட: ஒலிக்குறிப்பு. பெணை – பெண்ணை; பனை. பழம் படும் – பழம் வீழும். வடகத்தொடு பலி கலந்து உலவிய கடை கடை – பிறர் மேலாடையிலே பிச்சை வாங்கி உலாவிய வாயில்தோறும்; துறவியர் ஆடையில் பிட்சை பெறுவதை மாதூகர பிட்சை என்பர்; வடகம் – மேலாடை. * 'படபடகத் தொடு' என்றும் பாடம்.

10. குண்டிகைப் படப்பினில் – கமண்டலத்தை வைத்திருக்கும் இடத்தில் (உறைந்து). விடக்கினை ஒழித்தவர் – ஊன் உணவினை ஒழித்த துறவியர். கண்டவர் கண்டு அடிவீழ்ந்தவர் – கண்டவர்கள் கண்டவுடன் திருவடியில் விழுந்து வணங்கத் தக்கவர்; யதிகளைக் கண்டவுடன் வணங்குதல் மரபு. தண்டுடைத் தண்டி – தண்டந் தரித்த சந்நியாசி. இனமுடைச் சுடர் என்று கூட்டுக.

வருங்கல மும்பல பேணுதல் கருங்கடல்
இருங்குலப் பிறப்பர்தம் இடம்வலம் புரத்தினை
அருங்குலத் தருந்தமிழ் ஊரன்வன் றொண்டன்சொல்
பெருங்குலத் தவரொடு* பிதற்றுதல் பெருமையே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: வலம்புரநாதர்; அம்பிகை: வடுவகிர்க்கண்ணம்மை.

---

## 8. திருக்கடவூர் வீரட்டம் — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொடியார் மேனியனே புரி நூல்ஒரு பாற்பொருந்த
வடிவார் மூவிலைவேல் வளர் கங்கையின்§ மங்கையொடும்
கடியார் கொன்றையனே கட வூர்தனுள் வீரட்டத்தெம்
அடிகேள் என்அமுதே எனக் கார்துணை நீயலதே. 1

பிறையா ருஞ்சடையாய் பிர மன்தலை யிற்பலிகொள்
மறையார் வானவனே மறை யின்பொருள் ஆனவனே
கறையா ரும்மிடற்றாய் கட வூர்தனுள் வீரட்டத்தெம்
இறைவா என்அமுதே எனக் கார்துணை நீயலதே. 2

அன்றா லின்நிழற்கீழ் அறம் நால்வர்க் கருள்புரிந்து
கொன்றாய் கால னுயிர் கொடுத் தாய்மறையோ னுக்குமான்
கன்றா ருங்கரவா கட வூர்த்திரு வீரட்டத்துள்
என்தா தைபெருமான் எனக் கார்துணை நீயலதே. 3

---

11. கலம் - கப்பல். *'' தவர் கொடு' என்றும் பாடம்.

1. பொடி - திருநீறு. புரிநூல் - பூணூல். வடி - கூர்மை. கடி - நறுமணம். § 'அங்கையின்' என்றும் பாடம்.

3. காலன் உயிர்கொன்றாய், மறையோனுக்கு உயிர் கொடுத்தாய் என்று கூட்டுக; உயிர் - இடைநிலைத் தீவகம்.

போரா ருங்கரியின் னுரிபோர்த்துப்பொன் மேனியின்மேல்
வாரா ரும்முலையாள் ஒரு பாகம் மகிழ்ந்தவனே
காரா ரும்மிடற்றாய் கட வூர்தனுள் வீரட்டானத்
தாரா என்அமுதே எனக் கார்துணை நீயலதே. 4

மையார் கண்டத்தினாய் மத மாவுரி போர்த்தவனே
பொய்யா தென்உயிருட் புகுந் தாயின்னம் போந்தறியாய்
கையார் ஆடரவா கட வூர்தனுள் வீரட்டத்தெம்
ஐயா என்அமுதே எனக் கார்துணை நீயலதே. 5

மண்ணீர் தீவெளிகால் வரு பூதங்கள் ஆகிமற்றும்
பெண்ணோ டாணலியாய்ப் பிற வாஉரு ஆனவனே
கண்ணா ரும்மணியே கட வூர்தனுள் வீரட்டத்தெம்
அண்ணா என்அமுதே எனக் கார்துணை நீயலதே. 6

எரியார் புன்சடைமேல் இள நாகம் அணிந்தவனே
நரியா ருஞ்சுடலை நகு வெண்டலை கொண்டவனே
கரியார் ஈர்உரியாய் கட வூர்தனுள் வீரட்டத்தெம்
அரியாய் என்அமுதே எனக் கார்துணை நீயலதே. 7

வேறா உன்னடியேன் விளங் குங்குழைக் காதுடையாய்
தேறேன் உன்னையல்லாற் சிவ னேயென் செழுஞ்சுடரே
காறார் வெண்மருப்பா கட வூர்த்திரு வீரட்டத்துள்
ஆறார் செஞ்சடையாய் எனக் கார்துணை நீயலதே. 8

அயனோ டன்றரியும் அடி யும்முடி காண்பரிய
பயனே எம்பரனே பர மாய பரஞ்சுடரே

---

8. வேறா – தனியான சிறப்புடையவனே. காறு ஆர் – கொழுவைப் போன்றுள்ள.

கயமா ருஞ்சடையாய் கட வூர்த்திரு வீரட்டத்துள்
அயனே என்அமுதே எனக் கார்துணை நீயலதே. 9

காரா ரும்பொழில்சூழ் கட வூர்த்திரு வீரட்டத்துள்
ஏரா ரும்மிறையைத் துணை யாஎழில் நாவலர்கோன்
ஆரூ ரன்னடியான் அடித் தொண்டன் உரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பர லோகத் திருப்பாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அமிர்தகடேசுவரர்; அம்பிகை: அபிராமியம்மை.

---

## 9. திருக்கடவூர் மயானம் — பண்: பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மருவார் கொன்றை மதிசூடி மாணிக் கத்தின் மலைபோல
வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்
திருமால் பிரமன் இந்திரற்கும் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

விண்ணோர் தலைவர் வெண்புரிநூல் மார்பர் வேத கீதத்தர்
கண்ணார் நுதலர் நகுதலையர் கால காலர் கடவூரர்
எண்ணார் புரமூன் றெரிசெய்த இறைவருமையோர்ஒருபாகம்
பெண்ஆண் ஆவர் மயானத்துப் பெரிய பெருமானடிகளே.2

காயும் புலியின் அதளுடையர் கண்டர் எண்டோட் கடவூரர்
தாயும் தந்தை பல்லுயிர்க்குந் தாமே ஆய தலைவனார்

---

9. கயம் ஆரும் – கங்கை தங்குதற்குரிய பள்ளமாக உள்ள. அயனே – ஐயனே.

1. மரு–நறுமணம், தானவர்–அசுரர்.

2. உமை ஓர் பாகம் பெண் ஆவர்; ஒரு பாகம் ஆண் ஆவர்,

3. அதள்–தோல், கண்டர் – கழுத்தில் விசேடமுடையவர்.

பாயுவ்விடையொன் றதுவேறிப் பலிதேர்ந்துண்ணும் பரமேட்டி
பேய்கள் வாழும் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.

நறைசேர் மலரைங் கணையானை நயனத் தீயாற்பொடிசெய்த
இறையா ராவர் எல்லார்க்கு மில்லை என்று தருள்செய்வார்
பறையார் முழவம் பாட்டோடு பயிலுந்தொண்டர் பயில்கடவூர்ப்
பிறையார்சடையார் மயானத்துப்பெரிய பெருமானடிகளே.

கொத்தார் கொன்றை மதிசூடிக் கோள்நா கங்கள் பூணாக
மத்த யானை உரிபோர்த்து மருப்பும் ஆமைத் தாலியார்
பத்தி செய்து பாரிடங்கள் பாடி ஆடப் பலிகொள்ளும்
பித்தர் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 5

துணிவார்கீளுங்கோவணமுந் துதைந்து சுடலைப்பொடிஅணிந்து
பணிமேல் இட்ட பாசுபதர் பஞ்ச வடிமார் பினர்கடவூர்த்
திணிவார் குழையார் புரமூன்றுந் தீவாய்ப்படுத்த சேவகனார்
பிணிவார்சடையார்மயானத்துப்பெரியபெருமா னடிகளே.

காரார் கடலின் நஞ்சுண்ட கண்டர் கடவூர் உறைவாணர்
தேரா ரரக்கன் போய்வீழ்ந்து சிதைய விரலா லூன்றினார்
ஊர்தான் ஆவ துலகேழும் உடையார்க் கொற்றி யூராரூர்
பேரா யிரவர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. 7

வாடா முலையாள் தன்னோடும்மகிழ்ந்துகானில் வேடுவனாய்க்
கோடார் கேழற் பின்சென்று குறுகி விசயன் தவமழித்து
நாடா வண்ணஞ் செருச்செய்து ஆவ நாழி நிலையருள்செய்
பீடார் சடையார் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே.8

---

5. மருப்பும் ஆமையோடும் தாலியாக மார்பில் அணிபவர்; தாலி–மார்பில் தொங்கவிடும் ஆபரணம். பாரிடங்கள்–பூதங்கள்.

6. துதைந்து – பொருந்தி. பஞ்சவடி - மயிரால் செய்த பூணூல்.

8. கோடு–கொம்பு. ஆவநாழி–அம்பறுத்தூணி.

வேழம் உரிப்பர் மழுவாளர் வேள்வி அழிப்பர் சிரமறுப்பர்
ஆழி அளிப்பர் அரிதனக்கன் றானஞ் சுகப்பர்* அறமுரைப்பர்
ஏழைத் தலைவர் கடவூரில் இறைவர் சிறுமான் மறிக்கையர்
பேழைச் சடையர் மயானத்துப் பெரிய பெருமானடிகளே. 9

மாடம் மல்கு கடவூரில் மறையோர் ஏத்தும் மயானத்துப்
பீடை தீர அடியாருக் கருளும் பெருமா னடிகள்சீர்
நாடி நாவ லாரூரன் நம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடும் அடியார் கேட்பார்மேற் பாவம் ஆன பறையுமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பிரமபுரீசர் அம்பிகை: மலர்க்குழல் மின்னம்மை

---

## 10. திருநள்ளாறு — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

செம்பொன் மேனிவெண் ணீறணி வானைக்
கரிய கண்டனை மால்அயன் காணாச்
சம்பு வைத்தழல் அங்கையி னானைச்
சாம வேதனைத் தன்னொப்பி லானைக்
கும்ப மாகரி யின்னுரி யானைக்
கோவின் மேல்வருங் கோவினை எங்கள்
நம்ப னைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 1

---

9. ஆழி – சக்கரத்தை. ஆன் அஞ்சு – பஞ்சகவ்வியம். பேழைச்சடையர்–பாம்பு முதலியன இருத்தலின் பேழையைப் போலச் சடை உடையவர். * 'அரிதனக்கு வானஞ்சுகப்பர்' என்பது திரு. சுவாமிநாத பண்டிதர் பதிப்பில் கண்ட பாடம்.

10. பீடை–துன்பம். பறையும்–தேயும்.

1. கும்பம்–மத்தகம். கோவின்மேல்–இடபத்தின்மேல்.

விரைசெய் மாமலர்க் கொன்றையி னானை
வேத கீதனை மிகச்சிறந் துருகிப்
பரசு வார்வினைப் பற்றறுப் பானைப்
பாலொ டானஞ்சும் ஆடவல் லானைக்
குரை கடல்வரை ஏழுல குடைய
கோனை ஞானக் கொழுந்தினைத் தொல்லை *
நரைவிடை யுடைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 2

பூவில் வாசத்தைப் பொன்னினை மணியைப்
புவியைக் காற்றினைப் புனல்அனல் வெளியைச்
சேவின் மேல்வருஞ் செல்வனைச் சிவனைத்
தேவ தேவனைத் தித்திக்குந் தேனைக்
காவி யங்கண்ணி பங்கனைக் கங்கைச்
சடைய னைக்காம ரத்திசை பாட
நாவில் ஊறும்நள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 3

தஞ்சம் என்றுதன் தாளது வடைந்த
பாலன் மேல்வந்த காலனை உருள
நெஞ்சில் ஓர்உதை கொண்டபி ரானை
நினைப்ப வர்மனம் நீங்ககில் லானை
விஞ்சை வானவர் தானவர் கூடிக்
கடைந்த வேலையுள் மிக்கெழுந் தெரியும்
நஞ்சம் உண்டநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 4

---

2. பரசுவார் – புகழ்வார். * ‘கொழுந்தினைக் கொல்லை’ என்றும் பாடம்.

3. வெளி–ஆகாயம். சே–இடபம். காமரம் – ஒரு பண்.

4. பாலன்–மார்க்கண்டேயர். விஞ்சை–வித்தை.

மங்கை பங்கனை மாசிலா மணியை
வான நாடனை ஏனமோ டன்னம்
எங்கு நாடியுங் காண்பரி யானை
ஏழை யேற்கெளி வந்தபி ரானை
அங்கம் நான்மறை யால்நிறை கின்ற
அந்த ணாளர் அடியது போற்றும்
நங்கள் கோனைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 5

கற்ப கத்தினைக் கனகமால் வரையைக்
காம கோபனைக் கண்ணுத லானைச்
சொற்ப தப்பொருள் இருளறுத் தருளுந்
தூய சோதியை வெண்ணெய்நல் லூரில்
அற்பு தப்பழ ஆவணங் காட்டி
அடிய னாஎன்னை ஆளது கொண்ட
நற்ப தத்தைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 6

மறவ னைஅன் றுபன் றிப்பின் சென்ற
மாய னைநால்வர்க் காலின்கீழ் உரைத்த
அறவ னைஅம ரர்க்கரி யானை
அமரர் சேனைக்கு நாயக னானை
குறவர் மங்கைதன் கேள்வனைப் பெற்ற
கோனை நான்செய்த குற்றங்கள் பொறுக்கும்
நறைவி ரியும்நள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 7

---

6. காம கோபனை – காமனைச் சினந்து எரித்தவனை. ஆவணம்–அடிமையோலை.

7. மறவனை–வீரம் உடையவனை. மாயனை–பொய் வேடம் உடையவனை. அமரர் சேனைக்கு நாயகன்–முருகன்.

மாதி னுக்குடம் பிடங்கொடுத் தானை
மணியி னைப்பணி வார்வினை கெடுக்கும்
வேத னைவேத வேள்வியர் வணங்கும்
விமல னைஅடி யேற்கெளி வந்த
தூத னைத்தன்னைத் தோழமை அருளித்
தொண்ட னேன்செய்த துரிசுகள் பொறுக்கும்
நாத னைநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 8

இலங்கை வேந்தன் எழில்திகழ் கயிலை
எடுப்ப ஆங்கிம வான்மகள் அஞ்சத்
துலங்கு நீள்முடி ஒருபதுந் தோள்கள்
இருப துந்நெரித் தின்னிசை கேட்டு
வலங்கை வாளொடு நாமமுங் கொடுத்த
வள்ள லைப்பிள்ளை மாமதிச் சடைமேல்
நலங்கொள் சோதிநள் ளாறனை அமுதை
நாயி னேன்மறந் தென்நினைக் கேனே. 9

செறிந்த சோலைகள் சூழ்ந்தநள் ளாற்றெம்
சிவனை நாவலூர்ச் சிங்கடி தந்தை
மறந்து நான்மற்று நினைப்பதே தென்று
வனப்பகை யப்பன் ஊரன்வன் றொண்டன்
சிறந்த மாலைகள் அஞ்சினோ டஞ்சும்
சிந்தை யுள்ளுரு கிச்செப்ப வல்லார்க்
கிறந்து போக்கில்லை வரவில்லை யாகி
இன்ப வெள்ளத்துள் இருப்பர்க ளினிதே. 10

திருச்சிற்றம்பலம்

---

8. உடம்பு இடம்–உடம்பில் இடப்பாகத்தை. துரிசுகள்–குற்றங்களை.
9. நாமம்-இராவணனென்பது; அழுதவன் என்று பொருள்.
10. இறந்து போக்கு–செத்துப் போதல். வரவு–பிறவி.

# 11. திருவீழிமிழலை — பண்: சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

நம்பி னார்க்கருள் செய்யு மந்தணர் நான்ம றைக்கிட மாய
செம்பொ னேர்மட வாரணி பெற்ற திருமிழலை [வேள்வியுள்
உம்பரார்தொழுதேத்தமாமலை யாளொடும்முடனேஉறைவிட
மம்பொன் வீழிகொண் டீர்அடி யேற்கும் அருளுதிரே. 1

விடங்கொள் மாமிடற் றீர்வெள் ளைச்சுருள் ஒன்றிட்டு
விட்ட காதினீர் என்று
திடங்கொள் சிந்தையி னார்கலி காக்குந் திருமிழலை
மடங்கல்பூண்டவிமானமண்மிசை வந்திழிச்சியவானநாட்டையும்
அடங்கல் வீழிகொண் டீர்அடி யேற்கும் அருளுதிரே. 2

ஊனை உற்றுயிர் ஆயி னீர்ஒளி மூன்று மாய்த்தெளி நீரோ
தேனை ஆட்டுகந் தீர்செழு மாடத் திருமிழலை [டானஞ்சின்
மானை மேவிய கையி னீர்மழு ஏந்தினீர்மங்கை பாகத் தீர்விண்ணி
லான வீழிகொண் டீர்அடி யேற்கும் அருளுதிரே. 3

பந்தம் வீடிவை பண்ணி னீர்படி றீர்ம திப்பிதிர்க் கண்ணி
யீரென்று
சிந்தைசெய் திருக்குஞ் செங்கை யாளர் திருமிழலை

---

1. செம்பொன் நேர் மடவார் – சிவந்த திருமகளை ஒத்த மகளிர்.

2. சுருள் – தோடு. கலிகாக்கும் – துன்பத்தை வராமல் பாதுகாக்கும். மடங்கல் – சிங்கம். இழிச்சிய – இறங்கச் செய்த. திருவீழிமிழலையில் விண்ணிழி விமானம் உண்டு. திருமால் கொண்டு வந்தாரென்பது தல வரலாறு.

3. ஊனை உற்று – உடம்பை அடைந்து. ஒளி மூன்று – சந்திர சூரியாக்கினிகள்.

4. படிறீர் – பட்சபாதம் உடையீர். மதி தலையிற் சூடுவதாதலின் அதைக் கண்ணியென்றார். மதிப்பிதிர் – பிறை. வானநாடியர் – வானுலகத்திலுள்ள அரம்பையர்.

வந்து நாடகம் வான நாடியர் ஆட மாலயன் ஏத்த நாடொறு
மந்தண் வீழிகொண் டீர்அடி யேற்கும் அருளுதிரே. 4

புரிசை மூன்றையும் பொன்றக் குன்றவில் ஏந்தி வேதப்
புரவித் தேர்மிசைத்
திரிசெய் நான்மறை யோர்சிறந் தேத்துந் திருமிழலைப்
பரிசினலடி போற்றும் பத்தர்கள் பாடிஆடப் பரிந்துநல்கினீ
ரரிய வீழிகொண் டீர்அடி யேற்கும் அருளுதிரே. 5

எறிந்த சண்டி இடந்த கண்ணப்பன் ஏத்து* பத்தர்கட் கேற்றம்
செறிந்த பூம்பொழில் தேன்துளி வீசுந் திருமிழலை [நல்கினீர்
நிறைந்த அந்தணர் நித்தநாடொறும் நேசத்தா லுமைப் பூசிக்கும்
அறிந்து வீழிகொண் டீரடி யேற்கும் அருளுதிரே. [மிடம்

பணிந்தபார்த்தன் பகீரதன்பல பத்தர்சித்தர்க்குப் பண்டுநல்
திணிந்த மாடந்தொறுஞ் செல்வம்மல்கு திருமிழலைத் [கினீர்
தணிந்த அந்தணர் சந்தி நாடொறும் அந்திவானிடு பூச்சிறப்பவை
அணிந்து வீழிகொண் டீர்அடி யேற்கும் அருளுதிரே. 7

பரந்தபாரிடம் ஊரிடைப்பலி பற்றிப் பார்த்துணுஞ் சுற்றமா
தெரிந்த நான்மறை யோர்க்கிடம் ஆகிய திருமிழலை [யினீர்
இருந்துநீர்தமிழோடிசைகேட்குமிச்சையாற்காசுநித்தல்நல்கினீ
ரருந்தண் வீழிகொண் டீர்அடி யேற்கும் அருளுதிரே. 8

---

5. பொன்ற – அழிய. பரிந்து – விரும்பி.

6. எறிந்த சண்டி – தம் தந்தை காலை வெட்டிய சண்டேச நாயனார். கண்ணை இடந்த. * 'ஏற்ற' என்றும் பாடம்.

7. பார்த்தன் – அருச்சுனன். திணிந்த – வளம் செறிந்த. தணிந்த – சினம் ஆறிய; சாந்த இயல்புடைய. சந்திதோறும், நாள்தோறும் எனக் கூட்டுக.

8. பாரிடம் – பூதம். காசு நித்தல் நல்கினீர் ; இத்தலத்தில் ஞானசம்பந்தருக்கும் அப்பர் சுவாமிகளுக்கும் சிவபெருமான் படிக்காசு அருளினார்.

தூய நீரமு தாய வாறது சொல்லு கென்றுமைக் கேட்கச்
தீய ராக்குலை யாளர் செழுமாடத் திருமிழலை [சொல்லினீர்
மேயநீர்பலி ஏற்றதென்னென்று விண்ணப்பஞ் செய்பவர்க்குமெ
ளாய வீழிகொண் டீர்அடி யேற்கு மருளுதிரே. [ய்ப்பொரு

வேதவேதியர் வேத நீதியர் ஓது வார்விரி நீர்மிழலையுள்
ஆதி வீழிகொண் டீர்அடி யேற்கும் மருளுகென்று
நாத கீதம்வண் டோதுவார்பொழில் நாவலூரன்வன் றொண்டன்
பாதம் ஓதவல் லார்பர னோடு கூடுவரே. [நற்றமிழ்

திருச்சிற்றம்பலம்

சுவாமி: வீழியழகர்; அம்பிகை: சுந்தரகுசாம்பிகையம்மை.

---

## 12. திருநறையூர்ச் சித்தீச்சரம் — பண்: குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

நீரும் மலரும் நிலவும் சடைமேல்
ஊரும் மரவம் உடையான் இடமாம்
வாரும் மருவி மணிபொன் கொழித்துச்
சேருந் நறையூர்ச் சித்தீச் சரமே. 1

அளைப்பை அரவேர் இடையாள் அஞ்சத்
துளைக்கைக் கரித்தோல் உரித்தான் இடமாம்
வளைக்கைம் மடவார் மடுவில் தடநீர்த்
திளைக்குந் நறையூர்ச் சித்தீச் சரமே. 2

---

9. தீயர் ஆக்கு உலையாளர் – வேள்வித் தீயை உடைய அந்தணரும், பிறருக்கு உணவிடும்பொருட்டு ஆக்கும் உலையை யுடைய அறவாணரும் வாழும்.

10. வண்டு நாதகீதத்தை ஓதும் வார்பொழில்.

2. அளை பை அரவு – வளையில் வாழும் படத்தையுடைய பாம்பு. மடவார் நீரில் திளைக்கும்.

இகழுந் தகையோர் எயில்மூன் றெரித்த
பகழி யொடுவில் உடையோன் பதிதான்
முகிழ்மென்* முலையார் முகமே கமலம்
திகழுந் நறையூர்ச் சித்தீச் சரமே. 3

மறக்கொள் அரக்கன் வரைதோள் வரையால்
இறக்கொள் விரற்கோன் இருக்கும் இடமாம்
நறக்கொள் கமலந் நனிபள் ளிஎழத்
திறக்குந் நறையூர்ச் சித்தீச் சரமே. 4

முழுநீ றணிமே னியன்மொய் குழலார்
எழுநீர் மைகொள்வான் அமரும் இடமாம்
கழுநீர் கமழக் கயல்சேல் உகளும்
செழுநீர் நறையூர்ச் சித்தீச் சரமே. 5

ஊனு ருடைவெண் டலைஉண் பலிகொண்
டானூர் அடலே றமர்வான் இடமாம்
வானூர் மதியம் பதிவண் பொழில்வாய்த்
தேனூர் நறையூர்ச் சித்தீச் சரமே. 6

காரூர் கடலில் விடம்உண் டருள்செய்
நீரூர் சடையன் னிலவும் மிடமாம்
வாரூர் முலையார் மருவும் மறுகில்
தேரூர் நறையூர்ச் சித்தீச் சரமே. 7

---

3. எயில்–மதில். பகழி–அம்பு. கமலம்போலத்திகழும்.
* 'முகிண்மென்' என்றும் பாடம்.

4. நற–தேன். நனி பள்ளி எழ – உள்ளே உள்ள வண்டு நன்றாகத் துயில் நீங்கும் படியாக.

6. மதியம் பதிந்த பொழில்.

7. தேர் ஊர்–திருந்தேர் செல்கின்ற.

கரியின் னுரியுங் கலைமான் மறியும்
எரியும் மழுவும் உடையான் இடமாம்
புரியும் மறையோர் நிறைசொற் பொருள்கள்
தெரியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. 8

பேணா முனிவன் பெருவேள் வியெலாம்
மாணா மைசெய்தான் மருவும் மிடமாம்
பாணார் குழலும் முழவும் விழவில்
சேணார் நறையூர்ச் சித்தீச் சரமே. 9

குறியில் வழுவாக் கொடுங்கூற் றுதைத்த
எறியும் மழுவாட் படையான் இடமாம்
நெறியில் வழுவா நியமத் தவர்கள்
செறியுந் நறையூர்ச் சித்தீச் சரமே. 10

போரார் புரமெய் புனிதன் அமரும்
சீரார் நறையூர்ச் சித்தீச் சரத்தை
ஆரூ ரன்சொல் லிவைவல் லவர்கள்
ஏரார் இமையோர் உலகெய் துவரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: சித்தநாதர்
அம்பிகை: அழகம்மை

---

9. பேணா முனிவன்—தன்னைப் பூசியாத தக்கன். மாணாமை செய்தான்—சிறப்படையாமல் அழியச்செய்தான். பாண்—பாட்டு. சேண் ஆர்—நெடுந்தூரம் முழங்கும்.

10. குறி – இன்ன உயிரை இன்னகாலத்தில் கொள்ள வேண்டும் என்ற இலக்கு. நியமம்—விரதம்.

## 13. திருஅரிசிற்கரைப்புத்தூர் — பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

மலைக்கு மகள் அஞ்ச மதகரியை உரித்தீர்
எரித்தீர் வருமுப் புரங்கள்
சிலைக்குங் கொலைச்சே வுகந்தேற் றொழியீர்
சில்பலிக் கில்கள்தொறுஞ் செலவொழியீர்
கலைக்கொம் புங்கரி மருப்பும் மிடறிக்
கலவம் மயிற்பீலியுங் காரகிலும்
அலைக்கும் புனல்சேர் அரிசில் தென்கரை
அழகார் திருப்புத்தூர் அழகனீரே. 1

அருமல ரோன்சிரம் ஒன்றறுத் தீர்செறுத்
தீரழற் சூலத்தில் அந்தகனைத்
திருமகள் கோனெடு மால்பல நாள்சிறப்
பாகிய பூசனை செய்பொழுதில்
ஒருமலர் ஆயிரத் திற்குறை வா*நிறை
வாகஓர் கண்மலர் சூட்டலுமே
பொருவிறல் ஆழி புரிந்தளித் தீர்பொழில்
ஆர்திருப் புத்தூர்ப் புனிதனீரே. 2

தரிக்குந் தரைநீர் தழல்காற் றந்தரம்
சந்திரன் சவிதா இயமானன் ஆனீர்
சரிக்கும் பலிக்குத் தலைஅங்கை ஏந்தித்
தையலார் பெய்யக்கொள் வதுதக்க தன்றால்

1. சிலைக்கும் – முழங்கும். சே – இடபம்.

2. புரிந்து – விரும்பி. * 'குறைவால்' என்றும் பாடம்.

3. அந்தரம் – ஆகாசம். சவிதா – சூரியன். அட்டமூர்த்தியென்றபடி. சரிக்கும் – உலவும். மூரிக்கும் – தளிர்க்கும்.

முரிக்குந் தளிர்ச்சந் தனத்தொடு வேயும்
முழங்குந் திரைக்கைக ளால்வாரி மோதி
அரிக்கும் புனல்சேர் அரிசிற் றென்கரை
அழகார் திருப்புத்தூர் அழகனீரே. 3

கொடியுடை மும்மதில் வெந்தழி யக்குன்றம்
வில்லா நாணியிற் கோல்ஒன் றினால்
இடிபட எய்தெரித் தீர்இமைக் கும்அள
வில்உமக் கார்எதிர் எம்பெருமான்
கடிபடு பூங்கணை யான்கருப் புச்சிலைக்
காமனை வேவக் கடைக்கண்ணினால்
பொடிபட நோக்கிய தென்னை கொல்லோ
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே. 4

வணங்கித் தொழுவா ரவர்மால் பிரமன்
மற்றும் வானவர் தானவர் மாமுனிவர்
உணங்கல் தலையிற் பலிகொண் டல்என்னே
உலகங்கள் எல்லாம் உடையீர் உரையீர்
இணங்கிக் கயல்சேல் இளவா ளைபாய
இனக்கெண் டைதுள்ளக் கண்டிருந் தஅன்னம்
அணங்கிக் குணங்கொள் ளரிசிற் றென்கரை
அழகார் திருப்புத்தூர் அழகனீரே. 5

அகத்தடிமை செய்யும் அந்தணன் றான்அரி
சிற்புனல் கொண்டுவந் தாட்டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையும் நும்முடி
மேல்விழுத் திட்டு நடுங்குதலும்

---

4. கோல் – அம்பு. இமைக்கும் அளவில் எரித்தீர்.

5. உணங்கல் தலை – ஊன் உலர்ந்த கபாலம். கொண்டல் – கொள்ளுதல்.

வகுத்தவ னுக்கு நித்தற் படியும்
வருமென் றொருகாசினை நின்றநன்றிப்
புகழ்த்துணை கைப்புகச் செய்துகந்தீர்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே. 6

பழிக்கும் பெருந்தக்கன் எச்சம் மழியப்
பகலோன் முதலாப் பலதே வரையும்
தெழித்திட் டவரங் கஞ்சிதைத் தருளும்
செய்கைஎன்னைகொலோமைகொள்செம்மிடற்றீர்
விழிக்குந் தழைப்பீ லியொடே லம்உந்தி
விளங்கும் மணிமுத் தொடுபொன் வரன்றி
அழிக்கும் புனல்சேர் அரிசிற் றென்கரை
அழகார் திருப்புத்தூர் அழகனீரே. 7

பறைக்கண் நெடும்பேய்க் கணம்பாடல் செய்யக்
குறட்பா ரிடங்கள் பறைதாம் முழக்கப்
பிறைக்கொள் சடைதா ழப்பெயர்ந்து நட்டம்
பெருங்கா டரங்காக நின்றாடல் என்னே

6. அந்தணன் – புகழ்த்துணை நாயனார். ஆதிசைவராகிய இவர் சிவபெருமானை வழிபடுபவர்; பஞ்சம் வந்தபோது பட்டினி கிடந்து இறைவருக்கு அபிடேகம் செய்கையில் தளர்ச்சியடைந்து திருமஞ்சனக் குடத்தை இறைவர் முடிமேல் போட்டு விழுந்தார். இறைவர் அவருக்குத் தினமும் ஒரு படிக்காசு அருளினார்.

7. எச்சம்-யஞ்ஞம்; வேள்வி. பகலோன்–சூரியன். தெழித்திட்ட – முழங்கிய. இயல்பாகச் சிவந்த மிடறு நீலநிறம் பெற்றதாதலின், 'மைகொள் செம்மிடற்றீர்' என்றார். அருள் நிரம்பிய செம்மையை உடையதென்பதும் ஆம். வரன்றி – அரித்து.

8. குறள் பாரிடங்கள்–குட்டையான பூதங்கள். கரத்திலும் சிரத்திலும் (ஆபரணமாகவும்), (இடையிலே) கச்சாகவும் அரவம் புனைந்தீர்.

கறைக்கொள் மணிகண் டமுந்திண் டோள்களும்
கரங்கள் சிரந்தன் னிலுங்கச்சு மாகப்
பொறிக்கொள் ளரவம் புனைந்தீர் பலவும்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதனீரே. 8

மழைக்கண் மடவாளை ஓர்பாகம் வைத்தீர்
வளர்புன் சடைக்கங் கையைவைத் துகந்தீர்
முழைக்கொள் ளரவோ டென்பணி கலனா
முழுநீறு மெய்பூசு தல்என் னைகொலோ
கழைக்கொள் கரும்புங் கதலிக் கனியும்
கமுகின் பழுக்காயுங் கவர்ந்து கொண்டிட்
டழைக்கும் புனல்சேர் அரிசிற் றென்கரை
அழகார் திருப்புத்தூர் அழகனீரே. 9

கடிக்கும் மரவால் மலையால் அமரர்
கடலைக் கடைய எழுகாள கூடம்
ஒடிக்கும் முலகங் களைஎன் றதனை
உமக்கே அமுதாக உண்டீர் உமிழீர்
இடிக்கும் மழைவீழ்த் திழுத்திட் டருவி
இருபா லும்ஓடி இரைக்குந் திரைக்கை
அடிக்கும் புனல்சேர் அரிசிற் றென்கரை
அழகார் திருப்புத்தூர் அழகனீரே. 10

காரூர் மழைபெய் துபொழி அருவிக்
கழையோ டகிலுந் திட்டிரு கரையும்
போரூர் புனல்சேர் அரிசிற் றென்கரைப்
பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதர் தம்மை

---

9. புன்சடை – சிவந்த சடை. அழைக்கும் – ஒலிக்கும்.
10. கடிக்கும் அரவால், ஒடிக்கும் உலகம், ஒடிக்கும்–அழிக்கும், இரைக்கும். காளகூடம் – நஞ்சு.
11. கழை – மூங்கில்.

ஆரூரன் அருந் தமிழைந் திணைடைந்
தழகால் உரைப்பார் களுங்கேட் பவரும்
சீரூர் தருதே வர்கணங் களொடும்
இணங்கிச் சிவலோகம தெய்துவரே. 11

திருச்சிற்றம்பலம்

*சுவாமி: படிக்காசு வைத்த பரமர்; அம்பிகை: அழகம்மை.*

**வரலாறு:** *திருநறையூர்ச் சித்தீச்சரத்தைப் பணிந்து, தொண்டர்கள் ஆர்வத்தோடு வரவேற்க, அரிசிற்கரைப்புத்தூர் வந்து இப்பதிகம் பாடினார் ஆளுடைய நம்பியார் (பெரியபுராணம், ஏயர்கோன், 61-63.)*

---

## 14. திருக்கலயநல்லூர் — பண்: தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

குரும்பைமுலை மலர்க்குழலி கொண்டதவங் கண்டு
குறிப்பினொடுஞ்சென்றவள்தன் குணத்தினைநன் கறிந்து
விரும்புவரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த
விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியவூர் வினவில்
அரும்பருகே சுரும்பருவ அறுபதம்பண் பாட
அணிமயில்கள் நடமாடும் அணிபொழில்சூழ் அயலின்
கரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கள் முகமலரும் கலயநல்லூர் காணே. 1

செருமேவு சலந்தரனைப் பிளந்தசுடர் ஆழி
செங்கண்மலர் பங்கயமாச் சிறந்தானுக் கருளி
இருள்மேவும் அந்தகன்மேல் திரிசூலம் பாய்ச்சி
இந்திரனைத் தோள்முரிந்த இறையவனூர் வினவில்

---

1. பார்வதிதேவியார் தவஞ்செய்து இறைவரை மணந்ததைக் குறித்தபடி. அருவ—அணைய. சுரும்பு, அறுபதம்—வண்டு.

2. கண்மலர் தாமரையாகத் தோன்றிச்சிறக்கும் திருமால்.

பெருமேதை மறையொலியும் பேரிமுழ வொலியும்
பிள்ளையினந் துள்ளிவிளை யாட்டொலியும் பெருகக்
கருமேதி புனல்மண்டக் கயல்மண்டக் கமலம்
களிவண்டின் கணம்இரியும் கலயநல்லூர் காணே. 2

இண்டைமலர் கொண்டுமணல் இலிங்கமது வியற்றி
இனத்தாவின் பாலாட்ட இடறியதா தையைத்தாள்
துண்டமிடு சண்டியடி அண்டர்தொழ தேத்தத்
தொடர்ந்தவனைப் பணிகொண்ட விடங்கனதூர் வினவில்
மண்டபமும் கோபுரமும் மாளிகைசூ ளிகையும்
மறைஒலியும் விழவொலியும் மறுகுநிறை வெய்திக்
கண்டவர்கண் மனங்கவரும் புண்டரிகப் பொய்கைக்
காரிகையார் குடைந்தாடுங் கலயநல்லூர் காணே. 3

மலைமடந்தை விளையாடி வளையாடு கரத்தால்
மகிழ்ந்தவள்‡கண் புதைத்தலுமே வல்லிருளாய் எல்லா
உலகுடன்றான் மூடவிருள் ஓடும்வகை நெற்றி
ஒற்றைக்கண் படைத்துகந்த உத்தமனூர் வினவில்
அலைஅடைந்த புனல்பெருகி யானைமருப் பிடறி
அகிலொடுசந் துந்திவரும் அரிசிலின்தென் கரைமேல்
கலையடைந்து கலிகடியந் தணர்ஓமப் புகையால்
கணமுகில்போன் றணிகிளருங் கலயநல்லூர்காணே.4

நிற்பானும் கமலத்தில் இருப்பானும் முதலா
நிறைந்தமரர் குறைந்திரப்ப நினைந்தருளி யவர்க்காய்
வெற்பார்வில் அரவுநாண் எரிஅம்பால் விரவார்
புரமூன்றும் எரிவித்த விகிர்தனூர் வினவில்

---

3. இலிங்கமது இயற்றி. சண்டி—சண்டேச நாயனர்.
4. சந்து—சந்தனம். கலை – சாத்திரம். ‡ 'மகிழ்ந்தவன்' என்றும் பாடம்.

சொற்பால பொருட்பால சுருதிஒரு நான்கும்
தோத்திரமும் பலசொல்லித் துதித்திறைதன் திறத்தே
கற்பாருங் கேட்பாரு மாயெங்கும் நன்கார்
கலைபயில்அந் தணர்வாழுங் கலயநல்லூர் காணே. 5

பெற்றிமைஒன் றறியாத தக்கனது வேள்விப்
பெருந்தேவர் சிரந்தோள்பல் கரங்கண்பீ டழியச்
செற்றுமதிக்* கலைசிதையத் திருவிரலால் தேய்வித்
தருள்பெருகு சிவபெருமான் சேர்தரும்ஊர் வினவில்
தெற்றுகொடி முல்லையொடு மல்லிகைசெண் பகமும்
திரைபொருதுவருபுனல்சேர் அரிசிலின்தென்கரைமேல்
கற்றினம்நன் கரும்பின்முளை கறிகற்கக் கறவை
கமழ்கழுநீர் கவர்கழனிக் கலயநல்லூர் காணே. 6

இலங்கையர்கோன் சிரம்பத்தோ டிருபதுதிண் தோளும்
இற்றலற ஒற்றைவிரல் வெற்பதன்மேல் ஊன்றி
நிலங்கிளர்நீர் நெருப்பொடுகாற் றுகாசம் ஆகி
நிற்பனவும் நடப்பனவாம் நின்மலன்ஊர் வினவில்
பலங்கள்பல திரைஉந்திப் பருமணிபொன் கொழித்துப்
பாதிரிசந் தகிலினொடு கேதகையும் பருகிக்
கலங்குபுனல் அலம்பிவரும் அரிசிலின்தென் கரைமேல்
கயல்உகளும் வயல்புடைசூழ் கலயநல்லூர் காணே. 7

---

5. நிற்பான் – உலகை அளக்க நிமிர்ந்து நின்ற திருமால். விரவார்-பகைவர். சொற்பால சுருதி ஒருநான்கும், பொருட் பால சுருதித் தோத்திரமும் எனக்கூட்டிச் சொல்லமைதியால் சுருதியான நான்கு வேதமும், பொருள் வகையால் சுருதியோடொத்த தோத்திரங்களாகிய திருஞானசம்பந்தர் தேவாரம்முதலியனவும் எனக்கொள்ளுதல் பொருந்தும்.

6, * 'செற்றுமதி' என்றும் பாடம். கன்று இனம்–பசுவின் கன்றுகள். கறி கற்க – கறித்தலைக்கற்க. கறவை–கறக்கும்பசு.

7. பலங்கள் – பழங்கள், கேதகை – தாழை. அலம்பி – ஒலித்து. உகளும்- துள்ளும்.

மாலயனுங் காண்பரிய மால்எரியாய் நிமிர்ந்தோன்
வன்னிமதி சென்னிமிசை வைத்தவன்மொய்த்தெழுந்த
வேலைவிடம் உண்டமணி கண்டன்விடை ஊரும்
விமலன்உமை யவளோடு மேவியஊர் வினவில்
சோலைமலி குயில்கூவக் கோலமயில் ஆலச்
சுரும்பொடுவண் டிசைமுரலப் பசுங்கிளிசொல் துதிக்கக்
காலையிலும் மாலையிலும் கடவுள்அடி பணிந்து
கசிந்தமனத் தவர்பயிலுங் கலயநல்லூர் காணே. 8

பொரும்பலம துடையசுரன் தாரகனைப் பொருது
பொன்றுவித்தபொருளினை*முன் படைத்துகந்தபுனிதன்
கரும்புவிலின் மலர்வாளிக் காமன்உடல் வேவக்
கனல்விழித்த கண்ணுதலோன் கருதும்ஊர் வினவில்
இரும்புனல்வெண் திரைபெருகி ஏலம்இல வங்கம்
இருகரையும் பொருதலைக்கும் அரிசிலின்தென் கரைமேல்
கரும்புனைவெண் முத்தரும்பிப் பொன்மலர்ந்து பவளக்
கவின்காட்டுங் கடிபொழில்சூழ் கலயநல்லூர் காணே.

தண்கமலப் பொய்கைபுடை சூழ்ந்தழகார் தலத்தில்
தடங்கொள்பெருங் கோயில்தனில் தக்கவகை யாலே
வண்கமலத் தயன்முன்னாள் வழிபாடு செய்ய
மகிழ்ந்தருளி இருந்தபரன் மருவியஊர் வினவில்
வெண்கவரி கரும்பீலி வேங்கையொடு கோங்கின்
விரைமலரும் விரவுபுனல் அரிசிலின்தென் கரைமேல்
கண்கமுகின் பூம்பாளை மதுவாசங் கலந்த
கமழ்தென்றல் புகுந்துலவு கலயநல்லூர் காணே. 10

---

8. சுரும்பு, வண்டு–வெவ்வேறு வகை வண்டினம்.

9. பொருள் – பிள்ளை; இங்கே முருகன். * 'பொன்னினை' என்றும் பாடம். கரும்புன்னை. முத்தென்றது அரும்பை; பொன் என்றது பூந்தாதை; பவளம் என்றது மலரின் உட்பகுதியை.

தண்புனலும் வெண்மதியும் தாங்கியசெஞ் சடையன்
　　தாமரையோன் தலைகலனாக் காமரமுன் பாடி
உண்பலிகொண் டுழல்பரமன் உறையும்ஊர் நிறைநீர்
　　ஒழுகுபுனல் அரிசிலின்தென் கலயநல்லூர் அதனை
நண்புடைய நன்சடையன் இசைஞானி சிறுவன்
　　நாவலர்கோன் ஆரூரன் நாவின்நயந் துரைசெய்
பண்பயிலும் பத்தும்இவை பத்திசெய்து பாட†
　　வல்லவர்கள்§ அல்லலொடு பாவம்இலர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அமிர்தகலாநாதர்; அம்பிகை: அமிர்தவல்லி.

---

## 15. திருவாஞ்சியம் — பண்: பியந்தைக் காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பொருவ னார்புரி நூலர் புணர்முலை உமையவ ளோடு
மருவ னார்மரு வார்பால் வருவதும் இல்லைநம் அடிகள்
திருவ னார்பணிந் தேத்தும் திகழ்திரு வாஞ்சியத் துறையும்
ஒருவ னார்அடி யாரை ஊழ்வினை* நலியஒட் டாரே. 1

தொறுவில் ஆனிள ஏறு துண்ணென இடிகுரல் வெருவிச்
செறுவில் வாளைகள் ஓடச் செங்கயல் பங்கயத் தொதுங்கக்
கறுவி லாமனத் தார்கள் காண்டகு வாஞ்சியத் தடிகள்
மறுவி லாதவெண் ணீறு பூசுதல் மன்னுமொன் றுடைத்தே.

---

*11.* காமரம்-ஒரு பண். சடையன் இசைஞானி - சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய தந்தைதாயர். † 'நித்தம்'; § 'பாடவல்லார்' என்றும் பாடம்.

*1.* பொருவனார்-தமக்கு உவமை தாமே ஆனவர்; உயர்ந்தாருக்கெல்லாம் உவமையாக நிற்பவர் எனலும் ஆம்; பொரு - உவமை. * 'உளவினை' என்றும் பாடம்.

*2.* தொறு-பசு மந்தை. செறு-வயல். கறு-பகை. மன்னும் ஒன்று உடைத்தே-நிலைபெற்ற கருத்தொன்றை உடையது.

தூர்த்தர் மூவெயில் எய்து சுடுநுனைப் பகழிய தொன்றால்
பார்த்த னார்திரள் தோள்மேற் பன்னுனைப் பகழிகள் பாய்ச்சித்
தீர்த்த மாமலர்ப் பொய்கைத் திகழ்திரு வாஞ்சியத் தடிகள்
சாத்து மாமணிக் கச்சங் கொருதலை பலதலை உடைத்தே. 3

சள்ளை வெள்ளையங் குருகு தானது வாமெனக் கருதி
வள்ளை வெண்மலர் அஞ்சி மறுகியோர் வாளையின் வாயில்
துள்ளு தெள்ளுநீர்ப் பொய்கைத் துறைமல்கு வாஞ்சியத் தடிகள்
வெள்ளை நுண்பொடிப் பூசும் விகிர்தம்ஒன் றொழிகிலர் தாமே.

மைகொள் கண்டர்எண் தோளர் மலைமக ளுடனுறை வாழ்க்கைக்
கொய்த கூவிள மாலை குலவிய சடைமுடிக் குழகர்
கைதை நெய்தலங் கழனி கமழ்புகழ் வாஞ்சியத் தடிகள்
பைதல் வெண்பிறை யோடு பாம்புடன் வைப்பது பரிசே. 5

கரந்தை கூவிள மாலை கடிமலர்க் கொன்றையுஞ் சூடிப்
பரந்த பாரிடஞ் சூழ வருவர்நம் பரமர்தம் பரிசால்
திருந்து மாடங்கள் நீடு திகழ்திரு வாஞ்சியத் துறையும்
மருந்த னார்அடி யாரை வல்வினை நலியஒட் டாரே. 6

அருவி பாய்தரு கழனி அலர்தரு குவளையங் கண்ணார்
குருவி யாய்§கிளி சேப்பக்‡ குருகினம் இரிதரு கிடங்கில்

---

3. தூர்த்தர் – இழிதகையோர்களுடைய. நுனை – முனை. பகழி–அம்பு. பகைவரை அம்பு ஒன்றால் எய்து, அன்புடையான் பால் பல அம்புகளை எய்தார் என்றது ஒரு நயம்.

4. சள்ளை – தனக்குத் துன்பத்தைத் தரும். வள்ளையின் வெண்மலரை வெண்குருகென்று எண்ணி அஞ்சி,

5. பைதல்–பசுமை; இங்கே இளமை. ஒன்றுக்கு ஒன்று பகைமையையுடைய பிறையையும் பாம்பையும் உடன் வைப்பது நியாயமா? பரிசு – முறை. 6. பாரிடம் – பூதம்.

7. கழனியில் அலர்தரு குவளை. குருவியும் அழகிய கிளியும் வந்து தங்க. § 'பாய்'; ‡ 'சேர்ப்பக்' என்றும் பாடம். இரிதரு– ஓடுகின்ற. இருவர்–திருமாலும் பிரமனும்,

பருவரால்குதிகொள்ளும் பைம்பொழில்வாஞ்சியத்துறையும்
இருவ ராலறி யொண்ணு இறைவனை தறைகழல் சரணே. 7

களங்கள் ஆர்தரு கழனி அளிதரக் களிதரு வண்டு
உளங்க ளார்கலிப் பாடல் உம்பரில் ஒலித்திடுங் காட்சி
குளங்க ளாணிழற் கீழ்நற் குயில்பயில் வாஞ்சியத் தடிகள்
விளங்கு தாமரைப் பாதம் நினைப்பவர் வினைநலி விலரே. 8

வாழை யின்கனி தானும் மதுவிம்மு வருக்கையின் சுளையும்
கூழை வானரந் தம்மிற் கூறிது சிறிதெனக் குழறித்
தாழைவாழையந் தண்டாற் செருச்செய்து தருக்குவாஞ் சியத்து
ளேழை பாகனை அல்லால் இறையெனக் கருதுத லிலமே. 9

செந்நெ லங்கலங் கழனித் திகழ்திரு வாஞ்சியத் துறையும்
மின்ன லங்கலஞ் சடைஎம் இறைவனை தறைகழல் பரவும்
பொன்ன லங்கனல் மாடப் பொழிலணி நாவலா ரூரன்
பன்ன லங்கனல் மாலை பாடுமின் பத்தரு ளீரே. 10–11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: வாஞ்சியநாதர்; அம்பிகை: வாழவந்த நாயகி.



---

8. களம் – போரடிக்கும் களம். உம்பரில் – மேலே,

9. வருக்கை இன் சுளை – பலாப்பழத்தின் இனிய சுளை, கூறு இது சிறிது என – எனக்குத் தந்த இக்கூறு சிறிது என்று. ஏழை – மங்கை.

11. செந்நெல் அங்கு அலங்கு கழனி; அலங்கு கழனி, அலங் கழனி என நின்றது; அலங்குதல்–அசைதல். மின் அலங்கல் அம் சடை–மின்னைப் போன்ற மாலையை அணிந்த அழகிய சடை. பொன் நலம் கனல் – திருமகளின் அழகு ஒளி தருகின்ற. பன்னு அலங்கல் நன். மாலை–பாடியமாலை போன்ற நல்ல பாவின்வரிசை.

# 16. திருநன்னிலத்துப் பெருங்கோயில் - பண்: பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தண்ணியல் வெம்மையினன் தலையிற்கடை தோறும்பலி
பண்ணியல் மென்மொழியார் இடக்*கொண்டுழல் பண்டரங்கன்
புண்ணிய நான்மறையோர் முறையால்அடி போற்றிசைப்ப
நண்ணிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 1

வலங்கிளர் மாதவஞ்செய் மலைமங்கையோர் பங்கினனாய்ச்
சலங்கிளர் கங்கைதங்கச் சடைஒன்றிடை யேதரித்தான்
பலங்கிளர் பைம்பொழில்தண் பனிவெண்மதி யைத்தடவ
நலங்கிளர் நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 2

கச்சிய னின்கருப்பூர் விருப்பன்கரு திக்கசிவார்
உச்சியன் பிச்சைஉண்ணி உலகங்கள்எல் லாம்உடையான்
நொச்சியம் பச்சிலையான் நுரைதீர்புன லால்தொழுவார்
நச்சிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 3

---

*1.* தண் இயல் வெம்மையினன் – தண்ணிய இயல்போடு சேர்ந்த வெம்மையை உடையவன்; முரண் பாடுள்ளனபோல் தோன்றும் இயல்புடையவன் என்றபடி; இயல்பினால் தண்மையாக உள்ளவனேனும் தோற்றத்தால் வெம்மையாக உள்ளவன் எனலும் ஆம். புற வெம்மையும் அகத்தண்மையுமாகிய மறக் கருணைக்கு இருப்பிடமானவன் என்றபடி. கடைதோறும் – வாயில்தோறும். பலிகொண்டு உழல். * 'இடம்' என்றும் பாடம். முறையால்–மரபின்படி; ஆகம நூல்களால் எனலுமாம்.

*2.* பலம்–பழம்.

*3.* கசிவார்–அன்பினால் உருகுபவர். நொச்சியாகிய பச்சிலையாலும் தெளிந்த புனலாலும் பூசித்துத் தொழுபவர்; நொச்சி, பஞ்ச வில்வங்களுள் ஒன்று.

பாடிய நான்மறையான் படுபல்பிணக் காடரங்கா
ஆடிய மாநடத்தான் அடிபோற்றிஎன் றன்பினராய்ச்
சூடிய செங்கையினர் பல‡தோத்திரம் வாய்த்தசொல்லி
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 4

பிலந்தரு வாயினொடு பெரிதும்வலி மிக்குடைய
சலந்தரன் ஆகம்இரு பிளவாக்கிய சக்கரமுன்
நிலந்தரு மாமகள்கோன் நெடுமாற்கருள் செய்தபிரான்
நலந்தரு நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 5

வெண்பொடி மேனியினன் கருநீல மணிமிடற்றன்
பெண்படி செஞ்சடையான் பிரமன்சிரம் பீடழித்தான்
பண்புடைநான்மறையோர்பயின்றேத்திப்பல்கால்வணங்கும்
நண்புடை நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 6

தொடைமலி கொன்றைதுன்றுஞ் சடையன்சுடர் வெண்
மழுவாட்
படைமலி கையன்மெய்யிற் பகட்டீருரிப் போர்வையினன்
மடைமலி வண்¶கமலம் மலர்மேல்மட வன்னம்மன்னி
நடைமலி நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 7

குளிர்தரு திங்கள்கங்கை குரவோடரக் கூவிளமும்
மிளிர்தரு புன்சடைமே லுடையான்விடை யான்விரைசேர்

---

4. சூடிய-தலைமேற் குவித்த. ‡ 'பலர்' என்றும் பாடம்.

5. பிலந்தரு வாய் - குகையைப்போன்ற ஆழமான வாய். சலந்தரனை அறுத்த சக்கரத்தைத் திருமாலுக்கு அருளியவன். நிலமகளுக்கும் மாமகளுக்கும் கோன்.

6. பெண்படி-கங்கை தங்கிய.

7. பகட்டு ஈர் உரிப் போர்வையினன்-யானையினது ஈரமான தோலைப் போர்வையாக உடையவன். ¶ 'வெண்' என்றும் பாடம்.

தளிர்தரு கோங்குவேங்கை தடமாதவி சண்பகமும்
நளிர்தரு நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 8

கமர்பயில் வெஞ்சுரத்துக் கடுங்கேழற்பின் கானவனாய்
அமர்பயில் வெய்திஅருச் சுனனுக்கருள் செய்தபிரான்
தமர்பயில் தண்விழவில் தகுசைவர் தவத்தின்மிக்க
நமர்பயில் நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே. 9

கருவரை போல்அரக்கன் கயிலைம்மலைக் கீழ்க்கதற
ஒருவிர லால்அடர்த்தின் னருள்செய்த உமாபதிதான்
திரைபொரு பொன்னிநன்னீர்த் துறைவன்திகழ் செம்பியர்கோன்
நரபதி நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனே.

கோடுயர் வெங்களிற்றுத் திகழ்கோச்செங்க ணன்செய்கோயில்
நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில் நயந்தவனைச்
சேடியல் சிங்கிதந்தை சடையன்திரு வாரூரன்
பாடிய பத்தும்வல்லார் புகுவார்பர லோகத்துள்ளே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பிரகேசுவரர்

அம்பிகை: பிரகேசுவரி

---

8. அர-பாம்பு. நளிர்தரு-குளிர்ச்சியைத் தருகின்ற.

9. கமர் – வெடிப்பு. கேழல் – பன்றி. கானவனாய் – வேடுவனாகி.

10. பொன்னி-காவிரி. செம்பியர் கோன் – கோச்செங்கட் சோழன்.

11. சேடு-பெருமை, சிங்கி – சிங்கடியார்.

## 17. திருப்பனையூர் — பண்: சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

மாடமாளிகை கோபுரத்தொடு மண்டபம்வள ரும்வளர்
பாடல் வண்டறையும் பழனத் திருப்பனையூர்த் [பொழில்
தோடுபெய்தொரு காதினிற்குழை தூங்கத்தொண்டர்கள்
ருடு மாறுவல்லார் அவரே அழகியரே. [துள்ளிப்பாடநின்

நாறுசெங்கழு நீர்மலர்நல்ல மல்லிகை சண்பகத்தொடு
சேறுசெய் கழனிப் பழனத் திருப்பனையூர்
நீறுபூசிநெய் யாடிதன்னை நினைப்பவர்தம் மனத்தன்ஆகிநின்
ருறு சூடவல்லார் அவரே அழகியரே. 2

செங்கண்மேதிகள் சேடெறிந்துதடம்படிதலிற்சேலினத்
பைங்கண் வாளைகள்பாய் பழனத் திருப்பனையூர்த் [தொடு
திங்கள்சூடிய செல்வனாடியார்தம்மேல்வினை தீர்ப்பராய்விடி
லங்கிருந் துறைவார் அவரே அழகியரே. 3

வாளைபாய மலங்கிளங்கயல் வரிவரால்உக ளுங்கழனியுள்
பாளைஒண் கமுகம புடைசூழ் திருப்பனையூர்த்
தோளுமாகமுந் தோன்றநட்டமிட் டாடுவாரடித் தொண்
ஆளு மாறுவல்லார் அவரே அழகியரே. [டர்தங்களை

கொங்கை யார்பலருங்குடைந் தாடநீர்க்குவளை மலர்தரப்
பங்கயம் மலரும் பழனத் திருப்பனையூர்
மங்கைபாகமும் மாலொர்பாகமுந் தாமுடையவர் மான்
டங்கைத் தீஉகப்பார் அவரே அழகியரே. [மழுவினே

---

1. பழனம் – வயல்.
3. சேடு – சேறு. தடம் – குளம்.
4. மலங்கு – ஒருவகை மீன். உகளும் – துள்ளும்.

காவிரிபுடை சூழ்சோணாட்டவர் தாம்பரவிய கருணையங் [கடலப்
பாவிரி புலவர் பயிலுந் திருப்பனையூர்
மாவிரிமட நோக்கிஅஞ்ச மதகரிஉரி போர்த்துகந்தவர்
ஆவில்ஐந் துகப்பார் அவரே அழகியரே. 6

மரங்கள்மேல்மயி லாலமண்டப மாடமாளிகை கோபுரத்தின் [மேல்
திரங்கல்வன் முகவன் புகப்பாய் திருப்பனையூர்த்
துரங்கன்வாய்பிளந் தானுந்தாமலர்த் தோன்றலுமறி [யாமற்றோன்றிநின்
றரங்கில் ஆடவல்லா ரவரே அழகியரே.

மண்ணெலாம்முழ வம்மதிர்தர மாடமாளிகை கோபுரத்தின் [மேல்
பண்ணி யாழ்முரலும் பழனத் திருப்பனையூர்
வெண்ணிலாச்சடை மேவியவிண் ணவரொடுமண் ணவர்தொழ
அண்ணல் ஆகிநின்றார் அவரே அழகியரே. 8

குரக்கினங்குதி கொள்ளத்தேனுகக் குண்டுதண்வயற் கெண்டைபாய்தரப்
பரக்குந் தண்கழனிப் பழனத் திருப்பனையூர்
இரக்கமில்லவர் ஐந்தொடைந்தலை தோளிருபது தாள்நெரிதர
அரக்கனை அடர்த்தார் அவரே அழகியரே. 9

வஞ்சிநுண்ணிடை மங்கைபங்கினர் மாதவர்வள ரும்வளர் [பொழில்
பஞ்சின் மெல்லடியார் பயிலுந் திருப்பனையூர்
வஞ்சியும்வளர் நாவலூரன் வனப்பகையவ ளப்பன் வன் [றொண்டன்
செஞ்சொற் கேட்டுகப்பார் அவரே அழகியரே.

திருச்சிற்றம்பலம்

சுவாமி: சௌந்தரநாதர்; அம்பிகை: பெரியநாயகி.

---

6. மா விரி – மாவடுவின் தன்மை விரிந்த.

7. திரங்கல்–சுருங்கிய தோலையுடைய. வன்முகவன் – குரங்கு. துரங்கன் – குதிரையாக நின்ற கேசி என்னும் அசுரன். **வாய்பிளந்தான்** – திருமால்.

9. **உகக்குண்டு – உகக்க உண்டு.**

**வரலாறு:** திருப்புகலூரைத் தரிசித்துக்கொண்டு செல்லும் சுந்தரமூர்த்தி சுவாமிகள். திருப்பனையூரை நோக்கி வருகையில் ஊர்ப்புறத்தே இறைவர் திருநடனக்காட்சியை அருளத் தரிசித்து இறைஞ்சி இப்பதிகத்தைப் பாடினார். **(பெரிய புராணம், ஏயர் கோன், 52—3.)**

---

## 18. திருப்புகலூர் — பண்: கொல்லி

திருச்சிற்றம்பலம்

தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினும்
சார்வி னுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடா தேயெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதரும் சோறுங் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே. 1

மிடுக்கி லாதானை வீம னேவிறல்
விசய னேவில்லுக் கிவனென்று
கொடுக்கி லாதானைப் பாரி யேயென்று
கூறி னுங்கொடுப் பார்இலை
பொடிக்கொள் மேனியெம் புண்ணி யன்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அடுக்கு மேல்அமர் உலகம் ஆள்வதற்
கியாது மையுற வில்லையே. 2

---

1. இச்சை பேசினும் – அவர் விருப்பத்தை உணர்ந்து அதற்கேற்ப இச்சகம் பேசினாலும். அம்மையே – மறுமையில்.

2 மிடுக்கு–வலிமை, விசயன்–அருச்சுனன், பாரி–கடையெழு வள்ளல்களில் ஒருவன்,

காணி யேற்பெரி துடைய னேகற்று
நல்லனே சுற்றம் நற்கிளை
பேணி யேவிருந் தோம்பு மேயென்று
பேசி னுங்கொடுப் பாரிலை
பூணி பூண்டுழப் புட்சி லம்புந்தண்
புகலூர் பாடுமின் புலவீர்காள்
ஆணி யாய்அமர் உலகம் ஆள்வதற்
கியாது மையுற வில்லையே. 3

நரைகள் போந்துமெய் தளர்ந்து மூத்துடல்
நடுங்கி நிற்கும்இக் கிழவனை
வரைகள் போல்திரள் தோள னேயென்று
வாழ்த்தி னுங்கொடுப் பாரிலை
புரைவெள் ளேறுடைப் புண்ணி யன்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அரைய னாய்அமர் உலக மாள்வதற்
கியாது மையுற வில்லையே. 4

வஞ்ச நெஞ்சனை மாச ழக்கனைப்
பாவி யைவழக் கில்லியைப்
பஞ்ச துட்டனைச் சாது வேயென்று
பாடி னுங்கொடுப் பாரிலை
பொன்செய் செஞ்சடைப் புண்ணி யன்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
நெஞ்சில் நோயறுத் துஞ்சு போவதற்
கியாது மையுற வில்லையே. 5

3. பூணி-மாடு. ஆணி-உரையாணியைப் போன்ற சிறப்பு.
4. புரை-உயர்வு.
5. சழக்கன்-குற்றமுள்ளவன். பஞ்சதுட்டன்-ஐம்பெரும் பாவங்களைச் செய்யும் கொடியவன்.

நலம்இ லாதானை நல்ல னேயென்று
நரைத்த மாந்தரை இளையனே
குலம்இ லாதானைக் குலவ னேயென்று
கூறி னுங்கொடுப் பார்இலை
புலமெ லாம்வெறி கமழும் பூம்புக
லூரைப் பாடுமின் புலவீர்கள்
அலம ராதமர்* உலகம் ஆள்வதற்
கியாது மையுற வில்லையே. 6

நோய னைத்தடந் தோள னேயென்று
நொய்ய மாந்தரை விழுமிய
தாயன் றேபுல வோர்க்கெ லாமென்று
சாற்றி னுங்கொடுப் பார்இலை
போயு ழன்றுகண் குழியா தேயெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
ஆயம் இன்றிப்போய் அண்டம் ஆள்வதற்
கியாது மையுற வில்லையே. 7

எள்வி ழுந்திடம்‡ பார்க்கும் ஆகிலும்
ஈக்கும் ஈகிலன் ஆகிலும்
வள்ள லேயெங்கள் மைந்த னேயென்று
வாழ்த்தி னுங்கொடுப் பார்இலை

---

6. புலம்-வயல். வெறி-நறுமணம். * 'அலம் வராதமர்' என்றும் பாடம்.

7. நொய்ய மாந்தரை – குணத்தினால் இழிந்த மக்களை. ஆயம்-சுங்கம்; இங்கே தடையைக் குறிப்பித்தது.

8. எள்ளளவு பொருள் கையிலிருந்து விழுந்தாலும், எங்கே விழுந்ததென்று ஆராயும் லோபியைக் குறித்தபடி. ‡ 'தடம்' என்றும் பாடம். மைந்தன்-வீரமுடையவன். அள்ளல்-சேறு. § 'அல்லல்' என்றும் பாடம்.

புள்ளெ லாஞ்சென்று சேரும் பூம்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அள்ளற்§ பட்டழுந் தாது போவதற்
கியாது மையுற வில்லையே. 8

கற்றி லாதானைக் கற்று நல்லனே
காம தேவனை ஒக்குமே
முற்றி லாதானை முற்ற னேயென்று
மொழியி னுங்கொடுப் பாரிலை
பொத்தில் ஆந்தைகள் பாட்ட ருப்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அத்த னாய்அமர் உலகம் ஆள்வதற்
கியாது மையுற வில்லையே. 9

தைய லாருக்கோர் காம னேயென்றும்
சால நல்வழக் குடையனே†
கையு லாவிய வேல னேயென்று
கழறி னுங்கொடுப் பாரிலை
பொய்கை ஆவியின்* மேதி பாய்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
ஐய னாய்அமர்¶ உலகம் ஆள்வதற்
கியாது மையுற வில்லையே. 10

செறுவி னிற்செழுங் கமலம் ஓங்குதென்
புக்லூர் மேவிய செல்வனை
நறவம் பூம்பொழில் நாவ லூரன்
வனப்பகை யப்பன் சடையன்றன்

9. முற்றிலாதான்–எதிலும் முடிவுபோக முயற்சி செய்யாதவன்; முற்றும் இல்லாதவன். முற்றன்–பூரணமாக உடையவன். பொத்தில்–மரப்பொந்துகளில்.

10. † 'காமனே சால நலவ ழகுடை யையனே'; * 'வாவியின்'; ¶ 'ஐய னாரமர்' என்றும் பாடம்.

சிறுவன் வன்றொண்டன் ஊரன் பாடிய
பாடல் பத்திவை வல்லவர்
அறவ னார்அடி சென்று சேர்வதற்
கியாது மையுற வில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அக்கினீசுவரர்

அம்பிகை: கருந்தார்க்குழலம்மை

**வரலாறு:** பங்குனி உத்தரத் திருநாளில் பரவையார் செய்யும் தான தருமங்களுக்குப் பொருள் வேண்டி யிருந்தமையால், ஆளுடைய நம்பிகள் திருப்புகலூருக்குச் சென்று இறைவரைத் தரிசித்துக் கோயிலின் முற்றத்தில் அங்கிருந்த செங்கற்களையே தலையணையாக வைத்துத் துயின்றார்; துயிலெழுந்து பார்க்கத் தலைக்கு உயரமாக இருந்த செங்கற்கள் பொன்னாகி யிருக்கக் கண்டு, இறைவர் திருவருளை வியந்து இப்பதிகத்தைப் பாடியருளினார். [பெரியபுராணம், ஏயர்கோன், 46–52.]

---

## 19. திருநாகைக்காரோணம்

## பண்: கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீர் எனக்கொருநா ளிரங்கீர்

---

11. செறு–வயல்.

முத்தாரம் இலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
அவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறுங்
கத்தூரி கமழ்சாந்து பணித்தருள வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 1

வேம்பினொடு தீங்கரும்பு விரவினைத் தீற்றி §
விருத்திநான் உமைவேண்டத் துருத்திபுக்கங் கிருந்தீர்
பாம்பினொடு படர்சடைகள் அவைகாட்டி வெருட்டிப்
பகட்டநான் ஒட்டுவனோ பலகாலும்* உழன்றேன்
சேம்பினொடு செங்கழுநீர் தண்கிடங்கில் திகழும்
திருவாரூர் புக்கிருந்த தீவண்ணர் நீரே
காம்பினொடு நேத்திரங்கள் பணித்தருள வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 2

பூண்பதோர் இளஆமை பொருவிடையொன் றேறிப்
பொல்லாத வேடங்கொண் டெல்லாரும் காணப்
பாண்பேசிப் படுதலையிற் பலிகொள்கை தவிரீர்
பாம்பினொடு படர்சடைமேல் மதிவைத்த பண்பீர்
வீண்பேசி மடவார்கை வெள்வளைகள் கொண்டால்
வெற்பரையன் மடப்பாவை பொறுக்குமோ சொல்லீர்
காண்பினிய மணிமாடம் நிறைந்தநெடு வீதிக்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 3

விட்டதோர் சடைதாழ வீணைவிடங் காக
வீதிவிடை ஏறுவீர் வீண்அடிமை† உகந்தீர்
துட்டரா யினபேய்கள் சூழநடம் ஆடிச்
சுந்தரராய்த் தூமதியஞ் சூடுவது சுவண்டே

1. இறி பேசி – பரியாசப் பேச்சுக்கள் பேசி. படிறு ஆடி – பொய்யான வார்த்தைகளைச் சொல்லி. சே – இடபம்.
2. தீற்றி–தின்னச் செய்து. § 'தீர்த்தீர்' என்றும் பாடம். விருத்தி – மானியம். * 'பல காலம்' என்றும் பாடம்.
3. பாண் பேசி – பகடி பேசி.

வட்டவார் குழல்மடவார் தம்மைமயல் செய்தல்
மாதவமோ மாதிமையோ வாட்டம்எலாந் தீரக்
கட்டியெமக் கீவதுதான் எப்போது சொல்லீர்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 4

மிண்டாடித் திரிதந்து வெறுப்பனவே செய்து
வினைக்கேடு பலபேசி வேண்டியவா திரிவீர்
தொண்டாடித் திரிவேனைத் தொழும்புதலைக் கேற்றும்
சுந்தரனே கந்தமுதல் ஆடைஆ பரணம்
பண்டாரத் தேயெனக்குப் பணித்தருள வேண்டும்
பண்டுதான் பிரமாணம் ஒன்றுண்டே நும்மைக்
கண்டார்க்குங் காண்பரிதாய்க் கனலாகி நிமிர்ந்தீர்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 5

இலவவிதழ் வாய்உமையோ டெருதேறிப் பூதம்
இசைபாட இடுபிச்சைக் கெச்சுச்சம் போது
பலவகம்புக் குழிதர்வீர் பட்டோடு சாந்தம்
பணித்தருளா திருக்கின்ற பரிசென்ன படிறே
உலவுதிரைக் கடல்நஞ்சை அன்றமரர் வேண்ட
உண்டருளிச் செய்ததுமக் கிருக்கொண்ணா திடவே
கலவமயில் இயலவர்கள் நடமாடுஞ் செல்வக்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 6

---

4. † 'விண் அடிமை' என்றும் பாடம். சுவண்டு – கபடம். மாதிமை–அழகு. கட்டி – பொற்கட்டி; வேண்டிய பொருளை யெல்லாம் சேர்த்துக் கட்டியெனலுமாம்.

5. மிண்டாடி – மிடுக்கான காரியங்களைச் செய்து. பண்டாரத்தே – திருக்கோயிற் கருவூலத்திலிருந்து.

6. எச்சு உச்சம்போது – சூரியன் மிக்கு நிற்கும் உச்சி வேளையில். உழிதர்வீர் – திரிபவரே. படிறே – வஞ்சகமோ?

தூசுடைய அகலல்குல் தூமொழியாள் ஊடல்
தொலையாத காலத்தோர் சொற்பாடாய் வந்து
தேசுடைய இலங்கையர்கோன் வரைஎடுக்க அடர்த்துத்
திப்பியகீ தம்பாடத் தேரொடுவாள் கொடுத்தீர்
நேசமுடை அடியவர்கள் வருந்தாமை அருந்த
நிறைமறையோர் உறைவீழி மிழலைதனில் நித்தல்
காசருளிச் செய்தீர்இன் றெனக்கருள வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 7

மாற்றமேல் ஒன்றுரையீர் வாளாநீர் இருந்தீர்
வாழ்விப்பன் எனஆண்டீர் வழியடியேன் உமக்கு
ஆற்றவேற் றிருவுடையீர் நல்கூர்ந்தீர் அல்லீர்
அணியாரூர் புகப்பெய்த அருநிதியம்‡ அதனில்
தோற்றமிகு முக்கூற்றில் ஒருகூறு வேண்டும்
தாரீரேல் ஒருபொழுதும் அடியெடுக்கல் ஒட்டேன்
காற்றனைய கடும்பரிமா ஏறுவது வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 8

மண்ணுலகும் விண்ணுலகும் உம்மதே ஆட்சி
மலையரையன் பொற்பாவை சிறுவனையுந் தேறேன்
எண்ணிலிஉண்* பெருவயிறன் கணபதிஒன் றறியான்
எம்பெருமான் இதுதகவோ இயம்பி‡யருள் செய்யீர்

---

7. சொற்பாடாய் வந்து – சொல்லி வைத்ததுபோல வந்து. அடியவர்கள் – ஞானசம்பந்தருடனும் அப்பருடனும் வந்த சிவனடியார்கள். நித்தல் – தினந்தோறும்.

8. மாற்றம்–விடை. ஆற்ற ஏல் திருவுடையீர்–மிகுதியாகப் பெற்ற செல்வத்தை உடையீர். ‡'அருநெதியம்' என்றும் பாடம்.

9. *'உன்'; ‡ 'விரும்பி' என்றும் பாடம்.

திண்ணென என் உடல்விருத்தி தாரீரே ஆகில்
திருமேனி வருந்தவே வளைக்கின்றேன் நாளைக்
கண்ணறையன் கொடும்பாடன் என்றுரைக்க வேண்டா
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 9

மறிஏறு கரதலத்தீர் மாதிமையேல் உடையீர்
மாநிதியந்§ தருவனென்று வல்லீராய் ஆண்டீர்
கிறிபேசிக் கீழ்வேளூர் புக்கிருந்தீர் அடிகேள்
கிறியும்மாற் படுவேனோ திருவாணை உண்டேல்
பொறிவிரவு நற்புகர்கொள் பொற்சுரிகை மேலோர்
பொற்பூவும் பட்டிகையும் புரிந்தருள வேண்டும்
கறிவிரவு நெய்சோறு முப்போதும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரே. 10

பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும்
பற்றாய பெருமானே மற்றாரை உடையேன்
உண்மயத்த* உமக்கடியேன் குறைதீர்க்க வேண்டும்
ஒளிமுத்தம் பூணாரம் ஒண்பட்டும் பூவும்
கண்மயத்த கத்தூரி கமழ்சாந்தும் வேண்டும்
கடல்நாகைக் காரோணம் மேவியிருந் தீரென்
றண்மயத்தால் அணிநாவ லாரூரன் சொன்ன
அருந்தமிழ்க ளிவைவல்லா ரமருலகாள் பவரே. 11

திருச்சிற்றம்பலம்
சுவாமி: காயாரோகணேசுவரர்
அம்பிகை: நீலாயதாட்சியம்மை

---

9. உடல் விருத்தி – பொன்னாகிய சம்மானத்தை. கண்ணறையன் – தயையற்றவன். கொடும்பாடன் – கொடியவன்.

10. மறி – மான். மாதிமை – அழகு. § 'மாநெதியம்' என்றும் பாடம். சுரிகை – பிரம்பு. பட்டிகை – திருமார்பில் குறுக்கே யிடுவது.

11. * 'உண்மையத்த' என்றும் பாடம்.

**வரலாறு:** சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருநாகைக் காரோணம் சென்று இப்பதிகம் பாடி மணிப்பூணும் நவமணிகளும் ஆடை, சாந்தம், குதிரை, சுரிகை முதலியனவும் பெற்றார். (பெரியபுராணம், சேரமான் பெருமாள், 63)

---

## 20. திருவாரூர் — பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு
பறைகிழித் தனையபோர்வை†பற்றியான்§நோக்கினேற்குத்
திறைகொணர்ந் தீண்டித் தேவர்செம்பொனும் மணியும்தூவி
அறைகழல் இறைஞ்சும் ஆரூர்அப்பனே அஞ்சி னேனே. 1

ஊன்மிசை உதிரக் குப்பை ஒருபொருள் இலாத மாயம்
மான்மறித் தனைய நோக்கி‡ மடந்தைமார் மதிக்கும் இந்த¶
மானுடப் பிறவி வாழ்வு வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
ஆனல்வெள் ளேற்ற ஆரூர் அப்பனே அஞ்சி னேனே. 2

அறுபதும் பத்தும் எட்டும் ஆறினோ டஞ்சு நான்கும்
துறுபறித் தனைய நோக்கிச் சொல்லிற்றொன் றாகச்சொல்லார்
நறுமலர்ப் பூவும் நீரும் நாடொறும் வணங்கு வார்க்கு*
அறிவினைக் கொடுக்கும் ஆரூர் அப்பனே அஞ்சி னேனே. 3

---

1. இறைகளோடு இசைந்த இன்பம் – சிவபெருமானோடு ஒன்றிய பேரின்பம். பறை கிழித்தனைய போர்வை – பறை கிழிந்தால் அதன் தோல் பயன்படாதவாறு போல இறந்துபட்டால் பயன்படாத உடம்பு. † 'பார்வை'; § 'பத்தியால்' என்றும் பாடம்.

2. ஆன் நல் வேள்ளேற்ற – நல்ல வெள்ளையான ஆனேற்றையுடைய. ‡ 'நோக்கம்'; ¶ 'செல்வ' என்றும் பாடம்.

3. அறுபதும் பத்தும் எட்டும் ஆறினோடு அஞ்சு நான்கும்– தொண்ணூற்றாறு தத்துவமும்; எட்டும் – எட்டுவதற்குரிய. * 'வாருக்கு' என்றும் பாடம்.

சொல்லிடில் எல்லை இல்லை சுவையிலாப் பேதை வாழ்வு
நல்லதோர் கூரை புக்கு நலமிக அறிந்தே னல்லேன்
மல்லிகை மாடம் நீடு மருங்கொடு நெருங்கி எங்கும்
அல்லிவண் டியங்கும் ஆரூர் அப்பனே அஞ்சி னேனே. 4

நரம்பினோ டெலும்பு கட்டி நசையினோடிசைவொன்றில்லாக்
குரம்பைவாய்க் குடியி ருந்து குலத்தினல் வாழ மாட்டேன்
விரும்பிய கமழும் புன்னை மாதவித் தொகுதி என்றும்
அரும்புவாய் மலரும் ஆரூர் அப்பனே அஞ்சி னேனே. 5

மணம்என மகிழ்வர் முன்னே மக்கள்தாய் தந்தை சுற்றம்
பிணம்எனச் சுடுவர் பேர்த்தே பிறவியைவேண்டேன்நாயேன்
பணையிடைச்சோலைதோறும் பைம்பொழில்விளாகத்தெங்க
ளணைவினைக் கொடுக்கும் ஆரூ ரப்பனே அஞ்சி னேனே. 6

தாழ்வெனுந் தன்மை விட்டுத் தனத்தையேமனத்தில்வைத்து
வாழ்வதே கருதித் தொண்டர் மறுமைக்கொன் றீய கில்லார்
ஆழ்குழிப் பட்ட போது வலக்கணில் ஒருவர்க் காவர்
யாழ்முயன் றிருக்கும் ஆரூர் அப்பனே அஞ்சி னேனே. 7

உதிரநீர் இறைச்சிக் குப்பை எடுத்தது மலக்கு கைம்மேல்
வருவதோர் மாயக்கூரை வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
கரியமால் அயனுந் தேடிக் கழலடி காண மாட்டா
அரியனாய் நின்ற ஆரூர் அப்பனே அஞ்சி னேனே. 8

போய்த்தன்மைத்தாயமாயப்போர்வையைமெய்யென்றெண்ணி
வித்தகத் தாய வாழ்வு வேண்டிநான் விரும்ப கில்லேன் [ணும்

4. கூரை என்றது இங்கே உடம்பை.
5. குரம்பை—குடிசை. மாதவி—குருக்கத்தி.
6. பணை—கிளை. விளாகம்—பரப்பு.
7. போது அலக்கணில்; அலக்கண் — துன்பம்.

முத்தினைத் தொழுது நாளும் முடிகளால் வணங்கு வார்க்கு
அத்தன்மை மத்த தாம்ஆரூர் அப்பனே அஞ்சி னேனே. 9

தஞ்சொலார் அருள்ப யக்குந் தமியனேன் தடமு லைக்கண்
அஞ்சொலார் பயிலும் ஆரூர் அப்பனை ஊரன் அஞ்சிச்
செஞ்சொலால் நயந்த பாடல் சிந்தியா ஏத்த வல்லார்
நஞ்சுலாம் கண்டத் தெங்கள் நாதனை நணுகு வாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

## பண்: கொல்லி

திருச்சிற்றம்பலம்

குருகுபா யக்கொழுங் கரும்புகள்* நெரிந்தசா
றருகுபா யும்வயல் அந்தணா ரூரரைப்
பருகுமா றும்பணிந் தேத்துமா றுந்நினைந்
தருகுமா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. 1

பறக்கும்எங் கிள்ளைகாள் பாடும்எம் பூவைகாள்
அறக்கண்என் னத்தகும் அடிகளா ரூரரை
மறக்ககில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உறக்கம்இல் லாமையும் உணர்த்தவல் லீர்களே. 2

சூழும்ஓ டிச்சுழன் றுழலும்வெண் ணுரைகாள்
ஆளும்அம் பொற்கழல் அடிகளா ரூரர்க்கு
வாழுமா றும்வளை கழலுமா றும்மெனக்
கூழுமா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. 3

---

1. * 'கரும்பு கண்' என்றும் பாடம். பருகுமாறும் — அநுபவிக்கும் வண்ணத்தையும்.

2. பூவை — நாகண வாய்ப்புள்.

3. சூழும் — சுற்றிலும்.

சக்ரவா ளத்திளம் பேடைகாள் சேவல்காள்
அக்ரமங் கள்செய்யும் அடிகளா ரூரர்க்கு
வக்ரம்இல் லாமையும் வளைகள்நில் லாமையும்
உக்ரம்இல் லாமையும் உணர்த்தவல் லீர்களே. 4

இலைகொள்சோ லைத்தலை இருக்கும்வெண் ணுரைகாள்
அலைகொள்சூ லப்படை அடிகளா ரூரர்க்குக்
கலைகள்சோர் கின்றதுங் கனவளை கழன்றதும்
முலைகள்பீர் கொண்டதும் மொழியவல் லீர்களே. 5

வண்டுகாள் கொண்டல்காள் வார்மணற் குருகுகாள்
அண்டவா ணர்தொழும் அடிகளா ரூரரைக்
கண்டவா றுங்காமத் தீக்கனன் றெரிந்துமெய்
உண்டவா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. 6

தேனலங் கொண்டதேன் வண்டுகாள் கொண்டல்காள்
ஆனலங் கொண்டஎம் அடிகளா ரூரர்க்குப்
பானலங் கொண்டஎம் பணைமுலை பயந்துபொன்
ஊனலங் கொண்டதும் முணர்த்தவல் லீர்களே. 7

சுற்றுமுற் றுஞ்சுழன் றுழலும்வெண் ணுரைகாள்
அற்றமுற் றப்பகர்ந் தடிகளா ரூரர்க்குப்
பற்றுமற் றின்மையும் பாடுமற் றின்மையும்
உற்றுமற் றின்மையும் உணர்த்தவல் லீர்களே.* 8

குரவநா றக்குயில் வண்டினம் பாடநின்
றரவம்ஆ டும்பொழில் அந்தணா ரூரரைப்

---

5. கலைகள் – ஆடைகள். பீர் – பசலை.
6. கொண்டல் – மேகம்.
7. தேன்வண்டு – ஒருவகை வண்டு. பயந்து – பசந்து.
8. அற்றம் – சோர்வு. * 'முற்றுமற் றின்மையும் மொழிய வல்லீர்களே' என்றும் பாடம்.

பரவிநா டும்மதும் பாடிநா டும்மதும்
உருகிநா டும்மதும் உணர்த்தவல் லீர்களே. 9

கூடும்அன் னப்பெடை காள்குயில் வண்டுகாள்
ஆடும்அம் பொற்கழல் அடிகளா ரூரரைப்
பாடுமா றும்பணிந் தேத்துமா றுங்கூடி
ஊடுமா றும்மிவை உணர்த்தவல் லீர்களே. 10

நித்தமா கந்நினைந் துள்ளம்வைத் தித்தொழும்
அத்தன்அம் பொற்கழல் அடிகளா ரூரரைச்
சித்தம்வைத் தபுகழ்ச் சிங்கடி யப்பன்மெய்ப்
பத்தனூ ரன்சொன்ன பாடுமின் பத்தரே. 11

திருச்சிற்றம்பலம்

**வரலாறு:** திருவொற்றியூரிலிருந்து திருவாரூரை நோக்கி வருகையில் முதலில் இருகண்ணும் இழந்த நம்பியாரூரர், பின் காஞ்சீபுரத்தில் ஒரு கண் பெற்றார்; ஒரு கண்ணோடு திருவாரூர் வந்து திரு மூலட்டானத்தை அர்த்தசாம பூசையில் தரிசித்து, அன்பர்கள் எதிரணையக் கண்டு, அயலார் வினவுவதுபோலக் கைக்கிளை யமைய இத் திருப் பதிகத்தைப் பாடி யருளினார். (பெரிய புராணம், ஏயர்கோன், 305.)

---

## திருத்தொண்டத்தொகை

### பண்: கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

தில்லைவாழ் அந்தணர்தம் மடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்

வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ்குன்றையார்விறன்மிண்டற்கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 1

இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தற் கடியேன்
ஏனாதி நாதன்றன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்றன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயற் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 2

மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கும் அடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள்* மழுவினால் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 3

---

1. வெல்லுமா மிகவல்ல—வெற்றிகாணும் விதத்தில் மிக்க வன்மை பெற்ற. 'விறன்மிண்டர்க் கடியேன்' என்றும் பாடம்; இப்பதிகத்தில் இது போல்வன பிறவும் 'அர்' விகுதி கொடுத்துக் கூறப்பெற்றுள்ளன.

3. மும்மையால்-விபூதி, ருத்திராட்சம், சடை என்னும் மூன்றும் கொண்டு. * 'தாதையை' என்றும் பாடம், சண்டிப் பெருமான்—சண்டீச நாயனார்.

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கும் அடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்
ஒருநம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்
அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 4

வம்பறா வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்காமன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கற்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 5

வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவாற்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 6

---

4. பேயார் — காரைக்காலம்மையார்.
5. வம்பு—வாசனை. நாட்டம் மிகு — சிவபிரான் திருவருளால் கண்ணைப்பெற்ற.
6. கழறிற்றறிவார்—சேரமான் பெருமாள் நாயனார்.

பொய்யடிமை இல்லாத புலவர்க்கும் அடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடல்நாகை அதிபத்தற் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 7

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்
நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவாற் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 8

கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் அடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடி
பொன்னடிக்கேமனம்வைத்தபுகழ்த்துணைக்குமடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 9

---

7. சத்தியாகிய வரிஞ்சையர்கோன்.

9. ஆடி-ஆடுபவனது. காடவர் கோன் – பல்லவ அரசன்,

10.

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும்* திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த† அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 10

மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமைகேட் டுவப்பார்
ஆரூரில் அம்மானுக் கன்பரா வாரே. 11

திருச்சிற்றம்பலம்

**வரலாறு:** சுந்தரர் திருவாரூர்த் திருக்கோயிலுக்குள் எழுந்தருளும்போது தேவாசிரியன் என்னும் மண்டபத்தில் உள்ள தொண்டர்களைக் கண்டு, "இவர்களுக்கு அடிமை செய்யும்படி திருவருள் எப்போது வாய்க்கும்!" என்று எண்ணுகையில் சிவபெருமான் முதலடி எடுத்துக் கொடுக்கப் பாடிய திருப்பதிகம் இது. [பெரிய புராணம், தடுத்தாட் கொண்ட புராணம், 189–202]

---

10. * 'முப்பொழுதும்'; † 'அடிச்சார்ந்தார்' என்றும் பாடம்.
11. மானி – மங்கையர்க்கரசியார்.

## பண்: பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

பத்திமையும் அடிமை*யையும் கைவிடுவான் பாவியேன்
பொத்தினநோ யதுவிதனைப் பொருளறிந்தேன் போய்த்
முத்தினைமாமணிதன்னைவயிரத்தைமூர்க்கனே [தொழுவேன்
னெத்தனைநாட் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே.

ஐவணமாம் பகழியுடை அடல்மதனன் பொடியாகச்
செவ்வணமாந் திருநயனம் விழிசெய்த சிவமூர்த்தி
மையணவுங் கண்டத்து வளர்சடைஎம் ஆரமுதை
எவ்வணம்நான் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே.2

சங்கலக்குந் தடங்கடல்வாய் விடஞ்சுடவந் தமரர்தொழ
அங்கலக்கண் தீர்த்துவிடம் உண்டுகந்த அம்மானை
இங்கலக்கும் உடற்பிறந்த அறிவிலியேன் செறிவின்றி
எங்குலக்கப் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே. 3

இங்ஙனம்வந் திடர்ப்பிறவிப் பிறந்தயர்வேன் அயராமே
அங்ஙனம்வந் தெனைஆண்ட அருமருந்தென் ஆரமுதை
வெங்கனல்மா மேனியனை மான்மருவுங் கையானை
எங்ஙனம்நான் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே. 4

செப்பரிய அயனொடுமால் சிந்தித்துந் தெரிவரிய
அப்பெரிய திருவினையே அறியாதே அருவினையேன்

---

1. * 'படிமை' என்றும் பாடம். பொத்தின—மூண்ட.

2. ஐவணமாம் பகழி உடை — ஐந்து விதமாகிய அம்புகளை உடைய.

3. அலக்கும்-ஒலிக்கும். அங்கு அலக்கண் தீர்த்து; அலக்கண் — துன்பம். அலக்கும் உடல் — துன்புறுதற் கேது வாகிய உடம்பு. உலக்க-அழிய.

ஒப்பரிய குணத்தானை இணையிலியை அணைவின்றி
எப்பரிசு பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே. 5

வன்னாகம்¶ நாண்வரைவில் அங்கிகணை அரிபகழி
தன் ஆகம் உறவாங்கிப் புரம்எரித்த தன்மையனை
முன்னாக நினையாத மூர்க்கனேன் ஆக்கைசுமந்
தென்னாகப் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே. 6

வன்சயமாய் அடியான்மேல் வருங்கூற்றின் உரங்கிழிய
முன்சயமார் பாதத்தால் முனிந்துகந்த மூர்த்திதனை
மின்செயும்வார் சடையானை விடையானை அடைவின்றி
என்செயநான் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே.7

முன்னெறிவா னவர்கூடித் தொழுதேத்தும் முழுமுதலை
அந்நெறியை அமரர்தொழும் நாயகனை அடியார்கள்
செந்நெறியைத் தேவர்குலக்கொழுந்தைமறந் திங்ஙனம்நான்
என்னறிவான் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே.8

கற்றுளவான் கனியாய கண்ணுதலைக் கருத்தார
உற்றுளனும் ஒருவனைமுன் இருவர்நினைந் தினிதேத்தப்
பெற்றுளனும் பெருமையனைப் பெரிதடியேன் கையகன்றிட்
டெற்றுளனாய்ப் பிரிந்திருக்கேன்என் ஆரூர் இறைவனையே.9

ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக் குடனாகி

---

5. எப்பரிசு–எவ்வாறு.

6. ¶ 'பன்னாகம்' என்றும் பாடம். நாகம் நாண், வரைவில், அங்கி கணை, அரி பகழி; அங்கி–அக்கினி; பகழி-அம்பு. ஆகம் உற வாங்கி–திருமேனியிற் படும்படி இழுத்து வளைத்து.

7. அடியான்–மார்க்கண்டேயர்; 'அடியார்' என்றும் பாடம். அடைவு இன்றி–அடைதலின்றி.

9. இருவர்–திருமாலும் பிரமனும்.

மாழைஒண்கண் பரவையைத்தந் தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே. 10

வங்கமலி கடல்நஞ்சை வானவர்கள் தாம்உய்ய
நுங்கிஅமு தவர்க்கருளி நாயேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோ டெனைப்புணர்த்த தத்துவனைச் சழக்கனேன்
எங்குலக்கப் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே. 11

பேரூரும் மதகரியின் உரியானைப் பெரியவர்தம்
சீரூருந் திருவாரூர்ச் சிவன்அடியே திறம்விரும்பி
ஆரூரன் அடித்தொண்டன் அடியன்சொல் அகலிடத்தில்
ஊரூரன் இவைவல்லார் உலகவர்க்கு மேலாரே. 12

திருச்சிற்றம்பலம்

**வரலாறு:** சுந்தரமூர்த்தி நாயனார் திருவொற்றியூரில் சங்கிலி யாரோடு இருந்த காலத்தில் இளவேனிற் பருவம் வரத் திருவா ரூரில் அப்போது நடைபெறும் வசந்த விழாவை நினைத்துப் புற் றிடங் கொண்டாரை எண்ணி இத்திருப்பதிகத்தைப் பாடியரு ளினார். [பெரிய புராணம், ஏயர் கோன், 272-3]

---

## பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

பொன்னும் மெய்ப்பொரு ளும்தரு வானைப்
போக முந்திரு வும்புணர்ப் பானைப்
பின்னை என்பிழை யைப்பொறுப் பானைப்
பிழையெ லாந்தவி ரப்பணிப் பானை

---

10. துரிசு - குற்றம். மாழை - மாவடுவின் பிளப்பு.

11. வங்கம் - கப்பல். உப்புக் கடலில் அமுது கடைந்த தாகவும் ஒரு வரலாறு உண்டு. நுங்கி-உண்டு. அவர்க்கு - தேவர்களுக்கு. நாயேனை-புல்லியவனாகிய என்னை. சழக் கனேன்-வஞ்சகனாகிய யான், உலக்க--அழிய.

இன்ன தன்மையன் என்றறி யொண்ணா§
எம்மா னைஎளி வந்தபி ரானை
அன்னம் வைகும் வயற்பழ னத்தணி
ஆரூ ரானை மறக்கலு மாமே. 1

*கட்ட ழும்பிணி யுங்களை வானைக்*
*காலற் சீறிய காலுடை யானை*
*விட்ட வேட்கைவெந் நோய்களை வானை*
*விரவி னால்விடு தற்கரி யானைப்*
பட்ட வார்த்தை படா†நின்ற வார்த்தை
வாரா மேதவி ரப்பணிப் பானை
*அட்ட மூர்த்தியை மட்டவிழ் சோலை*
*ஆரூ ரானை மறக்கலு மாமே.* 2

கார்க்குன் றமழை யாய்ப்பொழி வானைக்
கலைக்கெ லாம்பொரு ளாய்உடன் கூடிப்
பார்க்கின் றஉயிர்க் குப்பரிந் தானைப்
பகலுங் கங்குலும் ஆகிநின் றானை
ஓர்க்கின் றசெவி யைச்சுவை தன்னை
உணரும் நாவினைக் காண்கின்ற கண்ணை
ஆர்க்கின் றகட லைமலை தன்னை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 3

---

*1. மெய்ப்பொருள் – உண்மையான செல்வம்; அருள். § 'என்றறி வொண்ணா' என்றும் பாடம். ஆமே – வினா.*

*2. விட்ட – என்னிடத்திலே தங்கிய; மனம் போனபடி விடுத்த எனலும் ஆம். விரவினால் – அன்பு செய்து பயின்றால். பட்டவார்த்தை – முன்பே பட்ட பழிச் சொற்கள். † 'படா' என்றும் பாடம்.*

*3. கங்குல் – இரவு. ஓர்க்கின்ற – உற்றுக் கேட்கின்ற.*

செத்த போதினில் முன்னின்று நம்மைச்
சிலர்கள் கூடிச் சிரிப்பதன் முன்னம்
வைத்த சிந்தைஉண் டேமனம் உண்டே
மதிஉண் டேவிதி யின்பயன் உண்டே
முத்தன் எங்கள் பிரான்என்று வானோர்
தொழநின் றதிமில் ஏறுடை யானை
அத்தன் எந்தைபி ரான்எம்பி ரானை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 4

செறிவுண் டேல்மனத் தால்தெளி வுண்டேல்
தேற்றத் தால்வருஞ் சிக்கன வுண்டேல்
மறிவுண் டேல்மறு மைப்பிறப் புண்டேல்
வாணாள் மேற்செல் லும்வஞ் சனை உண்டேல்
பொறிவண் டாழ்||செயும் பொன்மலர்க் கொன்றை
பொன்போ லுஞ்சடை மேற்புனைந் தானை
அறிவுண் டேஉட லத்துயிர் உண்டே
ஆரூ ரானை மறக்கலு மாமே. 5

பொள்ளல் இவ்வுட லைப்பொருள் என்று
பொருளுஞ் சுற்றமும் போகமும் ஆகி
மெள்ள நின்றவர் செய்வன எல்லாம்
வாரா மேதவிர்க் கும்விதி யானை
வள்ளல் எந்தமக் கேதுணை என்று
நாள்நா ளும்அம ரர்தொழு தேத்தும்
அள்ள லங்கழ னிப்பழ னத்தணி
ஆரூ ரானை மறக்கலு மாமே. 6

---

5. செறிவு – அடக்கம். தேற்றத்தால் – தெளிவினால். சிக்கனவு – மனத்திண்மை. மறிவு – இறப்பு. பொறிவண்டு ஆழ் செயும்; ஆழ்-யாழ்; யாழிசையை. || 'டியாழ்' என்றும் பாடம்.

6. பொள்ளல்-ஓட்டைகளை உடைய. வள்ளல் – தியாகேசர் என்பதை நினைப்பித்தபடி. அள்ளல் – சேறு.

கரியா னைஉரி கொண்டகை யானைக்
கண்ணின் மேல்ஒரு கண்ணுடை யானை
வரியா னைவருத் தங்களை வானை
மறையா னைக்குறை மாமதி சூடற்
குரியா னைஉல கத்துயிர்க் கெல்லாம்
ஒளியா னைஉகந் துள்கிநண் ணுதார்க்
கரியா னைஅடி யேற்கெளி யானை
ஆரூ ரானை மறக்கலு மாமே. 7

வாளா நின்று தொழும்அடி யார்கள்
வான்ஆ ளப்பெறும் வார்த்தையைக் கேட்டும்
நாணு ளும்மலர் இட்டுவ ணங்கார்
நம்மை ஆள்கின்ற தன்மையை ஓரார்
கேளா நான்கிடந் தேஉழைக் கின்றேன்
கிளைக்கெ லாந்துணை யாம்எனக் கருதி
ஆளா வான்பலர் முன்பழைக் கின்றேன்
ஆரூ ரானை மறக்கலு மாமே. 8

விடக்கை யேபெருக் கிப்பல நாளும்
வேட்கை யாற்பட்ட வேதனை தன்னைக்
கடக்கி லேன்நெறி காணவு மாட்டேன்
கண்கு ழிந்திரப் பார்கையில் ஒன்றும்

---

7. கரி யானை – கருநிறம் பெற்ற யானை. வரியானை – பாட்டாகி இருப்பவனை.

8. உழைக்கின்றேன்-வருந்துகின்றேன். அழைக்கின்றேன் – கூவுகின்றேன்.

9. விடக்கை – உடம்பை. இடக்கிலேன் – அளித்தேனல்லேன். பரவைத்திரைக் கங்கை – பரவுதலையுடைய அலைகளையுடைய கங்கை; கடலலை போன்ற அலைகளையுடைய கங்கை எனலும் ஆம்.

இடக்கி லேன்பர வைத்திரைக் கங்கைச்
சடையா னைஉமை யாளையோர் பாகத்
தடக்கி னானைஅந் தாமரைப் பொய்கை
ஆரு ரானை மறக்கலு மாமே. 9

ஒட்டி ஆட்கொண்டு போய்ஒளித் திட்ட
உச்சிப் போதனை நச்சர வார்த்த
பட்டி யைப்பக லையிருள் தன்னைப்
பாவிப் பார்மனத் தூறுமத் தேனைக்
கட்டி யைக்கரும் பின்றெளி தன்னைக்
காத லாற்கடற் சூர்தடிந் திட்ட
செட்டி யப்பனைப் பட்டனைச் செல்வ
ஆரு ரானை மறக்கலு மாமே. 10

ஊரூர் என்றுல கங்களுக் கெல்லாம்
உரைக்க லாம்‡பொரு ளாய்உடன் கூடிக்
காரூ ருங்கமழ் கொன்றைநன் மாலை
முடியன் காரிகை காரண மாக
ஆரு ரைம்மறத் தற்கரி யானை
அம்மான் றன்திருப் பேர்கொண்ட தொண்டன்
ஆரு ரன்னடி நாய்உரை வல்லார்
அமர லோகத் திருப்பவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

10. ஒட்டி – முன்னின்று வாதிட்டு. உச்சிப் போதனை – பிச்சை வாங்குவதற்கு உச்சிப் போதை உடையவனை. பட்டியை – யார்க்கும் அடங்காதவனை. கட்டியை – கற்கண்டை. செட்டி அப்பனை – முருகனுடைய தந்தையை.

11. ‡ 'உரைக்கெலாம்' என்றும் பாடம். கார் ஊரும் கமழ் கொன்றை-கார் காலத்திலே பரவி மலர்ந்து கமழும் கொன்றை,

**வரலாறு:** கொடுங்கோளூரில் சேரமான்பெருமாள் நாயனார் செய்த உபசாரங்களை ஏற்றுக்கொண்டு தங்கியிருந்த சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு ஒருநாள் திருவாரூர்ப் பெருமானுடைய நினைவுவரவே, இப்பதிகத்தைப் பாடியருளினார். [**பெரியபுராணம்,** சேரமான்பெருமாள், 156.]

---

## பண்: காந்தாரம்

### திருச்சிற்றம்பலம்

கரையுங் கடலும் மலையுங் காலையும் மாலையும் எல்லாம்
உரையில் விரவி வருவான் ஒருவன் உருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர்தானவர்க்கெல்லாம்
அரையனிருப்பதும் ஆரூரவர் எம்மையும்ஆள்வரோகேளீர். 1

தனியன்என்றெள்கி அறியேன் தம்மைப் பெரிதுமுகப்பன்
முனிபவர் தம்மை முனிவன் முகம்பல பேசி மொழியேன்
கனிகள் பலவுடைச் சோலைக் காய்க்குலை ஈன்ற கமுகின்
இனியனிருப்பதும்ஆரூரவர் எம்மையும் ஆள்வரோகேளீர். 2

சொல்லிற் குலாவன்றிச் சொல்லேன் தொடர்ந்தவர்க்
குந்துணை அல்லேன்
கல்லில் வலிய மனத்தேன் கற்ற பெரும்புல வாணர்
அல்லல் பெரிதும் அறுப்பான் அருமறை ஆறங்கம் ஓதும்
எல்லை இருப்பதும் ஆரூரவர் எம்மையும் ஆள்வரோகேளீர். 3

---

1. இடவகைகளிலும் காலவகைகளிலும் கலந்திருப்பவன்.
2. எள்கி–இகழ்ந்து. முகம் – முகமன்.
3. குலா–கலந்த அன்பான வார்த்தைகள். அரிய மறையும் ஆறு அங்கமும் ஓதுகின்ற அப்பொருளுக் கெல்லாம் முடிவிடமாக நிற்பவன்; எல்லை–முடிவிடம்.

நெறியும் அறிவும் செறிவும் நீதியும் நான்மிகப் பொல்லேன்
மிறையுந் தறியும் உகப்பன் வேண்டிற்றுச் செய்து திரிவன்
பிறையும் அரவும் புனலும் பிறங்கிய செஞ்சடை வைத்த
இறைவனிருப்பதும் ஆரூரவர் எம்மையும்ஆள்வரோகேளீர்.

நீதியில்ஒன்றும்வழுவேன் நிட்கண்டகஞ்§செய்துவாழ்வேன்
வேதியர் தம்மை வெகுளேன் வெகுண்டவர்க் குந்துணை ஆகேன்
சோதியிற் சோதிஎம் மானைச்சுண்ணவெண் ணீறணிந்திட்ட
ஆதி இருப்பதும் ஆரூரவர் எம்மையும் ஆள்வரோ கேளீர். 5

அருத்தம் பெரிதும் உகப்பன் அலவலை||யேன்அலந் தார்கள்
ஒருத்தர்க்குதவியேனல்லேன்உற்றவர்க்குந்துணை அல்லேன்
பொருத்தமேல் ஒன்று மிலாதேன் புற்றெடுத் திட்டிடங் கொண்ட
அருத்தனிருப்பதும் ஆரூரவர்எம்மையும் ஆள்வரோகேளீர்.6

சந்தம் பலஅறுக் கில்லேன் சார்ந்தவர் தம்அடிச் சாரேன்
முந்திப் பொருவிடை ஏறி மூவுல குந்திரி வானே
கந்தங்கமழ்கொன்றைமாலைக் கண்ணியன்விண்ணவரேத்தும்
எந்தையிருப்பதும ஆரூரவர் எம்மையும் ஆள்வரோகேளீர்.7

---

4. நெறி முதலியன இல்லாத பொல்லாதவன். செறிவு—அடக்கம். மிறையும் தறியும்—மிடுக்கும் பிறரைப் பிரித்தலும்.

5. நீதியில் ஒன்றும் வழுவேன் – நீதிநெறியிலே பொருந்திய வழுவை உடையவன்; நீதி வழுவினவன். நிட்கண்டகம் – வன்கண்மை. § 'நிர்க்கண்டகம்' என்றும் பாடம்.

6. அருத்தம்—பொருளை. அலவலையேன் – மனக்கவலையை உடையேன்; || 'அல்லலையேன்' என்றும் பாடம். அலந்தார்க்கு—வருந்தினவர்க்கு. உற்றவர்க்கு – துன்பம் அடைந்தவர்க்கு. புற்றெடுத்திட்ட இடத்தைத் தாம்கொண்ட அருத்தன்; புற்றிடங்கொண்ட நாயகர்; அருத்தன் – செல்வன்.

7. சந்தம் பல – ஒருமைப்பாடின்றி அமைந்த பல திற இயல்புகள்.

நெண்டிக்கொண்டேயுங்கிலாய்ப்பனிச்சயமேஇது திண்ணம்
மிண்டர்க்கு மிண்டலாற் பேசேன் மெய்ப்பொரு ளன்றி
உணரேன்
பண்டங் கிலங்கையர் கோனைப் பருவரைக் கீழடர்த் திட்ட
அண்டனிருப்பதும் ஆரூரவர்எம்மையும்ஆள் வரோகேளீர். 8

நமர்பிறர் என்ப தறியேன் நான்கண்ட தேகண்டுவாழ்வேன்
தமரம் பெரிதும் உகப்பன் தக்கவா றென்றும் இலாதேன்
குமரன் திருமால் பிரமன் கூடிய தேவர் வணங்கும்
அமரனிருப்பதும் ஆரூரவர் எம்மையும் ஆள்வரோ கேளீர்.9

ஆசை பலஅறுக் கில்லேன் ஆரையும் அன்றி உரைப்பேன்
பேசிற்சழக்கலாற்பேசேன்பிழைப்புடையேன்மனந்தன்னு
லோசை பெரிதும் உகப்பேன்* ஒலிகடல் நஞ்சமு துண்ட
ஈச னிருப்பதும் ஆரூரவர் எம்மையும் ஆள்வரோகேளீர். 10

எந்தை இருப்பதும் ஆரூ ரவர் எம்மையும் ஆள்வரோ என்று
சிந்தை செயுந்திறம் வல்லான் திருமரு வுந்திரள் தோளன்
மந்த முழவம் இயம்பும் வளவயல் நாவலா ரூரன்
சந்த மிசையொடும் வல்லார் தாம்புகழ் எய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

8. நெண்டிக் கொண்டேயும் கிலாய்ப்பன்–மேலும் மேலும் முயற்சி செய்து கொண்டிருந்தும் வருந்துவேன்; நெண்டுதல் – உந்துதல். 'கலாய்ப்பன்' என்றும் பாடம். மிண்டர் – மிடுக்குடையவர். மெய்ப்பொருள் அன்றி உணரேன் – உண்மைப் பொருளை விரோதித்து உணராமல் இருப்பேன்; அன்றுதல் – பகைத்தல்.

9. நம்மவர் பிறர் என்னும் வேறுபாட்டை அறியேன். தமரம்–வெறும் ஆரவாரம்.

10. அன்றி–பகைத்து. சழக்கு–வஞ்சகம், பிழைப்பு–தவறு.
* 'உகப்பான்' என்றும் பாடம்.

**வரலாறு:** பல தலங்களைத் தரிசனம் செய்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தில்லையில் வந்து பணிந்ததும், "ஆரூருக்கு வா" என்று எம்பெருமான் அசரீரியாகப் பணிக்க, அவ்வாறே அத் தலத்தை அணுகினார். சுவாமிகள் வருவதை அங்குள்ள தொண்டர்களுக்கு எம்பெருமான் தெரிவிக்க, அவர்கள் சுவாமிகளை எதிர்கொண்டு வணங்கினர். அப்போது பாடியருளிய திருப் பதிகம் இது [**பெரிய புராணம்**, தடுத்தாட்கொண்ட புராணம், *122–123*.]

---

## பண்: புறநீர்மை

*திருச்சிற்றம்பலம்*

அந்தியும் நண்பகலும்* அஞ்சுப தஞ்சொல்லி
முந்தி எழும்பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திரு வாரூர்புக்
கெந்தை பிரானாரை என்றுகொல் எய்துவதே. 1

*நின்ற வினைக்கொடுமை நீங்க இருபொழுதும்*
*துன்று மலர்இட்டுச் சூழும் வலஞ்செய்து*
*தென்றல் மணங்கமழும் தென்திரு வாரூர்புக்*
*கென்றன் மனங்குளிர என்றுகொல் எய்துவதே.* 2

*முன்னை முதற்பிறவி மூதறி யாமையினால்*
*பின்னை நினைந்தனவும் பேதுற வும்மொழியச்*
*செந்நெல்‡ வயற்கழனித் தென்திரு வாரூர்புக்*
*கென்னுயிர்க் கின்னமுதை என்றுகொல் எய்துவதே.* 3

---

1. * 'நன்பகலும்' என்றும் பாடம். அஞ்சுபதம் – பஞ்சாட்சரம்; ஓவ்வோரெழுத்துக்கும் தனித்தனியே பொருள் உண்மையின் ஒவ்வொன்றும் பதம் ஆயிற்று. பராமரியா – பாதுகாத்து.

3. மூதறியாமையினால் – பலநாளாக அடிப்பட்டு வந்த பழைய அஞ்ஞானத்தால். பேதுறவு – மயங்குதல். ‡ 'சென்னல்' என்றும் பாடம்.

நல்ல நினைப்பொழிய நாள்களில் ஆருயிரைக்
கொல்ல நினைப்பனவுங் குற்றமும் அற்றொழியச்
செல்வ வயற்கழனித் தென்திரு வாரூர்புக்
கெல்லை மிதித்தடியேன் என்றுகொல் எய்துவதே. 4

கடுவரி மாக்கடலுட் காய்ந்தவன் தாதையைமுன்
சுடுபொடி மெய்க்கணிந்த சோதியை வன்தலைவாய்
அடுபுலி ஆடையனை ஆதியை ஆரூர்புக்
கிடுபலி கொள்ளியைநான் என்றுகொல் எய்துவதே. 5

சூழ்ஒளி நீர்நிலந்தீத் தாழ்†வளி ஆகாசம்
வானுயர் வெங்கதிரோன் வண்டமிழ் வல்லவர்கள்
ஏழிசை ஏழ்நரம்பின் ஓசையை ஆரூர்புக்
கேழுல காளியைநான் என்றுகொல் எய்துவதே. 6

கொம்பன நுண்ணிடையாள் கூறனை நீறணிந்த
வம்பனை எவ்வுயிர்க்கும் வைப்பினை ஒப்பமராச்§
செம்பொனை நன்மணியைத் தென்திரு ஆரூர்புக்
கென்பொனை என்மணியை என்றுகொல் எய்துவதே. 7

ஆறணி நீள்முடிமேல் ஆடர வஞ்சூடிப்
பாறணி வெண்டலையிற் பிச்சைகொள் நச்சரவன்
சேறணி தண்கழனித் தென்திரு வாரூர்புக்
கேறணி எம்மிறையை என்றுகொல் எய்துவதே. 8

---

5. கடுவரி மா கடலுள் காய்ந்தவன் தாதையை – கடிய கோடுகளையுடைய மாமரத்தைக் கடலிலே கோபித்து அழித்த முருகவேளுடைய தந்தையை. புலி ஆடையனை – புலித்தோலை ஆடையாக அணிந்தவனை. கொள்ளியை – கொள்பவனை.

6. † 'தாள்' என்றும் பாடம்.

7. வம்பனை–மணம் உடையவனை. ஒப்பு அமரா – உவமையில் பொருந்தாத. § 'வைப்பனை ஒப்பமரர்' என்றும் பாடம்.

8. பாறு – பருந்து. நஞ்சு அரவன்.

மண்ணினை உண்டுமிழ்ந்த மாயனும் மாமலர்மேல்
அண்ணலும் நண்ணரிய ஆதியை மாதிரெடும்
திண்ணிய மாமதில்சூழ் தென்திரு வாரூர்புக்
கெண்ணிய கண்குளிர என்றுகொல் எய்துவதே. 9

மின்னெடுஞ் செஞ்சடையான் மேவிய ஆரூரை
நன்னெடுங் காதன்மையால் நாவலர் கோன்ஊரன்
பன்னெடுஞ் சொல்மலர்கொண் டிட்டன பத்தும்வல்லார்
பொன்னுடை விண்ணுலகம் நண்ணுவர் புண்ணியரே. 10

திருச்சிற்றம்பலம்

**வரலாறு:** இருகண்களையும் இழந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் காஞ்சிபுரம் வந்து திருவேகம்பரைப் பணிந்து ஒரு கண் பெற்றார்; அப்பால் திருவாரூரை நினைத்து இப்பதிகத்தைப் பாடியருளினார். (**பெரிய புராணம்**, ஏயர்கோன், 290–291.)

---

## பண்: செந்துருத்தி

திருச்சிற்றம்பலம்

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார்தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. 1

விற்றுக் கோள்வீர்* ஒற்றி அல்லேன் விரும்பி ஆட்பட்டேன்
குற்றம் ஒன்றுஞ் செய்த தில்லை கொத்தை ஆக்கினீர்
எற்றுக் கடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்தான் தாரா தொழிந்தால் வாழ்ந்து போதீரே. 2

---

1. மீளா–பிறரிடம் மீண்டு செல்லாத. வாளாங்கு – சும்மா.
2. * 'கொள்ளீர்' என்றும் பாடம். கொத்தை–குருடு. ஒரு கண் பெற்று மற்றொரு கண்ணைப்பெறுவதற்குப் பாடினமையின் 'மற்றைக்கண்' என்றார்.

அன்றில் முட்டா தடையுஞ் சோலை ஆரூர் அகத்தீரே
கன்று முட்டி உண்ணச் சுரந்த காலி யவைபோல
என்றும் முட்டாப் பாடும் அடியார் தங்கண் காணாது
குன்றில் முட்டிக் குழியில் விழுந்தால்* வாழ்ந்து போதீரே.

துருத்திஉறைவீர்பழனம்பதியாச் சோற்றுத்துறை ஆள்வீர்
இருக்கை திருவா ரூரே உடையீர் மனமே எனவேண்டா
அருத்தி உடைய அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வருத்தி வைத்து மறுமை பணித்தால் வாழ்ந்து போதீரே. 4

செந்தண் பவளந் திகழுஞ் சோலை இதுவோ திருவாரூர்
எந்தம் மடிகேள் இதுவே ஆமா றுமக்காட் பட்டோர்க்குச்
சந்தம் பலவும் பாடும் மடியார் தங்கண் காணாது
வந்தெம் பெருமான்முறையோஎன்றால் வாழ்ந்துபோதீரே.5

தினைத்தாள் அன்ன செங்கால் நாரை சேருந் திருவாரூர்ப்
புனைத்தார்†கொன்றைப் பொன்போல் மாலைப்புரிபுன் சடையீரே
தனத்தா லின்றித் தாந்தாம் மெலிந்து தங்கண் காணாது
மனத்தால் வாடி அடியார் இருந்தால் வாழ்ந்து போதீரே. 6

ஆயம் பேடை அடையுஞ் சோலை ஆரூர் அகத்தீரே
ஏயெம் பெருமான் இதுவே ஆமா றுமக்காட் பட்டோர்க்கு

---

3. காலி-பசு. தம் கண் காணாது-தம்முடைய கண் பார்க்கும் தொழிலைச் செய்யாமல். * 'வீழ்ந்தால்' என்றும் பாடம்.

4. அருத்தி-அன்பு. வருத்தி வைத்து மறுமை பணித்தால்-இம்மையில் வருத்தத்தை உண்டுபண்ணி வைத்து மறுமை யின்பம் கிடைக்கும்படி கட்டளையிட்டால்.

6. தினைத்தாள்-தினைப்பயிரின் அடி. புனை தார்கொன்றை-புனைதலையுடைய கொன்றை மாலை. † 'புனத்தார்' என்றும் பாடம். தனத்தால் இன்றி-செல்வக்குறைபாட்டால் இன்றி.

மாயங் காட்டிப் பிறவி காட்டி மறவா மனங்காட்டிக்
காயங் காட்டிக் கண்ணீர் கொண்டால் வாழ்ந்து போதீரே. 7

கழியாய்க் கடலாய்க் கலனாய் நிலனாய்க் கலந்த† சொல்லாகி
இழியாக் குலத்திற் பிறந்தோ மும்மை இகழா தேத்துவோம்
பழிதான் ஆவ தறியீர் அடிகேள் பாடும் பத்தரோம்
வழிதான் காணா தலமந்‡ திருந்தால் வாழ்ந்து போதீரே. 8

பேயோ டேனும் பிறிவொன்* றின்னா தென்பர் பிறரெல்லாம்
காய்தான் வேண்டில்கனிதா னன்றோகருதிக்கொண்டக்கால்
நாய்தான் போல நடுவே திரிந்தும் உமக்காட் பட்டோர்க்கு
வாய்தான் திறவீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே. 9

செருந்தி செம்பொன் மலருஞ் சோலை இதுவோ திருவாரூர்
பொருந்தித் திருமூ லட்டா னம்மே இடமாக் கொண்டீரே§
இருந்தும் நின்றுங் கிடந்தும் உம்மை இகழா தேத்துவோம்
வருந்தி வந்தும் உமக்கொன் றுரைத்தால் வாழ்ந்து போதீரே.

காரூர் கண்டத் தெண்டோள் முக்கண் கலைகள் பலவாகி
ஆரூர்த் திருமூ லட்டா னத்தே அடிப்பே ராரூரன்
பாரூர் அறிய என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
வாரூர் முலையாள் பாகங் கொண்டீர் வாழ்ந்து போதீரே. 11

திருச்சிற்றம்பலம்

---

7. ஆயம் பேடை அடையும் – ஆண் பறவைக் கூட்டம் பெண் பறவைகளை வந்து அடையும். காயம்–உடம்பு.

8. கலன்–கப்பல். † 'கழிந்த' ; ‡ 'தலம்வந்' என்றும்பாடம். அலமந்து–மனம் சுழன்று.

9. பேயோடு நட்புச் செய்து பிரிந்தாலும் அப்பிரிவு துன்பத்தை உண்டாக்கும் என்பர். * 'பிரிவொன்' என்றும் பாடம்.

10. திருமூலட்டானம் – புற்றிடங்கொண்ட நாயகர் எழுந்தருளியுள்ள மூலஸ்தானம். § 'கொண்டீரை' என்றும் பாடம்.

11.

சுவாமி: வன்மீகநாதர்

அம்பிகை: அல்லியங்கோதையம்மை

**வரலாறு:** திருவொற்றியூரிலிருந்து கண் இரண்டும் இன்றிப் புறப்பட்ட சுந்தரர் திருவேகம்பத்தில் ஒற்றைக்கண் பெற்றுப், பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருவாரூரை அடைந்தார்; திருக்கோயிலிற் புக்குத் திருமூலட்டானத்தை இறைஞ்சி இப்பதிகம் பாடி மற்றைக் கண்ணும் அருளும்படி வேண்ட, இறைவர் அவ்வாறே கொடுத்தருளினார். [**பெரிய புராணம்,** ஏயர்கோன், 308–310.]

---

## 21. திருவாரூர்ப் பரவையுண்மண்டளி

### பண்: பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
காவாயே* கண்டுகொண் டார்ஐவர் காக்கிலும்
நாவாயால் உன்னையே நல்லன சொல்லுவேற்
காவாஎன் பரவையுண் மண்டளி அம்மானே. 1

பொன்னானே புலவர்க்கு நின்புகழ் போற்றலாம்
தன்னானே தன்னைப் புகழ்ந்திடுந் தற்சோதி
மின்னானே செக்கர் வானத் திளஞாயி
றன்னானே பரவையுண் மண்டளி அம்மானே. 2

நிம்மாறு துன்னையே நல்லன சொல்லுவார்
பேர்மாறென் புண்ணியா புண்ணியம் ஆனானே

---

1. தூவாயா: துர்வாச முனிவர் பூசித்த மூர்த்தியாதலின் தூவாயர் என்ற திருநாமம் அமைந்தது. * 'காவாயா' என்றும் பாடம். ஐவர் – ஐம்பொறிகள். காக்கிலும் – வின்பால் செல்லாமல் தடுத்தாலும். ஆவா என் – அந்தோ என்று இரங்குவாயாக.

2. புலவர்க்குப் பொன்னாக இருப்பவன்.

பேய்மாறுப் பிணமிடு காடுகந் தாடுவாய்க்
காமாறென் பரவையுண் மண்டளி அம்மானே. 3

நோக்குவேன் உன்னையே நல்லன நோக்காமைக்
காக்கின்றாய்† கண்டுகொண் டார்ஐவர் காக்கிலும்
வாக்கென்னும் மாலைகொண் டுன்னை என்மனத்
தார்க்கின்றேன் பரவையுண் மண்டளி அம்மானே. 4

பஞ்சேரும் மெல்லடி யாளையோர் பாகமாய்
நஞ்சேரும் நன்மணி கண்டம் உடையானே
நெஞ்சேர நின்னையே உள்கி நினைவாரை
அஞ்சேலென் பரவையுண் மண்டளி அம்மானே. 5

அம்மானே ஆகம சீலர்க் கருள்நல்கும்
பெம்மானே பேரரு ளாளன் பிடவூரன்
தம்மானே தண்டமிழ் நூற்புல வாணர்க்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி யம்மானே. 6

விண்டானே மேலையார் மேலையார் மேலாய
எண்டானே எழுத்தொடு சொற்பொருள் எல்லாமுன்
கண்டானே கண்டனைக் கொண்டிட்டுக் காட்டாயே
அண்டானே பரவையுண் மண்டளி அம்மானே. 7

காற்றானே கார்முகில் போல்வதோர் கண்டத்தெம்
கூற்றானே கோல்வளை யாளைஓர் பாகமாய்

---

4. † 'காக்கின்றார்' என்றும் பாடம். வாக்கென்னும் மாலை—சொல்மாலை. ஆர்க்கின்றேன் — கட்டுகின்றேன்.

7. விண்டானே — எதன்கண்ணும் சாராமல் நீங்கியிருப்பவனே. மேலானவர்களுக்குள்ளே மேலானவர்களின் மேலான கருத்தாய் இருப்பவனே. எண் — எண்ணம். எழுத்துச் சொல் பொருள் என்னும் மூன்றும் உன் மூன்று கண்களாக உள்ளன.

*நீற்றனே நீள்சடை மேல்நிறை வுள்ளதோர்‡*
*ஆற்றனே பரவையுண் மண்டளி யம்மானே.* 8

*செடியேன்நான் செய்வினை நல்லன செய்யாத*
*கடியேன்நான் கண்டதே கண்டதே காமுறும்*
*கொடியேன்நான் கூறுமா§ றுன்பணி கூருத*
*அடியேன்நான் பரவையுண் மண்டளி யம்மானே.* 9

*கரந்தையும் வன்னியும் மத்தமுங் கூவிளம்*
*பரந்தசீர்ப் பரவையுண் மண்டளி அம்மானை*
*நிரம்பிய ஊரன் உரைத்தன பத்திவை*
*விரும்புவார் மேலையார் மேலையார் மேலாரே.* 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மண்டலேசுரர்

அம்பிகை: பஞ்சின்மெல்லடியாள்

**வரலாறு:** திருவேகம்பத்தில் ஒற்றைக் கண் பெற்று வரும் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூரை அடைந்து, முதலில் பரவையுண் மண்டளியைத் தரிசித்து இப்பதிகத்தைப் பாடினர் **[பெரிய புராணம், ஏயர்கோன், 301-303.]**

---

8. எம் கூற்றனே – எம் பங்கில் இருப்பவனே; காலகாலனே எனவும் ஆம். ‡'யுள்ளதோர்' என்றும் பாடம்.

9. செடியேன் – தீயவனாகிய நான். §'கூடுமோ' என்றும் பாடம்.

10. மத்தம்; ஊமத்தமலர். கூவிளம் – வில்வம். மேலையாருக்கும் மேலையாருக்கும் மேலானவர்.

## 22. திருநாட்டியத்தான்குடி — பண்: தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

பூணாண் ஆவதோர் அரவங்கண் டஞ்சேன்
புறங்காட் டாடல்கண் டிகழேன்
பேணீ ராகிலும் பெருமையை உணர்வேன்
பிறவே னாகிலும் மறவேன்
காணீ ராகிலுங் காண்பனென் மனத்தால்
கருதீ ராகிலுங் கருதி
நானே லும்மடி பாடுதல் ஒழியேன்
நாட்டியத் தான்குடி நம்பீ. 1

கச்சேர் பாம்பொன்று‡ கட்டிநின் றிடுகாட்
டெல்லியில் ஆடலைக் கவர்வன்
துச்சேன்† என்மனம் புகுந்திருக் கின்றமை
சொல்லாய் திப்பிய மூர்த்தீ
வைச்சே இடர்களைக் களைந்திட வல்ல
மணியே மாணிக்க வண்ணா
நச்சேன் ஒருவரை நான்உமை அல்லால்
நாட்டியத் தான்குடி நம்பீ. 2

அஞ்சா தேஉமக் காட்செய வல்லேன்
யாதினுக் காசைப் படுகேன்
பஞ்சேர் மெல்லடி மாமலை மங்கை
பங்கா எம்பர மேட்டீ

---

1. பூணும் நாணும் ஆவது ஓர் அரவம்.

2. ‡ 'அரவொன்று'; † 'துச்சே' என்றும் பாடம். எல்லியில்—இரவில். துச்சேன் – இழிந்தவனாகிய எனது. இடர்களை வைத்துப் பின் களைந்திட வல்லவன்.

மஞ்சேர் வெண்மதி செஞ்சடை வைத்த
மணியே மாணிக்க வண்ணா
நஞ்சேர் கண்டா வெண்டலை ஏந்தீ
நாட்டியத் தான்குடி நம்பீ. 3

கல்லே னல்லேன் நின்புகழ் அடிமை
கல்லா தேபல கற்றேன்
நில்லே னல்லேன் நின்வழி நின்றார்
தம்முடை நீதியை நினைய
வல்லே னல்லேன் பொன்னடி பரவ
மாட்டேன் மறுமையை நினைய
நல்லே னல்லேன் நானுமக் கல்லால்
நாட்டியத் தான்குடி நம்பீ. 4

மட்டார் பூங்குழல் மலைமகள் கணவனைக்
கருதா தார்தமைக் கருதேன்
ஒட்டா ராகிலும் ஒட்டுவன் அடியே
னும்மடி அடைந்தவர்க் கடிமைப்
பட்டே னாகிலும் பாடுதல் ஒழியேன்
பாடியும் நாடியும் அறிய
நட்டேன் ஆதலால் நான்மறக் கில்லேன்
நாட்டியத் தான்குடி நம்பீ. 5

படப்பாற் றன்மையில் நான்பட்ட தெல்லாம்
படுத்தாய் என்றல்லல் பறையேன்
குடப்பாச் சில்லுறை கோக்குளிர் வானே
கோனே கூற்றுதைத் தானே

---

5. மட்டு – நறுமணம். நட்டேன் – தோழமை பூண்டேன்.

6. பறையேன் – பேசமாட்டேன். நடப்பீர் ஆகிலும் – என்னை அகன்று போவீராலும்.

மடப்பாற் றயிரொடு நெய்மகிழ்ந் தாடும்
மறையோதீ மங்கை.பங்கா
நடப்பீ ராகிலும் நடப்பன்உம் அடிக்கே
நாட்டியத் தான்குடி நம்பீ. 6

ஐவாய் அரவினை மதியுடன் வைத்த
அழகா அமரர்கள் தலைவா
எய்வான் வைத்ததோர் இலக்கினை அணைதர
நினைந்தேன் உள்ளமுள் ளளவும்
உய்வான் எண்ணிவந் தும்மடி அடைந்தேன்
உகவீ ராகிலும் உகப்பன்
நைவா னன்றுமக் காட்பட்ட தடியேன்
நாட்டியத் தான்குடி நம்பீ. 7

கலியேன் மானுட வாழ்க்கையொன் றாகக்
கருதிடிற் கண்கணீர் பில்கும்*
பலிதேர்ந் துண்பதோர் பண்புகண் டிகழேன்
பசுவே ஏறிலும் பழியேன்
வலியே யாகிலும் வணங்குதல் ஒழியேன்
மாட்டேன் மறுமையை நினையேன்
நலியேன் ஒருவரை நானுமை அல்லால்
நாட்டியத் தான்குடி நம்பீ. 8

குண்டா டிச்சமண் சாக்கியப் பேய்கள்
கொண்டா ராகிலுங் கொள்ளக்
கண்டா லுங்கரு தேனெரு தேறும்
கண்ணு நின்னல தறியேன்

---

8. கலியேன் – ஆரவாரத்தைச் செய்யேன். * 'மல்கும்' என்றும் பாடம்.

9. குண்டு ஆடி – கீழ்மை பேசி.

தொண்டா டித்தொழு வார்தொழக் கண்டு
தொழுதேன் என்வினை போக
நண்டா டும்வயல் தண்டலை வேலி
நாட்டியத் தான்குடி நம்பீ. 9

கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற
கொடிறன் கோட்புலி சென்னி
நாடார் தொல்புகழ் நாட்டியத் தான்குடி
நம்பியை நாளும் மறவாச்
சேடார் பூங்குழற் சிங்கடி யப்பன்
திருவா ரூரன் உரைத்த
பாடீ ராகிலும் பாடுமின் தொண்டீர்
பாடநும் பாவம்பற் றறுமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: இரத்தினகிரிநாதர்; அம்பிகை: மலர்மங்கைநாயகி.

**வரலாறு:** சுந்தரமூர்த்தி நாயனார் பல தலங்களையும் தரிசித்துவரும் முறையில் நாட்டியத்தான்குடி நண்ணினார்; சோழ மன்னனுடைய உரிமைச் சேனாதிபதியாக இருந்தவரும் அவ்வூரினருமாகிய கோட்புலி நாயனார், சுந்தரரை வரவேற்று உபசாரம் செய்து வழிபட்டுத் தம் புதல்விமாராகிய சிங்கடியார், வனப்பகையார் என்னும் இருவரையும் வணங்கச் செய்தார்; பிறகு, "அடியேன் பெற்ற மக்கள் இவர்; இவர்களை அடிமையாகக் கொண்டருளவேண்டும்" என்று பணிய, நம்பியாரூரர், "இவர் எனக்குத் தூய மக்கள்" என்று ஏற்றுக்கொண்டார்; பிறகு இறைவரைத் தரிசித்து இந்தப் பதிகம் பாடிக் கோட்புலியாரைச் சிறப்பித்ததோடு தம்மைச் சிங்கடியப்பனென்று ஒரு பாட்டில் வைத்தருளினார். [பெரியபுராணம், ஏயர்கோன், 33-42]

---

10. கூடாமன்னர் - பகையரசர். கொடிறன் - திண்ணியன். சிங்கடி—கோட்புலி நாயனார் திருமகளார்; இவரைத் தம் மகளாக ஏற்றுக்கொண்டார் சுந்தரர்.

## 23. திருவலிவலம் — பண்: தக்கேசி

*திருச்சிற்றம்பலம்*

ஊனங் கத்து§யிர்ப் பாய்உல கெல்லாம்*
ஓங்கா ரத்துரு ஆகிநின் றானை
வானங் கத்§தவர்க் கும்மளப் பரிய
வள்ள லைஅடி யார்கள்தம் உள்ளத்
தேனங் கத்த§மு தாகிஉள் ளூறும்
தேச னைத்திளைத் தற்கினி யானை
மானங் கைத்தலத் தேந்தவல் லானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 1

பல்லடி யார்பணிக் குப்‡பரி வானைப்
பாடிஆ டும்பத்தர்க் கன்புடை யானைச்
செல்லடி யேநெருக் கித்திறம் பாது
சேர்ந்தவர்க் கேசித்தி முத்திசெய் வானை
நல்லடி யார்மனத் தெய்ப்பினில் வைப்பை
நானுறு குறைஅறிந் தருள்புரி வானை
வல்லடி யார்மனத் திச்சையு ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 2

---

1. § 'ஊனங்கைத்'; 'வானங்கைத்'; 'தேனங்கைத்'; 'உயிர்க்கெல்லாம்' என்றும் பாடம். ஊன் அங்கத்து உயிர்ப்பாய்—ஊனையுடைய உடலிலே மூச்சுக் காற்றாகி. வான் அங்கத்தவர்க்கும்—வானத்தில் வாழும் திருமேனியையுடைய தேவர்களுக்கும். தேன் அங்கத்து அமுது ஆகி. தேசனை—ஒளிபடைத்தவனை. அங்கைத் தலத்து மான் ஏந்த வல்லானை.

2. ‡ 'பரிக்கும்' என்றும் பாடம். செல் அடியே நெருக்கி—அன்பர்பாற் செல்கின்ற திருவடியினை அணுகி. எய்ப்பினில் வைப்பை — இளைத்த காலத்தில் பயன்படும் நிதியை.

ஆழிய ளுய்அகன் றேஉயர்ந் தானை
　　ஆதிஅந் தம்பணி வார்*க்கணி யானைக்
கூழைய ராகிப்பொய் யேகுடி ஓம்பிக்
　　குழைந்து மெய்யடி யார்குழுப் பெய்யும்
வாழியர்க் கேவழு வாநெறி காட்டி
　　மறுபிறப் பென்னை மாசறுத் தானை
மாழையொண் கண்ணுமை யைமகிழ்ந் தானை
　　வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 3

நாத்தான் உன்திற மேதிறம் பாது
　　நண்ணிஅண் ணித்தமு தம்பொதிந் தூறும்
ஆத்தா னைஅடி யேன்றனக் கென்றும்
　　அளவிறந் தபல தேவர்கள்† போற்றும்
சோத்தா னைச்சுடர் மூன்றிலும் ஒன்றித்
　　துருவி மால்பிர மன்னறி யாத
மாத்தா னைமாத் தெனக்குவைத் தானை
　　வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 4

---

3. * 'பணியார்' என்றும் பாடம்; பணி செய்பவர் என்பது பொருள். ஆழம், அகலம், உயரம் என்னும் மூன்றும் உடையவன். ஆழியனாய்–ஆழத்தையுடையவனாய். கூழையர் ஆகி – வணக்கத்தை உடையவராய். பொய்யே குடி ஓம்பி–பொய்யாகக் குடும்பத்தைக் காத்து. குழுப்பெய்யும்–கூட்டத்திலே சேரும். மாழை யொண் கண்ணுமை: தலத்து அம்பிகை.

4. அண்ணித்து – தித்தித்து. ஆத்தானை – ஆப்தனை. † 'பஃறேவர்கள்' என்றும் பாடம். சோத்தானை – தோத்திரத்தைப் பெற்றவனை, சுடர் மூன்று – சூரிய சந்திராக்கினிகள். மாத்தானை – பெருமையை உடையவனை; மகத்து என்பது மாத்து என வந்தது. மாத்து–பெருமை.

நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்*
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி ஏத்துகப் பானைத்
தொண்ட னேன்அறி யாமை அறிந்து
கல்லி யல்மனத் தைக்கசி வித்துக்
கழலடி காட்டிஎன் களைகளை அறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 5

*பாடுமா பாடிப் பணியுமா றறியேன்*
*பனுவுமா பனுவிப் பரவுமா றறியேன்*
*தேடுமா தேடித் திருத்துமா றறியேன்*
*செல்லுமா செல்லச் செலுத்துமா றறியேன்*
*கூடுமா றெங்ஙன மோஎன்று கூறக்*
*குறித்துக் காட்டிக் கொணர்ந்தெனை ஆண்டு*
*வாடிநீ வாளா வருந்தல்என் பானை*
*வலிவ லந்தனில் வந்துகண் டேனே.* 6

*பந்தித்த வல்வினைப்¶ பற்றறப் பிறவிப்*
*படுக டற்பரப் புத்தவிர்ப் பானைச்*
*சந்தித் ததிற லாற்‡பணி பூட்டித்*
*தவத்தை ஈட்டிய தம்மடி யார்க்குச்*

---

5. * 'நாவுக்' என்றும் பாடம். கல் இயல் மனத்தை – கல்லின் இயல்புகொண்ட திண்ணிய மனத்தை. களைகள்–குற்றங்கள்.

6. பனுவுமா பனுவி–செய்யுள் செய்யுமாறு செய்து.

7. ¶ 'பந்தித் தவ்வினை'; ‡ 'திறலார்' என்றும் பாடம். பணிபூட்டி – தொண்டை மேற்கொண்டு. திருப்பாதமாகிய சிவலோகம்; திருவடியே மோட்சமாதலின் இங்ஙனம் கூறினார். வந்திப்பார்-வணங்குபவர்.

சிந்தித் தற்கெளி தாய்த்திருப் பாதஞ்
சிவலோ கந்திறந் தேற்றவல் லானை
வந்திப் பார்தம் மனத்தினுள் ளானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 7

எவ்வவர் தேவர் இருடிகள் மன்னர்
எண்ணிறந் தார்கள்மற் றெங்குநின் றேத்த
அவ்வவர் வேண்டிய தேஅருள் செய்து
அடைந்தவர்க் கேஇட மாகிநின் றானை
இவ்வவர் கருணைஎம் கற்பகக் கடலை
எம்பெரு மான்அரு ளாய்என்ற பின்னை
வவ்விஎன் ஆவி மனங்கலந் தானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 8

திரியும் முப்புரஞ் செற்றதுங் குற்றத்
திறல ரக்கனைச் செறுத்ததும் மற்றைப்
பெரிய நஞ்சமு துண்டதும் முற்றும்*
பின்னையாய் முன்ன மேமுளைத் தானை
அரிய நான்மறை அந்தணர் ஓவா
தடிப ணிந்தறி தற்கரி யானை
வரையின் பாவை மணாளன்எம் மானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 9

என்ற அந்தணன் தலையினை அறுத்து
நிறைக்க மாலுதி ரத்தினை ஏற்றுத்
தோன்று தோள்மிசைக் களேபரந் தன்னைச்
சுமந்த மாவிர தத்தகங் காளன்

---

8. எவ்வவர்-எவ்வெவர் – யார் யாரோ. என் ஆவியும் மனமும் கலந்தானை.

9. * 'மற்றும்' என்றும் பாடம். அரக்கனை-இராவணனை. செறுத்ததும்-தண்டித்ததும். வரையின் பாவை-பார்வதி.

சான்று காட்டுதற் கரியவன் எளியவன்
தன்னைத் தன்னி லாமனத் தார்க்கு
மான்று சென்றணை யாதவன் றன்னை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே. 10

கலிவ லங்கெட ஆரழல் ஓம்பும்
கற்ற நான்மறை முற்றனல் ஓம்பு§
வலிவ லந்தனில் வந்துகண் டடியேன்
மன்னும் நாவலா ரூரன்வன் றொண்டன்
ஒலிகொள் இன்னிசைச் செந்தமிழ் பத்தும்
உள்ளத் தால்உகந் தேத்தவல் லார்போய்
மெலிவில் வானுல கத்தவர் ஏத்த
விரும்பி விண்ணுல கெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மனத்துணை நாதர்

அம்பிகை: மாழையங்கண்ணி அம்மை

---

## 24. திருக்கோளிலி — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

நீள நினைந்தடியேன் உமை நித்தலும் கைதொழுவேன்
வாளன கண்மடவாள் அவள் வாடி வருந்தாமே
கோளிலி எம்பெருமான்குண்டை யூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை எம்பெருமான் அவை அட்டித் தரப்பணியே. 1

---

10, அந்தணன்–பிரமனது. களேபரம்–உயிர்போன உடல். சான்று–சாட்சி. மான்று–மயங்கி. கங்காளன் – முழு எலும்பை யணிந்தவன்.

11. § 'ஓம' என்றும் பாடம். கலியினது வெற்றி கெடும் படியாக.

1. அவள் என்றது பரவையாரை. அட்டித்தர –கொண்டு வந்து சேர்க்க.

வண்டம ருங்குழலாள் உமை நங்கையோர் பங்குடையாய்
விண்டவர் தம்புரமூன் றெரி செய்தஎம் வேதியனே
தெண்திரை நீர்வயல்சூழ் திருக் கோளிலி எம்பெருமான்
அண்டம தாயவனே அவை அட்டித் தரப்பணியே. 2

பாதியோர் பெண்ணை வைத்தாய் பட ருஞ்சடைக் கங்கை
மாதர்நல் லார்§வருத்தம் அது நீயும் அறிதியன்றே[வைத்தாய்
கோதில்பொழில்புடைசூழ் குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றேன்
ஆதியே அற்புதனே அவை அட்டித் தரப்பணியே. 3

சொல்லுவதென் னுனைநான் தொண்டைவாயுமைநங்கையைநீ
புல்கி இடத்தில் வைத்தாய்க் கொரு பூசல்செய் தார்உளரோ
கொல்லைவளம்புறவிற்குண்டையூர்ச்சிலநெல்லுப்பெற்றேன்
அல்லல் களைந்தடியேற் கவை அட்டித் தரப்பணியே. 4

முல்லை முறுவல்உமை ஒரு பங்குடை முக்கணனே
பல்லயர் வெண்டலையிற் பலி கொண்டுழல் பாசுபதா
கொல்லை வளம்புறவில் திருக் கோளிலி எம்பெருமான்
அல்லல் களைந்தடியேற் கவை|| அட்டித் தரப்பணியே. 5

குரவம ருங்குழலாள் உமை நங்கைஓர் பங்குடையாய்
பரவை பசிவருத்தம் அது நீயும் அறிதியன்றே
குரவம ரும்பொழில்சூழ் குண்டை யூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
அரவம் அசைத்தவனே அவை அட்டித் தரப்பணியே. 6

எம்பெரு மானுனையே நினைந் தேத்துவன் எப்பொழுதும்
வம்பம ருங்குழலாள் ஒரு பாகம் அமர்ந்தவனே
செம்பொனின் மாளிகைசூழ் திருக் கோளிலி எம்பெருமான்
அன்பது வாயடியேற் கவை அட்டித் தரப்பணியே. 7

---

3. § 'நல்லாள்' என்றும் பாடம்.
5. || 'அல்லல் களைந்தடியேன் அவை' என்றும் பாடம்.
6. குரவு – ஒரு மலர், வாசனை. 7. வம்பு – நறுமணம்.

அரக்கன் முடிகரங்கள் அடர்த் திட்டஎம் ஆதிப்பிரான்
பரக்கும் அரவல்குலாள் பர வையவள் வாடுகின்றாள்
குரக்கினங்கள் குதிகொள் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
இரக்கம தாயடியேற் கவை அட்டித் தரப்பணியே. 8

பண்டைய மால்பிரமன் பறந் தும்மிடந் தும்மயர்ந்தும்
கண்டில ராயவர்கள் கழல் காண்பரி தாயபிரான்
தெண்திரை நீர்வயல்சூழ் திருக் கோளிலி எம்பெருமான்
அண்டம தாயவனே‡ அவை அட்டித் தரப்பணியே. 9

கொல்லை வளம்புறவில் திருக் கோளிலி மேயவனை
நல்லவர் தாம்பரவுந் திரு நாவல வூரனவன்
நெல்லிட ஆட்கள்வேண்டி நினைந் தேத்திய பத்தும்வல்லார்
அல்லல் களைந்துலகின் அண்டர்* வானுல காள்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: கோளிலிநாதர்

அம்பிகை: வண்டமர்பூங்குழலி

**வரலாறு:** குண்டையூரிலிருந்த வேளாண் செல்வராகிய குண்டையூர் கிழார் ஆளுடைய நம்பியாரிடம் அளவற்ற அன்புடையாராய் அவருக்கு வேண்டிய செந்நெல் பருப்பு முதலியவற்றை அனுப்பி வந்தார். மழையின்றி வளம் பொய்த்துப் பஞ்சம் வரவே, அவ்வாறு செய்ய முடியாமல் அவர் வருந்தச் சிவபெருமான் குவியல் குவியலாக அவர்பால் நெல் நிரம்பும்படி அருள் செய்தார். குண்டையூர் கிழார், பெருமானது திருவருளை வியந்து தொழுது சுந்தரருக்குச் செய்தியைக் கூறி, அந்நெல்லை எடுத்துச் செல்லப் பலபல ஆட்கள் வேண்டுமே என்றார்.

---

9. மால் இடந்தும் பிரமன் பறந்தும் என எதிர்நிரல் நிறையாகக் கூட்டுக. ‡ 'தாய பிரான்' என்றும் பாடம்.

10. கொல்லை வளம்புறவில் – முல்லை நிலமாகிய வளப்பமுடைய காட்டையுடைய. * 'அண்ட' என்றும் பாடம்.

உடனே நம்பியாரூரர் திருக்கோளிலிக்கு வந்து இத்திருப்பதிகத்தைப் பாடவே, சிவபெருமான் ஓர் இரவில் தம் பூத கணங்களைக் கொண்டு அத்தனை நெல்லையும் பரவையார் திருமாளிகையில் சேர்க்கச் செய்தருளினார். [பெரியபுராணம், ஏயர்கோன், 10-22]

---

## 25. திருமறைக்காடு — பண்: காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

யாழைப்பழித் தன்னமொழி மங்கைஒரு பங்கன்
பேழைச்சடை முடிமேற்பிறை வைத்தான்இடம் பேணில்
தாழைப்பொழி லூடேசென்று பூழைத்தலை நுழைந்து
வாழைக்கனி கூழைக்குரங் குண்ணும்மறைக் காடே. 1

சிகரத்திடை இளவெண்பிறை வைத்தான்இடம் தெரியில்
முகரத்திடை முத்தின்னொளி பவளத்திரள் ஓதத்
தகரத்திடை தாழைத்திரள் ஞாழற்றிரள் நீழல்
மகரத்தொடு சுறவங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. 2

அங்கங்களும் மறைநான்குடன் விரித்தானிடம் அறிந்தோம்
தெங்கங்களும்நெடும்பெண்ணையும்பழம்வீழ்மணற்படப்பைச்
சங்கங்களும் இலங்கிப்பியும் வலம்புரிகளும் இடறி
வங்கங்களும் உயர்கூம்பொடு வணங்கும்மறைக் காடே. 3

நரைவிரவிய மயிர்தன்னொடு பஞ்சவ்வடி மார்பன்
உரைவிரவிய உத்தமனிடம் உணரல்லுறு மனமே

---

1. பேழை-பல பொருளை வைத்திருத்தலால் பெட்டியைப் போன்ற. பூழைத்தலை - இடைவெளி யிடையே.

2. சிகரம்-தலை. முகரம்-சங்கு. தகரம்-ஒருவகைவாசனை மரம். ஞாழல்-புலிநகக் கொன்றை.

3 தெங்கங்கள் - தென்னை மரங்கள். பெண்ணை - பனை. படப்பை-தோட்டம். இப்பி - சிப்பி. வங்கங்கள் - கப்பல்கள்.

குரைவிரவிய குலை§சேகரக் கொண்டற்றலை விண்ட
வரைபுரைவன திரைபொருதிழிந் தெற்றும்மறைக் காடே. 4

சங்கைப்பட நினையாதெழு நெஞ்சேதொழு தேத்தக்
கங்கைச்சடை முடிஉடையவர்க் கிடமாவது பரவை
அங்கைக்‡கடல் அருமாமணி உந்திக்கரைக் கேற்ற
வங்கத்தொடு சுறவங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. 5

அடல்விடையினன் மழுவாளின னலராலணி¶ கொன்றைப்
படருஞ்சடை முடியுடையவர்க் கிடமாவது பரவைக்
கடலிடையிடை கழியருகினிற் கடிநாறுதண் கைதை
மடலிடையிடை வெண்குருகெழு மணிநீர்மறைக் காடே. 6

முளைவளரிள மதிஉடையவன் முன்செய்தவல் வினைகள்
களைகளைந்தெனை ஆளல்லுறு கண்டன்னிடஞ் செந்நெல்
வளைவிளைவயற் கயல்பாய்தரு குணவார்மணற் கடல்வாய்
வளைவளையொடு சலஞ்சலங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. 7

நலம்பெரியன சுரும்பார்ந்தன நங்கோன்இடம் அறிந்தோம்
கலம்பெரியன சாருங்கடற் கரைபொருதிழி கங்கைச்
சலம்புரிசடை முடிஉடையவர்க் கிடமாவது பரவை
வலம்புரியொடு சலஞ்சலங்கொணர்ந் தெற்றும்மறைக் காடே. 8

---

4. குரை–ஒலி. குலை–கரை. § 'குல' என்றும் பாடம்.

5. சங்கை–சந்தேகம். ‡ 'அங்கக்' என்றும் பாடம்.

6. வாள்–ஆயுதம், கைதை–தாழை. ¶ 'னல்லாரணி' என்றும் பாடம்.

7. எனை ஆளும் அல்உறு கண்டன்; அல் – கருமை. குண வார்மணற் கடல்வாய்–வார்ந்த மணலையுடையகுண கடலிடத்தே குணகடல்–கீழ்கடல், வளை வளை–வளைந்த சங்கு. சலஞ்சலம்–ஒருவகைச் சங்கு.

8. கலம்-கப்பல். சலம்–கங்கை நீர்.

குண்டாடியுஞ் சமணாடியுங் குற்றுடுக்கையர் தாமும்
கண்டார்கண்ட காரணம்மவை கருதாதுகை தொழுமின்
எண்டோளினன் முக்கண்ணினன் ஏழிசையினன் அறுகால்
வண்டாடுதண் பொழில்சூழ்ந்தெழு மணிநீர்மறைக் காடே. 9

பாரூர்பல புடைசூழ்வள|| வயல்நாவலர் வேந்தன்
வாரூர்வன முலையாள்உமை பங்கன்மறைக் காட்டை
ஆரூரன தமிழ்மாலைகள் பாடும்மடித் தொண்டர்
நீரூர்தரு நிலனோடுயர் புகழாகுவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மறைக்காட்டீசுவரர்

அம்பிகை: யாழைப் பழித்த நாயகி

---

## 26. திருக்கோடிக்குழகர் — பண்: கொல்லி

திருச்சிற்றம்பலம்

கடிதாய்க் கடற்காற்று வந்தெற்றக் கரைமேல்
குடிதான் அயலே இருந்தாற் குற்றமாமோ
கொடியேன் கண்கள்கண் டனகோடிக் குழகீர்
அடிகேள் உமக்கார் துணையாக இருந்தீரே. 1

முன்றான் கடற்நஞ்சம் உண்ட அதனாலோ
பின்றான் பரவைக் குபகாரம் செய்தாயோ
குன்றாப் பொழில்சூழ் தருகோடிக் குழகா
என்றான் தனியே இருந்தாய் எம்பிரானே. 2

---

9. குண்டு ஆடியும்—கீழ்மையான வார்த்தைகளைப் பேசியும்.
10. || 'சூழ்வன' என்றும் பாடம்.
1. கடிதாய் – வேகமாக. கோடி – கோடிக்கரை.

மத்தம் மலிசூழ் மறைக்கா டதன்தென்பால்
பத்தர் பலர்பாட இருந்த பரமா
கொத்தார் பொழில்சூழ் தருகோடிக் குழகா
எத்தால் தனியே இருந்தாய் எம்பிரானே. 3

காடேல் மிகவா லிதுகா ரிகைஅஞ்சக்
கூடிப் பொந்தில் *ஆந்தைகள் கூகைகுழற
வேடித்தொண்டர் சாலவுந் தீயர் சழக்கர்
கோடிக் குழகா இடங்கோயில் கொண்டாயே. 4

மையார் தடங்கண்ணி பங்கா கங்கையாளும்
மெய்யாகத் திருந்தனள் வேறிடம் இல்லை
கையார் வளைக்காடு காளோடும் உடனாய்க்
கொய்யார் பொழிற்கோடி யேகோயில் கொண்டாயே. 5

அரவேர் அல்குலாளை ஓர்பாகம் அமர்ந்து
மரவங் கமழ்மா மறைக்கா டதன்தென்பால்
குரவப் பொழில்†சூழ் தருகோடிக் குழகா
இரவே துணையாய் இருந்தாய் எம்பிரானே. 6

பறையுங் குழலும் மொலிபாடல் இயம்ப
அறையுங் கழலார்க்க நின்றாடும் அமுதே
குறையாப் பொழில்சூழ் தருகோடிக் குழகா
இறைவா தனியே இருந்தாய் எம்பிரானே. 7

ஒற்றியூ ரென்றஊ னத்தினா லதுதானோ
அற்றப் படஆ ரூரதென் றகன்றாயோ

---

4. காடேல் மிக வாலிது – நீ உறையும் மயானம் இதை விடச் சிறந்தது. * 'பொத்தில்' என்றும் பாடம். கூகை – கோட்டான். 6. † 'குரவம் பொழில்' என்றும் பாடம்.

8. அற்றப்பட – ஐயம் உண்டாக.

முற்று மதிசூடிய கோடிக் குழகா
எற்றால் தனியே இருந்தாய் எம்பிரானே. 8

நெடியானொடு நான்முக னும்மறி வொண்ணாப்
படியான்பலி கொள்ளும் இடங்குடி இல்லை
கொடியார்பலர் வேடர்கள் வாழுங் கரைமேல்
அடிகேள் அன்ப§தா யிடங்கோயில் கொண்டாயே. 9

பாரூர்மலி சூழ்மறைக் காடதன் தென்பால்
ஏரார் பொழில் சூழ்தரு கோடிக் குழகை
ஆரூரன் உரைத்தன பத்திவை வல்லார்
சீரூர்சிவ லோகத் திருப்பவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அமுதகடநாதர்

அம்பிகை: மையார்தடங்கண்ணி

**வரலாறு:** சேரமான் பெருமாள் நாயனாரோடு பல தலங்களைத் தரிசனம்செய்துகொண்டு வந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் மறைக்காட்டுக்குச் சென்று சிலநாள் தங்கி,அப்பால் அகத்தியான் பள்ளியைத் தரிசித்துப் பிறகு கோடிக்குழகர் என்னும் கோடிக் கரைக்கு வந்தார். அங்கே கோயிலுக்கு அயலில் யாரும் குடியிராமையைக் கண்டு உள்ளம் வாடி, இறைவரைத் தரிசித்து இப்பதிகத்தைப் பாடியருளினார். [பெரியபுராணம், சேரமான் பெருமாள், 88-89]

---

9. § 'இன்ப' என்றும் பாடம்.

## (3) ஈழ நாட்டிலுள்ள தலம்

## 1. திருக்கேதீச்சரம் — பண்: நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

*நத்தார்புடை* ஞானன்பசு ஏறிந்நனை கவிழ்வாய்*
*மத்தம்மத யானைஉரி போர்த்த மழு †வாளன்*
*பத்தாகிய தொண்டர்தொழு பாலாவியின் கரைமேல்*
*செத்தார்எலும் பணிவான்திருக் கேதீச்சரத் தானே.* 1

*சுடுவார்பொடி நீறுந்நல‡ துண்டப்பிறைக் கீளும்*
*கடமார்களி யானைஉரி அணிந்தகறைக் கண்டன்*
*படவேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்*
*திடமாஉறை கின்றான்திருக் கேதீச்சரத் தானே.* 2

*அங்கம்மொழி அன்னாரவர் அமரர்தொழு தேத்த*
*வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்*
*பங்கஞ்செய்த பிறைசூடினன் பாலாவியின் கரைமேல்*
*செங்கண்ணரவ§ வசைத்தான்திருக் கேதீச்சரத் தானே.* 3

---

1. நத்து ஆர் புடை – சங்குகள் முழங்கும் பக்கத்தை உடைய. *'படை'; † 'மண' என்றும் பாடம். நனை கவிழ்வாய்– நனைந்த கவிழ்ந்த வாயையுடைய. பத்து–பக்தி. பாலாவி ஓர் ஆறு.

2. ‡ 'நீறுநல்ல' என்றும் பாடம். பட ஏரிடை –துகிலை அணிந்த அழகிய இடை; படம் – ஆடை; படம் என்பதை நாகத்துக்கு ஆகுபெயராக்கிப் பாம்பு போன்ற இடை எனலும் ஆம்.

3. அங்கம் மொழி அன்னாரவர் – சாத்திரங்களை விரித்துரைக்கும் அத்தன்மையை யுடையோர். வங்கம் - கப்பல். மாதோட்டம் என்பது ஊர்ப்பெயர்; கேதீச்சரம் என்பது திருக்கோயிலின் பெயர், § 'திங்கண்ணர' என்றும் பாடம்; "திங்கு அண் அர எனப்பிரிக்க; திங்கு, திங்கு எனக் குறுக்கல்."

கரியகறைக் கண்டனல்ல|| கண்மேல்ஒரு கண்ணன்
வரியசிறை வண்டியாழ்செயும் மாதோட்டநன் னகருள்
பரியதிரை எறியாவரு பாலாவியின் கரைமேல்
தெரியும்மறை வல்லான்¶திருக் கேதீச்சரத் தானே. 4

அங்கத்துறு நோய்கள்ளடி யார்மேல்ஒழித் தருளி
வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்
தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே. 5

வெய்யவினை யாயஅடி* யார்மேல்ஒழித் தருளி
வையம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்
பையேர்இடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
செய்யசடை முடியான்திருக் கேதீச்சரத் தானே. 6

ஊனத்துறு நோய்கள்ளடி யார்மேல்ஒழித் தருளி
வானத்துறு மலியுங்கடல் மாதோட்டநன் னகரில்
பானத்துறும் மொழியாளொடு பாலாவியின் கரைமேல்
ஏனத்தெயி றணிந்தான்திருக் கேதீச்சரத் தானே. 7

அட்டன்னழ காகவ்வரை தன்மேல்அர வார்த்து
மட்டுண்டுவண் டாலும்பொழில் மாதோட்டநன் னகரில்

---

4. பரிய – பருத்த. || 'கண்டன்னல'; ¶ 'வல்லார்' என்றும் பாடம்.

5. அங்கம்–உடல். பங்கம் செய்த மடவாள் – தம்முடைய திருமேனியில் ஒருபாகத்தைப் பகுத்துக்கொண்ட உமாதேவியார்.

6. * 'யாயவ்வடி' என்றும் பாடம்.

7. ஊனம் – உடல்; ஊன் என்பது அம்முச்சாரியை பெற்றது. வால் நத்து உறு – வெள்ளிய சங்குகள் இருக்கும். பால் நத்துறு மொழியாள் – இனிமையின் பொருட்டுப் பாலும் விரும்பும் மொழியையுடைய அம்பிகை.

பட்டவ்வரி நுதலாளொடு பாலாவியின் கரைமேல்
சிட்டன்நமை ஆள்வான்திருக் கேதீச்சரத் தானே. 8

மூவரென இருவரென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழில் மாதோட்டநன் னகரில்
பாவம்வினை அறுப்பார்பயில் பாலாவியின் கரைமேல்
தேவன்னெனை ஆள்வான்திருக் கேதீச்சரத் தானே. 9

கறையார்கடல் சூழ்ந்தகழி மாதோட்டநன் னகருள்
சிறையார்பொழில் வண்டியாழ்செயுங் கேதீச்சரத் தானை
மறையார்புகழ் ஊரன்னடித் தொண்டன்னுரை செய்த
குறையாத்தமிழ் பத்துஞ்சொலக் கூடாகொடு வினையே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: கேதீசுவரர்
அம்பிகை: கௌரியம்மை

**வரலாறு:** சுந்தரமூர்த்தி சுவாமிகள் இராமேச்வரத்துக்குச் சென்று தரிசித்தபின், அங்கிருந்தபடியே ஈழநாட்டிலுள்ள தலமாகிய திருக்கேதீச்சரத்தைப் பாடியருளினார். [**பெரிய புராணம்**, சேரமான்பெருமாள், 109]

---

8. அட்டன் – அட்டமூர்த்தி. அட்டன் அழகாக அரை. மட்டு – தேன். பட்டத்தையும் வரியையும் உடைய நுதலாள்.

10. கறை – நீலநிறம்.

## (4) பாண்டி நாட்டிலுள்ள தலங்கள்

## 1. திருப்பரங்குன்றம் — பண்: இந்தளம்

### (திருக்கோத்திட்டையும் திருக்கோவலூரும்)

திருச்சிற்றம்பலம்

கோத்திட்டையுங் கோவலுங் கோயில்கொண் டீர்உமைக்
கொண்டுழல் கின்றதோர் கொல்லைச் சில்லைச்
சேத்திட்டுக் குத்தித் தெருவே திரியும்
சில்பூத மும்நீ ரும்திசை திசையன
சோத்திட்டு விண்ணோர் பலருந் தொழநும்
அரைக்கோ வணத்தோ டொருதோல் புடைசூழ்ந்
தார்த்திட் டதும்பாம்பு கைக்கொண்ட தும்பாம்
படிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே. 1

முண்டம் தரித்தீர் முதுகா டுறைவீர்
முழுநீ றுமெய்பூசு திர்மூக்கப் பாம்பைக்
கண்டத்தி லும்தோளி லும்கட்டி வைத்தீர்
கடலைக் கடைந்திட்ட தோர்நஞ்சை உண்டீர்
பிண்டஞ் சுமந்தும் மொடுங்கூட மாட்டோம்
பெரியா ரொடுநட் பினிதென் றிருந்தும்*
அண்டங் கடந்தப் புறத்தும் இருந்தீர்
அடிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே. 2

1. கோவல் – திருக்கோவலூர். கொல்லை – முல்லைநிலம். சில் ஐ சே-சிறிய அழகிய இடபமானது. திட்டுக்குத்தி – மண் மேட்டைக் குத்தி; இது இடபத்துக்கு இயல்பு. சோத்து – தோத்திரம். ஆர்த்திட்டதும் பாம்பு, கைக்கொண்டதும் பாம்பு என்க. அடிகேள்–சுவாமி; விளி.

2. முண்டம் – திரிபுண்டரம். மூக்கம்-மூர்க்கம். * 'றிருத் தும்' என்றும் பாடம்.

மூடாய முயலகன் மூக்கப் பாம்பு
முடைநா றியவெண் டலைமொய்த்த பல்பேய்
பாடா வருபூதங் கள்பாய் புலித்தோல்
பரிசொன் றறியா தனபா ரிடங்கள்
தோடார் மலர்க்கொன் றையுந்துன் னெருக்கும்
துணைமா மணிநா கம்அரைக் கசைத்தொன்
றூடா தன† வேசெய் தீர்எம் பெருமான்
அடிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே. 3

மஞ்சுண்ட மாலை மதிசூடு சென்னி
மலையான் மடந்தை மணவாள நம்பி
பஞ்சுண்ட அல்குற் பணைமென் முலையா
ளொடுநீரும் ஒன்றாய் இருத்தல் ஒழியீர்
நஞ்சுண்டு தேவர்க் கமுதம் கொடுத்த
நலம்ஒன் றறியோம் உங்கைநா கமதற்
கஞ்சுண் டுபடம் அதுபோ கவிடீர்
அடிகேள்¶ உமக்காட் செயஅஞ் சுதுமே. 4

பொல்லாப் புறங்காட் டகத்தாட் டொழியீர்
புலால்வா யனபே யொடுபூச் சொழியீர்
எல்லாம் அறிவீர் இதுவே அறியீர்
என்றிரங் குவேன்எல் லியும்நண் பகலும்§
கல்லால் நிழற்கீழ் ஒருநாட் கண்டதும்
கடம்பூர்க் கரக்கோ யிலின்முன் கண்டதும்
அல்லால் விரகொன் றிலம்எம் பெருமான்
அடிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே. 5

---

3. மூடு-மூடன். முடை - புலால் நாற்றம். பாரிடம் - பூதம். அசைத்து - கட்டி. † 'றூடாதென' என்றும் பாடம்.

4. படம் அஞ்சு உண்டு. ¶ 'அடியோம்' என்றும் பாடம்.

5. புறங்காடு-மயானம். எல்லி-இரவு. விரகு-தந்திரம், § 'என்றிரங் குவனெல் லியுநன் பகலும்' என்றும் பாடம்.

தென்னத் தெனத்தெத் தெனாஎன்று பாடிச்
சில்பூ தழும்நீ ரும்இசை இசையன
பன்னன் மறைபா டுதிர்பா சூர்உளீர்
படம்பக் கம்கொட்டுந் திருவொற்றி யூரீர்
பண்ணார் மொழியா ளையொர்பங் குடையீர்
படுகாட் டகத்தென் றுமோர்பற் றொழியீர்
அண்ணா மலையேன் என்றீர்ஆ ரூருளீர்
அடிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே. 6

சிங்கத் துரிமூ டுதிர்தே வர்கணம்
தொழுநிற் றீர்பெற்றம் உகந்தே றிடுதிர்
பங்கம் பலபே சிடப்பா டும்தொண்டர்
தமைப்பற்றிக் கொண்டாண்டு விடவுங் கில்லீர்
கங்கைச் சடையீர் உம்கருத் தறியோம்
கண்ணுமூன் றுடையீர் கண்ணேயாய்* இருந்தால்
அங்கத் துறுநோய் களைந்தா ளகில்லீர்
அடிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே. 7

பிணிவண் ணத்தவல் வினைதீர்த் தருளீர்
பெருங்காட் டகத்திற் பெரும்பே யும்நீரும்
துணிவண் ணத்தின்மே லுமொர்† தோல் உடுத்துச்
சுற்றும்நா கத்தராய்ச் சுண்ணநீ றுபூசி
மணிவண் ணத்தின்மே லுமொர்வண் ணத்தராய்
மற்றுமற் றும்பல் பலவண் ணத்தராய்
அணிவண் ணத்தராய் நிற்றீர்எம் பெருமான்
அடிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே. 8

---

6. படம்பக்கம்-ஒரு வகைப் பறை.

7. பெற்றம்-இடபம். * 'கருத்தாய்' என்றும் பாடம். இல்லீர்-மாட்டீர்.

8. † 'துணிவண் ணத்துநீ ருமொர்' என்றும் பாடம்.

கோளா ளியகுஞ் சரங்கோள் இழைத்தீர்
மலையின் றலைஅல் லதுகோ யில்கொள்ளீர்
வேளா ளியகாமனைவெந் தழிய
விழித்தீர் அதுவன் றியும்வேய் புரையும்
தோளாள் உமைநங் கையொர்பங் குடையீர்
உடுகூ றையும்சோ றும்தந்தா ளகில்லீர்
ஆளா ளியவே கிற்றீர்§எம் பெருமான்
அடிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே. 9

பாரோ டுவிண்ணும் பகலும் ஆகிப்
பனிமால் வரைஆ கிப்பரவை ஆகி
நீரோ டுதீயும் நெடுங்காற் றும்ஆகி
நெடுவெள் ளிடையாகி நிலனு மாகித்¶
தேர்ஓ டவரை எடுத்த அரக்கன்
சிரம்பத் திறுத்தீர் உமசெய் கைஎல்லாம்
ஆரோ டுங்கூடா அடிகேள் இதுவென்
அடியோம்* உமக்காட் செயஅஞ் சுதுமே. 10

அடிகேள் உமக்காட் செயஅஞ் சுதும்என்
றமரர் பெருமானை ஆரூரன் அஞ்சி
முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே
மொழிந்தா றுமோர்நான்கு மோரொன் றினையும்

---

9. கோள்–கொலை. வேய்–மூங்கில். கூறை–ஆடை. ஆள் ஆளியவே கிற்றீர்–ஆளாக ஆளுவதே வல்லீர். § 'கற்றீர்' என்றும் பாடம்.

10. வெள்ளிடை – பரந்த வெளி; ஆகாசம். ¶ 'நெடுவெள் ளடையாகி நிழலு மாகித்'; * 'அடிகேள்' என்றும் பாடம்.

11. மூவேந்தர்–சேர சோழ பாண்டியர். ஆறும் ஓர்நான்கும் ஓர் ஒன் றினையும்–பதினொரு பாடல்களையும்.

படியா இவைகற்று வல்ல அடியார்
பரங்குன்றம் மேய பரமன் அடிக்கே
குடியாகி வானோர்க்கும் ஓர்கோவும் ஆகிக்
குலவேந்த ராய்விண் முழுதாள் பவரே.

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பரங்கிரிநாதர்; அம்பிகை: ஆவுடைநாயகி.

**வரலாறு:** சுந்தரமூர்த்தி நாயனார் சேரமான் பெருமாளோடும் பாண்டிய சோழ மன்னர்களோடும் திருப்பரங்குன்றம் சென்று தரிசித்துப் பாடிய பதிகம் இது. [பெரிய புராணம், சேரமான் பெருமாள். 102–105.]

---

## 2. திருப்புனவாயில் — பண்: பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

சித்தம் நீநினை என்னொடு சூளறும் வைகலும்
மத்த யானையின் ஈருரி போர்த்த மணாளனூர்
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தில் ஆந்தைகள் பாட்ட றாப்புன வாயிலே. 1

கருது* நீமனம் என்னொடு சூளறும் வைகலும்
எருது மேற்கொளும் எம்பெரு மாற்கிடம் ஆவது
மருத வானவர் வைகும் இடம்மற வேடுவர்
பொருது சாத்தொடு|| பூசல் அறாப்புன வாயிலே. 2

---

1. சித்தம்: விளி. என்னொடு நீ நினை. சூள் அறும்-பொய்யாக மேற்கண்ட உறுதிமொழிகள் எல்லாம் அற்றுவிடும். வைகலும் - நாள்தோறும். பொத்தில் - மரப்பொந்துகளில்,

2. * 'கருதி'; || 'பொரு சரத்தொடு' என்றும் பாடம். மருத வானவர் - மருத நிலத்தில் உள்ள பெருமையுடையோர். சாத்தொடு - வியாபாரிகளின் கூட்டத்தொடு செய்யும். பூசல் - சண்டை.

தொக்காய* மனம் என்னொடு சூளறும் வைகலும்
நக்கான் நமை யாளுடை யான்நவி லும்மிடம்
அக்கோ டரவார்த்த பிரான்அடிக் கன்பராய்ப்
புக்கார் அவர் போற்றொழி யாப்புன வாயிலே. 3

வற்கென் றிருத்திகண் டாய்மனம் என்னொடு சூளறும்வைகலும்
பொற்குன் றஞ்சேர்ந்த தோர்காக்கைபொன் னாமதுவேபுகல்
கற்குன் றுந் தூறுங் கடுவெளி யுங்கடற் கானல்வாய்ப்
புற்கென் று தோன்றிடும் எம்பெரு மான்புன வாயிலே. 4

நில்லாய் மனம் என்னொடு சூளறும் வைகலும்
நல்லான் நமை யாளுடை யான்நவி லும்மிடம்
வில்லாய்க் கணை வேட்டுவர் ஆட்ட வெருண்டுபோய்ப்
புல்வாய்க் கணம் புக்கொளிக் கும்புன வாயிலே. 5

மறவல் நீமனம் என்னொடு சூளறும் வைகலும்
உறவும் ஊழியும் ஆயபெம் மாற்கிடம் ஆவது
பிறவு கள்ளியின் நீள்கவட் டேறித்தன் பேடையைப்
புறவங் கூப்பிடப் பொன்புனஞ் சூழ்புன வாயிலே. 6

ஏசற் று நீநினை என்னொடு சூளறும் வைகலும்
பாசற்றவர்¶ பாடிநின் றாடும் பழம்பதி

---

3. என்னொடு தொக்கு ஆய-என்னோடு சேர்ந்து இறைவன் புகழை ஆராய்ச்சி செய்ய. *'தொக்காய்' என்றும் பாடம். அக்கு-ருத்திராட்சம்; எலும்புமாம்.

4. வற்கென்று – எதற்கும் அஞ்சாமல் தைரியத்தோடு. தூறு – புதர். புற்கென்று – பொலிவழிந்து

5. ஆட்ட – அலைக்க. புல்வாய்க் கணம் – மான் கூட்டம்.

6. பிறவுகள்ளி – அந்த நிலத்தில் முளைக்கும் உரிமையை யுடைய கள்ளி. கவடு – கிளை.

7, ஏசற்று-வருத்தமின்றி. பாசு-பாசம். ¶'பாச மற்றவர்' என்றும் பாடம். பூசல் துடி – ஆரவாரத்தை உடையஉடுக்கை.

தேசத் தடியவர் வந்திரு போதும் வணங்கிடப்
பூசற் றுடி பூசல் அருப்புன வாயிலே. 7

கொள்ளி வாயின கூரெயிற் றேனம் கிழிக்கவே
தெள்ளி மாமணி தீவிழிக் கும்மிடஞ் செந்தறை
கள்ளி வற்றிப்புல் தீந்துவெங் கானங் கழிக்கவே
புள்ளி மானினம் புக்கொளிக் கும்புன வாயிலே. 8

எற்றே நினை என்னொடு சூளறும் வைகலும்
மற்றேதும் வேண்டா வல்வினை ஆயின மாய்ந்தறக்
கற்றாறு கார்க் காட்டிடை மேய்ந்தகார்க் கோழிபோய்ப்
புற்றேறிக் கூகூ எனஅழைக் கும்புன வாயிலே. 9

பொடியாடு மேனியன் பொன்புனஞ் சூழ்புன வாயிலை
அடியார் அடியன் நாவல ஊரன் உரைத்தன
மடியாது கற்றிவை ஏத்தவல் லார்வினை மாய்ந்துபோய்க்
குடியாகப்§பாடிநின் றாடவல் லார்க்கில்லை குற்றமே.10-11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பழம்பதிநாயகர்; அம்பிகை: பரங்கருணைநாயகி.

---

## 3. திருக்காலப்பேர் — பண்: புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

தொண்டர் அடித்தொழலும் சோதி இளம்பிறையும்
சூதன மென்முலையாள் பாகமும் ஆகிவரும்*
புண்ட ரிகப்பரிசாம் மேனியும் வானவர்கள்
பூச லிடக் கடல்நஞ் சுண்ட கருத்தமரும்

---

9. கல்தூறு-கல்லிடையே முளைத்த புதர். கார்க்கோழி – கரிய காட்டுக் கோழி.

11. மடியாது-சோம்பாமல். § 'குடியாகிப்' என்றும் பாடம்.

கோண்டல் எனத்திகழுங் கண்டமும் எண்தோளும்
கோல நறுஞ்சடைமேல் வண்ணமும் கண்குளிரக்
கண்டு தொழப்பெறுவ தென்றுகொ லோஅடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 1

கூதல் இடுஞ்சடையுங் கோளர வும்விரவும்
கொக்கிற குங்குளிர்மா மத்தமும் ஒத்துனதாள்
ஓதல் உணர்ந்தடியார் உன்பெரு மைக்குநினைந்
துள்ளுரு காவிரசும் ஓசையைப் பாடலும்நீ
ஆதல் உணர்ந்தவரோ டன்பு பெருத்தடியேன்
அங்கையின் மாமலர்கொண் டென்கண தல்லல்கெடக்
காத லுறத்தொழுவ தென்றுகொ லோஅடியேன்
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 2

நானுடை மாடெனவே நன்மை தரும்பரனை
நற்பதம் என்றுணர்வார் சொற்பதம் ஆர்சிவனைத்
தேனிடை இன்னமுதை மற்றத னில்தெளியைத்
தேவர்கள் நாயகனைப் பூவுயர் சென்னியனை
வானிடை மாமதியை மாசறு சோதியனை
மாருத மும்மனலும்† மண்டலு மும்மாய
கானிடை மாநடனென் றெய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 3

---

1. சூது-சூதுவிளையாட்டில்வைத்தாடும் காய். * 'ஆகவரும்' என்றும் பாடம். பூசல் இட-ஆரவாரம் செய்ய.

2. கூதல் இடும்-நீர்த்துளி வீசி வாடைக்காலத்தை உண்டாக்கும். விரசும்-கலக்கும்.

3. மாடு-செல்வம். நற்பதம்-நல்லநிலை. சொற்பதம் ஆர் சிவனை - சொல்லின் பக்குவத்திலே அமைந்த சிவபெருமானை. † 'மும் புனலும்' என்றும் பாடம். கானிடை மாநடன்-மயானத்தில் மகா நடனம் செய்தருளுபவன்.

செற்றவர் முப்புரம்அன் றட்ட சிலைத்தொழிலார்
சேவகம் முன்நினைவார் பாவக முங்நெறியும்
குற்றமில் தன்அடியார் கூறும் இசைப்பரிசும்
கோசிக மும்மரையிற் கோவண மும்மதளும்
மற்றிகழ் திண்புயமும் மார்பிடை நீறுதுதை
மாமலை மங்கைஉமை சேர்சுவ டும்புகழக்
கற்றன வும்பரவிக் கைதொழல் என்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேரூறை காளையையே. 4

கொல்லை விடைக்கழகுங் கோல நறுஞ்சடையிற்‡
கொத்தல ரும்மிதழித் தொத்தும் அதனருகே
முல்லை படைத்தநகை மெல்லிய லாள்ஒருபால்
மோகம் மிகுத்திலங்குங் கூறுசெய் எப்பரிசும்
தில்லை நகர்ப் பொதுவுற் றுடிய சீர்நடமும்
திண்மழு வுங்கைமிசைக் கூர்எரி யும்மடியார்
கல்ல வடப்பரிசுங் காணுவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேரூறை காளையையே. 5

பண்ணுத லைப்பயனுர் பாடலும் நீடுதலும்
பங்கய மாதனையார் பத்தியும் முத்திஅளித்
தெண்ணுத லைப்பெருமான் என்றெழு வார்அவர்தம்
ஏசற வும்மிறையாம் எந்தையை யும்விரவி
நண்ணுத லைப்படுமா றெங்ஙனம் என்றயலே
நைகிற என்னைமதித் துய்யும்வ ணம்மருளும்
கண்ணுத லைக்கனியைக் காண்பதும் என்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேரூறை காளையையே. 6

---

4. சேவகம்--வீரம். பாவகம் – குறிப்பு. கோசிகம் – பட்டாடை. அதள்–தோல். சுவடு–அடையாளம்.

5. ‡ 'நறுஞ்சடை மேல்' என்றும் பாடம். தொத்து – பூங்கொத்து முல்லை படைத்த – முல்லையின் உருவைப்படைத்த. பொது–அம்பலம். கல்லவடம்–ஒருவகைப் பறை.

மாவை உரித்ததள்கொண் டங்கம் அணிந்தவனை
　　வஞ்சர் மனத்திறையும் நெஞ்சணு காதவனை
மூவர் உருத்தனதாம் மூல முதற்கருவை
　　மூசிடு மால்விடையின் பாகனை ஆகம்உறப்
பாவகம் இன்றிமெய்யே பற்று மவர்க்கமுதைப்
　　பாலொடு நெய்தயிரைந் தாடு பரம்பரனைக்
காவல் எனக்கிறைஎன் றெய்துவ தென்றுகொலோ
　　கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 7

தொண்டர் தமக்கெளிய சோதியை வேதியனைத்
　　தூய மறைப்பொருளாம் நீதியை வார்கடல்நஞ்
சுண்ட தனுக்கிறவா தென்றும் இருந்தவனை
　　ஊழி படைத்தவனோ டொள்ளரி யும்முணரா
அண்டனை அண்டர்தமக் காகம நூல்மொழியும்
　　ஆதியை மேதகுசீர் ஓதியை வானவர்தம்
கண்டனை அன்பொடுசென் றெய்துவ தென்றுகொலோ
　　கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 8

நாதனை நாதமிகுத் தோசைய தானவனை
　　ஞான விளக்கொளியாம் ஊன்உயி ரைப்பயிரை
மாதனை மேதகுதன் பத்தர் மனத்திறையும்
　　பற்று விடாதவனைக் குற்றமில் கொள்கையனைத்

---

7. மாவை–யானையை. அங்கம்–எலும்பு. இறையும்–சிறிதளவும். திரிமூர்த்திகளும் தன்னுடைய உருவாக அவற்றிற்கு மூலமாக உள்ள ஆதிப்பொருளை. பாவகம் இன்றி – போலியாக வேடங் காட்டலில்லாமல். பால் நெய் தயிர் முதலிய ஆனைந்தின் அபிடேகத்தைக் கொள்ளும்.

8. நஞ்சு உண்டதனுக்கு இறவாது என்றும் இருந்தவனை– நஞ்சை உண்ட செயலுக்குப் பயனாக இறப்பை அடையாமல் என்றும் வாழ்வானை; "வானோர் அமுதுண்டுஞ் சாவ ஒருவரும், உண்ணாத நஞ்சுண்டிருந்தருள் செய்குவாய்" (சிலப்பதிகாரம்)

தூதனை என்றனையாள் தோழனை நாயகனைத்
தாழ்மக ரக்குழையுந் தோடும் அணிந்ததிருக்
காதனை நாயடியேன் எய்துவ தென்றுகொலோ
கார்வயல் சூழ்கானப் பேருறை காளையையே. 9

கன்னலை இன்னமுதைக் கார்வயல் சூழ்கானப்
பேருறை காளையைஒண் சீருறை தண்டமிழால்
உன்னி மனத்தயரா உள்ளுரு கிப்பரவும்
ஒண்பொழில் நாவலர்கோன் ஆகிய ஆரூரன்
பன்னும் இசைக்கிளவி பத்திவை பாடவல்லார்
பத்தர் குணத்தினராய் எத்திசை யும்புகழ
மன்னி இருப்பவர்கள் வானின் இழிந்திடினும்
மண்டல நாயகராய் வாழ்வது நிச்சயமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: காளையப்பர்; அம்பிகை: மகமாயி.

**வரலாறு:** சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான்பெருமாள் நாயனாருடன் சென்று திருச்சுழியலைத் தரிசித்துவிட்டு இரவில் அத்தலத்தில் தங்கினர். அந்த இரவிலே அவர் கனவில் சிவ பெருமான் காளைத் திருவடிவத்தோடு எழுந்தருளி, 'யாம் இருப்பது கானப்பேர்' என்று சொல்லி மறைந்தார். சுவாமிகள் உடனே துயிலுணர்ந்து அதிசயித்து இறைவர் திருவருளை நினைத்துத் திருக்கானப்பேருக்குப் புறப்படுவாராகி, இத்திருப்பதிகத்தைப் பாடியருளினர். [பெரிய புராணம், சேரமான், 112-113.]

---

ஊழிபடைத்தவன் – யுகத்தைப் படைத்த பிரமதேவன். அண்டனை–தேவனை. வானவர்தம் கண் தன்னை.

9. நாதம்–நாததத்துவம்.

10. கன்னலை – கரும்பை. மண்டல நாயகராய் – நாட்டுக்கு அரசராகி.

## 4. திருப்பூவணம் — பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

திருவுடை யார்திரு மால்அய னாலும்
உருவுடை யார்உமை யாளைஓர் பாகம்
பரிவுடை யார்அடை வார்வினை* தீர்க்கும்
புரிவுடை யார்உறை பூவணம் ஈதோ. 1

எண்ணி இருந்து கிடந்து நடந்தும்
அண்ண லெனாநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாடப்
புண்ணிய னார்உறை பூவணம் ஈதோ. 2

தெள்ளிய பேய்பல பூதம வற்றொடு
நள்ளிருள் நட்டம தாடல்ந வின்றோர்
புள்ளுவ ராகும் அவர்க்கவர் தாமும்
புள்ளுவ னார்உறை பூவணம் ஈதோ. 3

நிலனுடை மான்மறி கையது தெய்வக்
கனலுடை மாமழு ஏந்தியோர் கையில்
அனலுடை யார்அழ கார்தரு சென்னிப்
புனலுடை யார்உறை பூவணம் ஈதோ. 4

நடையுடை நல்லெரு தேறுவர் நல்லார்
கடைகடை தோறிடு மின்பலி என்பார்
துடியிடை நன்மட வாளொடு மார்பில்
பொடியணி வார்உறை பூவணம் ஈதோ. 5

மின்னனை யாள்திரு மேனிவி ளங்கவொர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்

---

1. புரிவு – விருப்பம். * 'அடையாவினை' என்றும் பாடம்.
3. புள்ளுவர் – பொய்யர். 5. கடை – வாயில்.
6. மின்னனையாள்; தலத்து அம்பிகை.

முன்நினை யார்‡புரம் மூன்றெரி ஊட்டிய
பொன்னனை யான்உறை பூவணம் ஈதோ. 6

மிக்கிறை யேயவன் துன்மதி யாலிட
நக்கிறை யேவிர லால்இற ஊன்றி
நெக்கிறை யேநினை வார்தனி நெஞ்சம்
புக்குறை வான்உறை பூவணம் ஈதோ. 7-9

சீரின் மிகப்பொலி யுந்திருப் பூவணம்
ஆரவி ருப்பிட மாஉறை வான்றனை
ஊரன் உரைத்தசொல் மாலைகள் பத்திவை
பாரில் உரைப்பவர் பாவம் அறுப்பரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பூவணநாதர்; அம்பிகை: மின்னம்மை.

**வரலாறு:** மதுரையில் சேரமான் பெருமானோடு தங்கியிருந்த சுந்தரர், சேர சோழ பாண்டியரோடு திருப்பூவணத்தைத் தரிசிக்கச் செல்கையில், தொண்டர்கள் அத்தலத்தைச் சுட்டிக்காட்ட, அப்போது பாடியது இப்பதிகம். [பெரியபுராணம், சேரமான் பெருமாள், 98.]

---

## 5. திருச்சுழியல் — பண்: நட்டராகம்*

திருச்சிற்றம்பலம்

ஊனாய்உயிர் புகலாய்அக லிடமாய்முகில் பொழியும்
வானாய்அதன்† மதியாய்விதி வருவான்இடம் பொழிலின்
தேனாதரித் திசைவண்டினம் மிழற்றுந்திருச் சுழியல்
நானாவிதம் நினைவார்தமை நலியார்நமன் தமரே. 1

---

6. ‡ 'முன்னினைவார்' என்றும் பாடம்.

7. மிக்கு – வரம்பு கடந்து. இறை ஏயவன் – அரக்கருக்கு இறைமை பொருந்திய இராவணன். இறையே – சிறிதளவு எனினுமாம். ஊன்றி – ஊன்றினவன்.

* 'நட்டபாடை'; † 'வானாய்வரு' என்றும் பாடம்.

தண்டேர்மழுப் படையான்மழ விடையான்எழு கடல்நஞ்
சுண்டேபுரம் எரியச்சிலை வளைத்தான்இமை யவர்க்காத்
திண்டேர்மிசை நின்றானவன் உறையுந்திருச் சுழியல்
தொண்டேசெய வல்லார்அவர் நல்லார்துயர் இலரே. 2

கவ்வைக்கடல் கதறிக்கொணர் முத்தங்கரைக் கேற்றக்
கொவ்வைத்துவர் வாயார்குடைந் தாடுந்திருச் சுழியல்
தெய்வத்தினை வழிபாடுசெய் தெழுவார்அடி தொழுவார்
அவ்வத்திசைக் கரசாகுவர் அலராள்பிரி யாளே. 3

மலையான்மகள் மடமாதிட மாகத்தவள் மற்றுக்
கொலையானையின் உரிபோர்த்தஎம் பெருமான்திருச் சுழியல்
அலையார்சடை உடையான்அடி தொழுவார்பழு துள்ளம்
நிலையார்திகழ் புகழால்நெடு வானத்துயர் வாரே. 4

உற்றான்நமக் குயரும்மதிச் சடையான்புலன் ஐந்தும்
செற்றார்திரு மேனிப்பெரு மானூர்திருச் சுழியல்
பெற்றான்இனி துறையத்திறம் பாமைத்திரு நாமம்
கற்றாரவர் கதியுட்செல்வர் ஏத்தும்மது கடனே. 5

மலந்தாங்கிய பாசப்பிறப் பறுப்பீர்துறைக் கங்கைச்
சலந்தாங்கிய முடியான்அமர்ந் திடமாந்திருச் சுழியல்

---

2. தேவர்களுக்காகத் திரிபுர சங்காரம் செய்யக் கருதித் தேரில் ஏறி நின்றவன்.

3. கவ்வை – முழக்கத்தை உடைய. கொவ்வைத் துவர் வாயார் – கோவைக் கனியைப் போன்ற சிவந்த வாயையுடைய பெண்கள். அலராள் – திருமகள்.

4. பழுது உள்ளம் நிலையார் – குற்றத்தையுடைய உள்ளத்தில் உள்ள குற்றம் நீங்கப் பெறுவர் என்றபடி.

5. திருமேனிப் பெருமான்; தலத்துமூர்த்தி. உற்றான்–இடையூறு வருங்கால் துணையாக வருபவன். திறம்பாமை – மாறாமல்.

நிலந்தாங்கிய மலராற்கொழும் புகையால்வினைந் தேத்தும்
தலந்தாங்கிய புகழாம்மிகு* தவமாஞ்சது ராமே. 6

சைவத்தசெவ் வுருவன்திரு நீற்றன்னுரு மேற்றன்
கைவைத்தொரு சிலையால்அரண் மூன்றும்மெரி செய்தான்
தெய்வத்தவர் தொழுதேத்திய குழகன்திருச் சுழியல்
மெய்வைத்தடி நினைவார்வினை தீர்தல்லெளி தன்றே. 7

பூவேந்திய பீடத்தவன் றானும்மடல் அரியும்
கோவேந்திய வினயத்தொடு குறுகப்புகல் அறியார்
சேவேந்திய கொடியானவன் உறையுந்திருச் சுழியல்
மாவேந்திய கரத்தான்எம சிரத்தான்றன தடியே. 8

கொண்டாடுதல் புரியாவரு தக்கன்பெரு வேள்வி
செண்டாடுதல் புரிந்தான்திருச் சுழியற்பெரு மானைக்
குண்டாடிய சமண்ஆதர்கள் குடைச்சாக்கியர் அறியா
மிண்டாடிய அதுசெய்தது வானல்வரு விதியே. 9

நீரூர்தரு நிமலன்திரு மலையார்க்கயல் அருகே
தேரூர்தரும் அரக்கன்சிரம் நெரித்தான்திருச் சுழியல்
பேரூரென உறைவான்அடி பெயர்நாவலர் கோமான்
ஆரூரன தமிழ்மாலைபத் தறிவார்துயர் இலரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: திருமேனிநாதர்; அம்பிகை: துணைமாலைநாயகி.

---

6. சதுர்–அறிவுத்திறம். * 'புகழான்மிகு' என்னும் பாடம்.

7. உரும் ஏற்றன் – இடியைப்போல முழங்கும் இடபவாகனத்தை உடையவன். தெய்வத்தவர் – தேவர். மெய்வைத்து – உண்மையை மேற்கொண்டு; அடியிலே உடம்பை வைத்து வணங்கி யெனலும் ஆம்.

8. பூவைத் தன்னை ஏந்திய பீடமாகக்கொண்ட பிரமதேவன். கோ ஏந்திய – தலைமை பெற்ற. வினயம் – பணிவு. சே – இடபம். மா – மான். அடி குறுகப்புகுதலை அறியார்.

9. செண்டாடுதல்–பந்துபோல் தூக்கி எறிந்துவிளையாடுதல். ஆதர்கள் – கைப்புக்கு இடமானவர்கள். சாக்கியர் – பௌத்தர்.

10. திருமலையார்க்கு – கைலாயமலையில் உள்ளாருக்கு.

## (5) மலைநாட்டிலுள்ள தலம்

## திருஅஞ்சைக்களம் — பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

தலைக்குத் தலைமாலை அணிந்த தென்னே
சடைமேற் கங்கைவெள்ளம் தரித்த தென்னே
அலைக்கும் புலித்தோல்கொண் டசைத்த தென்னே
அதன்மேற் கதநாகக்கச் சார்த்த தென்னே
மலைக்கு நிகரொப் பனவன் றிரைகள்
வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டலைக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனே. 1

பிடித்தாட்டி ஓர்நாகத் தைப்பூண்ட தென்னே
பிறங்குஞ் சடைமேற் பிறைசூடிற் றென்னே
பொடித்தான் கொண்டுமெய்ம் முற்றும்பூசிற்றென்னே
புகரே றுகந்தேறல் புரிந்த தென்னே
மடித்தோட் டந்துவன் றிரைஎற் றியிட
வளர்சங் கம்அங்காந்து முத்தஞ் சொரிய
அடித்தார் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனே. 2

சிந்தித் தெழுவார்க்கு நெல்லிக் கனியே
சிறியார் பெரியார் மனத்தேறல் உற்றால்
முந்தித் தொழுவார் இறவார் பிறவார்
முனிகள் முனியே அமரர்க் கமரா

---

1. மகோதை—கொடுங்கோளூர். அஞ்சைக் களம்—மகோதையிலுள்ள திருக்கோயில்.

2. பொடி – திருநீறு. மடித்து ஓட்டந்து – திரும்பிஓடி. எற்றியிட—மோத. அடித்து ஆர்—மோதி ஒலிக்கின்ற.

3. மனத்தேறல் உற்றால் சிறியார் பெரியார்—உன்னைத் தம் மனத்தின் கண்ணே தெளிவடைதலைப் பெற்றால் சிறியவர்

சந்தித் தடமால் வரைபோல் திரைகள்
தணியா திடறுங் கடலங் கரைமேல்
அந்தித் தலைச்செக்கர் வானே ஒத்தியால்
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனே. 3

இழைக்கு மெழுத்துக் குயிரேஒத் தியால்
இலையே ஒத்தியால் உளையே ஒத்தியால்
குழைக்கும் பயிர்க்கோர் புயலே ஒத்தியால்
அடியார் தமக்கோர் குடியே ஒத்தியால்
மழைக்குந் நிகர்ஒப் பனவன் திரைகள்
வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டழைக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனே. 4

வீடின் பயனென் பிறப்பின் பயனென்
விடையே றுவதென் மதயா னைநிற்கக்
கூடும் மலைமங் கைஒருத் தியுடன்
சடைமேற் கங்கையாளை நீசூடிற் றென்னே
பாடும் புலவர்க் கருளும் பொருளென்
நிதியம் பலசெய் தகலச் செலவில்
ஆடுங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனே. 5

---

பெரியவராவர். முக்தி—முற்பட்டு, தொழுபவர்கள் இறப்பையும் பிறப்பையும் கடந்து முத்தியடைவர்.

4. இழைக்கும்—எழுதும். எழுத்துக்கு—மெய்யெழுத்துக்கு. உயிரே — அதனை இயக்கும் உயிர்எழுத்தை. இலை — இல்லை — வீட்டை. குழைக்கும்—தழைக்கும். வலித்து — பலம் பெற்று. அழைக்கும்—முழங்கும்.

5. யானை நிற்க விடை ஏறுவது என்? நிதியம் பல செய்த கலச் செலவில் ஆடும்—பலவிதப் பொருள்களை ஈட்டித் தொகுத்து வரும் கப்பல்களின் போக்குவரவினால் அசையும்.

6. உரவம்—வலிமை,

இரவத் திடுகாட் டெரியாடிற் றென்னே
இறந்தார் தலையிற் பலிகோடல் என்னே
பரவித் தொழுவார் பெறுபண்டம் என்னே
பரமா பரமேட் டிபணித் தருளாய்
உரவத் தொடுசங்க மொடிப்பி முத்தம்
கொணர்ந்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டரவக் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனே. 6

ஆக்கும் மழிவும் ஐய*நீ என்பன்நான்
சொல்லுவார் சொற்பொரு ளவைநீ என்பன்நான்
நாக்கும் செவியுங் கண்ணும்நீ என்பன்நான்
நலனே இனிநான் உனைநன் குணர்ந்தேன்
நோக்குந் நிதியம் பலஎத் தனையும்
கலத்திற் புகப்பெய்து கொண்டேற நுந்தி
ஆர்க்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனே. 7

வெறுத்தேன் மனைவாழ்க் கையைவிட் டொழிந்தேன்
விளங்குங் குழைக்கா துடைவே தியனே
இறுத்தாய் இலங்கைக் கிறையா யவனைத்
தலைபத் தொடுதோள் பலஇற் றுவிழக்
கறுத்தாய் கடல்நஞ் சமுதுண் டுகண்டம்
கடுகப் பிரமன் தலையைந் திலும்ஒன்
றறுத்தாய் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனே. 8

---

7. ஆக்கும் - ஆக்குதலும். * 'அமைவு' என்றும் பாடம். சொல்லும் பொருளும் ஆகிய அவை. கலம் - கப்பல். நுந்தி- செலுத்தி. 8. இறுத்தாய்-இறும்படி செய்தாய்.

பிடிக்குக் களிறே ஒத்தியால் எம்பிரான்
பிரமற் கும்பிரான் மற்றைமாற் கும்பிரான்
கொடிக்கும் மளவிற் புரம்மூன் றெரியச்
சிலைதொட் டவனே உனைநான் மறவேன்
வடிக்கின் றனபோற் சிலவன் திரைகள்
வலித்தெற் றிமுழங் கிவலம் புரிகொண்
டடிக்குங் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனே. 9

எந்தம் மடிகள் இமையோர் பெருமான்
எனக்கென் றும்அளிக் கும்மணி மிடற்றன்
அந்தண் கடலங் கரைமேல் மகோதை
அணியார் பொழில்அஞ் சைக்களத் தப்பனை
மந்தம் முழவுங் குழலும் மியம்பும்
வளர்நாவ லர்கோன் நம்பியூ ரன்சொன்ன
சந்தம் மிகுதண் டமிழ்மா லைகள்கொண்
டடிவீ ழவல்லார் தடுமாற் றிலரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அஞ்சைக்களத்தப்பர்; அம்பிகை-உமையம்மை.

**வரலாறு:** சுந்தரமூர்த்தி நாயனார் திருவஞ்சைக்களம் சென்று பாசம் ஒழியும் வேட்கையால் இப்பதிகத்தைப் பாடச் சிவபெருமான் நாயனாரைக் கைலைக்கு அழைத்து வரும்படி வெள்ளை யானையுடன் தேவர்களை விடுத்தருளினார். [**பெரிய புராணம்**, வெள்ளையானைச்சருக்கம், 28-31.]

## (6) கொங்கநாட்டிலுள்ள தலங்கள்

## 1. திருப்புக்கொளியூர் அவிநாசி — பண்: குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

*எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெரு மானையே*
*உற்றாய்என் றன்னையே உள்குகின் றேன்உணர்ந்* [துள்ளத்தால்
*புற்றா டரவா* புக்கொளி யூரவி நாசியே*
*பற்றாக வாழ்வேன் பசுபதி யேபரா† மேட்டியே.* 1

வழிபோவார் தம்மோடும் வந்துடன் கூடிய மாணிநீ‡
ஒழிவ தழகோ சொல்லாய் அருளோங்கு சடையானே
பொழிலா ருஞ்சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
இழியாக் குளித்த மாணிஎன் னைக்கிறி செய்ததே. 2

*எங்கே னும் போகினும் எம்பெரு மானை நினைந்தக்கால்*
*கொங்கே புகினுங் கூறைகொண் டாறலைப் பார்இலை*
*பொங்கா டரவா புக்கொளி யூரவி நாசியே*
*எங்கோ னேஉனை வேண்டிக்கொள் வேன்பிற வாமையே.* 3

உரைப்பார் உரைஉகந் துள்கவல் லார்தங்கள் உச்சியாய்
அரைக்கா டரவா ஆதியும் அந்தமும் ஆயினாய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே
கரைக்கால் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே. 4

---

*1. உள்குகின்றேன் – நினைக்கின்றேன். * 'டரவப்'; † 'பசுபதி யெம்பர' என்றும் பாடம்.*

*2. மாணி – பிரமசாரி. ‡ 'மாமணிநீ' என்றும் பாடம். இழியா – இறங்கி. கிறி – வஞ்சகம்.*

*3. கொங்கு – கொங்கு நாடு. கூறைகொண்டு – ஆடையைக் கவர்ந்துகொண்டு.*

*4. உச்சியாய் – தலைமேல் உள்ளவனே. புரைக்கு ஆடு – உயர்வதற்காக ஆடுகின்ற; புரை–உயர்வு.*

அரங்காவ தெல்லா மாயிடு காடது அன்றியும்
சரங்கோலை வாங்கி வரிசிலை நாணியிற் சந்தித்துப்
புரங்கோட§ எய்தாய் புக்கொளி யூரவி நாசியே
குரங்காடு சோலைக் கோயில்கொண் டகுழைக் காதனே. 5

நாத்தா னும்உனைப் பாடல்அன் றிநவி லாதெனச்
சோத்தென்று தேவர் தொழநின்ற சுந்தரச் சோதியாய்
பூத்தாழ் சடையாய் புக்கொளி யூரவி நாசியே
கூத்தா உனக்குநான் ஆட்பட்ட குற்றமுங் குற்றமே. 6

மந்தி கடுவனுக் குண்பழம் நாடி மலைப்புறம்
சந்திகள் தோறுஞ் சலபுட்பம் இட்டு வழிபடப்
புந்தி உறைவாய் புக்கொளி யூரவி நாசியே
நந்தி உனைவேண்டிக் கொள்வேன் நரகம் புகாமையே. 7

பேணு தொழிந்தேன் உன்னைஅல் லாற்பிற தேவரைக்
காணு தொழிந்தேன் காட்டுதி யேஇன்னங் காண்பன்நான்
பூணுண் அரவா புக்கொளி யூரவி நாசியே
காணுத கண்கள் காட்டவல் லகறைக் கண்டனே. 8

நள்ளாறு தெள்ளா றரத்துறை வாய்எங்கள் நம்பனே
வெள்ளாடை வேண்டாய் வேங்கையின் தோலை விரும்பினாய்
புள்ளேறு சோலைப் புக்கொளி யூரிற் குளத்திடை
உள்ளாடப் புக்க மாணியென் னைக்கிறி செய்ததே. 9

நீரேற ஏறுநிமிர் புன்சடை நின்மல மூர்த்தியைப்
போரேற தேறியைப் புக்கொளி யூரவி நாசியைக்

---

5. ஆய் இடுகாடு அரங்காவது. சரமாகிய கோலை; கோல் – அம்பு. சந்தித்து – பூட்டி. § 'புரங்கெட' என்றும் பாடம்.

6. சோத்து–தோத்திரம். குற்றமே : வினா.

7. மந்தி – பெண் குரங்கு. கடுவன் – ஆண்குரங்கு.

8. பிற தேவரைப் பேணுதொழிந்தேன்.

க்ாரே று கண்டனைத் தொண்டன் ஆரூரன் கருதிய
சீரே று பாடல்கள் செப்பவல் லார்க்கில்லை துன்பமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அவிநாசியப்பர்; அம்பிகை: பெருங்கருணைநாயகி.

**வரலாறு:** அவிநாசியில் அந்தணர் குலத்துச் சிறுவன் ஒருவனை முதலை சில ஆண்டுகளுக்குமுன் உண்டதென்று அறிந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள், இத்திருப்பதிகம் பாடி, மீண்டும் அச்சிறுவனைத் தக்க வளர்ச்சியுடன் அழைப்பித்தார். [**பெரிய புராணம், வெள்ளானைச் சருக்கம்,** *செ. 4-13.*]

---

## 2. திருமுருகன்பூண்டி — பண்: பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவ லாமை சொல்லித், திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண் டாற லைக்குமிடம், முடுகு நாறிய வடுகர் வாழ்முரு கன் பூண்டி மாநகர்வாய், இடுகு நுண்ணிடை மங்கை தன்னொ டும் எத்துக் கிங்கிருந் தீரெம்பி ரானிரே. 1

வில்லைக் காட்டி வெருட்டி வேடுவர் விரவ லாமை சொல்லிக், கல்லி னால்எறிந் திட்டும் மோதியும் கூறை கொள் ளுமிடம், முல்லைத் தாது மணங்கமழ் முருகன் பூண்டி மா நகர்வாய், எல்லை காப்பதொன் றில்லை யாகில்நீர் எத்துக் கிங்கிருந் தீரெம்பி ரானிரே. 2

பசுக்க ளேகொன்று தின்று பாவிகள் பாவம் ஒன்ற றியார், உசிர்க்கொ லைபல நேர்ந்து நாள்தொறுங் கூறை கொள்ளுமிடம், முசுக்கள் போற்பல வேடர்வாழ்

---

1. கொடுகு—வளைந்த. விரவலாமை சொல்லி—விரோதமான வார்த்தைகளைச் சொல்லி. திடுகுமொட்டு: ஒலிக்குறிப்பு. முடுகு நாறிய—வேகம் மிக்க. இடுகு—சிறுத்த. எத்துக்கு—எதற்காக.

3. முசுக்கள் – குரங்குகள். இசுக்கு அழிய – பெருமை கெடும்படி. பயிக்கம்—பிச்சை.

முருகன் பூண்டி மாநகர்வாய், இசுக்கழியப் பயிக்கங் கொண்டுநீர் எத்துக் கிங்கிருந் தீர்எம்பி ரானிரே. 3

பீறற் கூறை உடுத்தொர் பத்திரங் கட்டி வெட்டன ராய்ச், சூறைப் பங்கிய ராகி நாள்தொறுங் கூறை கொள்ளு மிடம், மோறை வேடுவர் கூடிவாழ் முருகன் பூண்டி மாநகர்வாய், ஏறு காலிற்ற தில்லை யாய்விடில் எத்துக் கிங்கிருந் தீர்எம்பி ரானிரே. 4

தயங்கு தோலை உடுத்த சங்கரா சாம வேதம்ஓதி, மயங்கி ஊரிடு பிச்சை கொண்டுணும் மார்க்கம் ஒன்றறியீர், முயங்கு பூண்முலை மங்கை யாளொடு முருகன் பூண்டி மாநகர்வாய், இயங்க வும்மிடுக் குடைய ராய்விடில் எத்துக் கிங்கிருந் தீர்எம்பி ரானிரே. 5

விட்டி சைப்பன கொக்க ரைகொடு கொட்டித் தத் தளகம், கொட்டிப் பாடுமித் துந்து மியொடு குடமுழா நீர்மகிழ்வீர், மொட்ட லர்ந்து மணங்கமழ் முருகன் பூண்டி மாநகர்வாய், இட்ட பிச்சைகொண் டுண்ப தாகில்நீர் எத்துக் கிங்கிருந் தீர்எம்பி ரானிரே. 6

வேதம் ஓதிவெண் ணீறு பூசிவெண் கோவணந் தற்றயலே, ஓதம் மேவிய ஒற்றி யூரையும் முத்தி நீர்மகிழ்வீர், மோதி வேடுவர் கூறை கொள்ளும் முருகன் பூண்டி மாநகர்வாய், ஏது காரணம் ஏது காவல்கொண் டெத்துக் கிங்கிருந் தீர்எம்பி ரானிரே. 7

---

4. பத்திரம்—வாள். வெட்டனராய் – கொடிய சொற்களைச் சொல்பவராய். சூறைப் பங்கியர் – பரட்டைத் தலையை யுடையார்; பங்கி—தலைமயிர். மோறை—அழகற்ற முகத்தையுடைய.

5. இயங்கவும் இடுக்குடையராய் விடில்—நடக்கவும் இடையூறுடையவரானால்; வழிப்பறி செய்வோரால் வழி நடப்பதுகூட அபாயத்துக்கு இடமாகுமானால் என்பது கருத்து.

7. தற்று—இறுக்கிக் கட்டி. ஓவம்—கடல். முத்தி—சார்ந்து.

படவ ரவுநுண் ணேரி டைப்பணைத் தோள்வ ரிநெடுங் கண், மடவ ரல்லுமை நங்கை தன்னையோர் பாகம் வைத்து கந்தீர், முடவர் அல்லீர் இடரிலீர் முருகன் பூண்டி மாநகர் வாய், இடவம் ஏறியும் போவ தாகில்நீர் எத்துக் கிங்கிருந் தீர்எம்பி ரானிரே. 8

சாந்த மாகவெண் ணீறு பூசிவெண் பற்ற லைகலனு, வேய்ந்த வெண்பிறைக் கண்ணி தன்னையோர் பாகம் வைத்துகந்தீர், மோந்தை யோடு முழக்கரு முருகன் பூண்டி மாநகர்வாய், ஏந்து பூண்முலை மங்கை தன்னொடும் எத்துக் கிங்கிருந் தீர்எம்பி ராணிரே. 9

முந்தி வானவர் தாந்தொழு முருகன் பூண்டி மாநகர் வாய்ப், பந்த ணைவிரற் பாவை தன்னையோர் பாகம் வைத் தவனைச், சிந்தை யிற்சிவ தொண்ட னூரன் உரைத்தன பத்துங்கொண், டெந்தம் மடிகளை ஏத்து வார்இடர் ஒன்றுந் தாம்இலரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: முருகாவுடையார்: அம்பிகை: ஆவுடைநாயகி.

**வரலாறு:** சுந்தரமூர்த்தி சுவாமிகள், சேரமான் பெருமாள் நாயனூர் அளித்த பொருள்களை ஆட்களின் தலையில் ஏற்றித் திருமுருகன் பூண்டிக்கு அருகில் வரும்போது பெருமான் ஏவலால் பூதங்கள் வேடுவராகி வந்து அந்தப் பொருள்களைப் பறித்துப் போயினர். சுவாமிகள் இத்தலத்துக்கு வந்து இப்பதிகத்தைப் பாடவே, சிவபிரான் பூதங்கள் கவர்ந்த பொருளை மீண்டும் பெறச் செய்தார். [**பெரிய புராணம்**, சேரமான் பெருமாள், **170.**]

---

8. அரவுபோன்ற இடை.

9. வெள்ளிய பிறையாகிய கண்ணியின் ஒரு பகுதியைச் சிரத்தில் வைத்து மகிழ்ந்தீர். மோந்தை–ஒரு வாத்தியம்.

## 3. திருவெஞ்சமாக்கூடல் — பண்: கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

எறிக்குங் கதிர்வேய் உதிர்முத் தமொடே*
லம்† இல வங்கந் தக்கோலம் இஞ்சி
செறிக்கும் புனலுட் பெய்துகொண்டு மண்டித்
திளைத்தெற்று சிற்றா றதன்கீழ்க் கரைமேல்
முறிக்குந் தழை‡மா முடப்புன்னை ஞாழல்
குருக்கத் திகள்மேற் குயில்கூ வலறா
வெறிக்குங் கலைமா வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியே னையும்வேண் டுதியே. 1

குளங்கள் பலவுங் குழியுந் நிறையக்
குடமா மணிசந் தனமும் மகிலும்
துளங்கும் புனலுட் பெய்துகொண்டு மண்டித்
திளைத்தெற்று சிற்றா றதன்கீழ்க் கரைமேல்
வளங்கொள் மதில்மா ளிகைகோ புரமும்
மணிமண் டபமும் இவைமஞ்சு தன்னுள்
விளங்கும் மதிதோய் வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியே னையும்வேண் டுதியே. 2

வரைமான் அனையார் மயிற்சாயல் நல்லார்
வடிவேற்கண் நல்லார் பலர்வந் திறைஞ்சத்
திரையார் புனலுட் பெய்துகொண்டு மண்டித்
திளைத்தெற்று சிற்றா றதன்கீழ்க் கரைமேல்

---

1. கதிர்: முத்தத்துக்கு விசேடணம். வேய் – மூங்கில். முறிக்கும்–தழைக்கும். ஞாழல்–புலி நகக் கொன்றை. விகிர்தன்: தலத்துமூர்த்தியின் திருநாமம். *'உதிர்முத் தமொடும்'; †'ஏலம்' ‡'தாழை' என்றும் பாடம்.

2. மஞ்சு – மேகம். 3. திரை – வரிசை.

நிரையார் கமுகுந் நெடுந்தாள் தெங்குங்
குறுந்தாட் பலவும் விரவிக் குளிரும்
விரையார் பொழில்சூழ் வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியே னையும்வேண் டுதியே. 3

பண்ணேர் மொழியா ளையோர்பங் குடையாய்
படுகாட் டகத்தென் றும்ஓர்பற் றொழியாய்
தண்ணார் அகிலுந்§ நலசா மரையும்
அலைத்தெற் றுசிற்றா றதன்கீழ்க் கரைமேல்
மண்ணார் முழவுங் குழலும் இயம்ப
மடவார் நடமா டுமணி யரங்கில்
விண்ணார் மதிதோய் வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியே னையும்வேண் டுதியே. 4

துளைவெண் குழையுஞ் சுருள்வெண் டோடுந்
தூங்குங் காதில் துளங்கும் படியாய்
களையே‡ கமழும் மலர்க்கொன் றையினாய்
கலந்தார்க் கருள்செய் திடுங்கற் பகமே
பிளைவெண் பிறையாய் பிறங்குஞ் சடையாய்
பிறவா தவனே பெறுதற் கரியாய்
வெளைமால் விடையாய் வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியே னையும்வேண் டுதியே. 5

தொழுவார்க் கெளியாய் துயர்தீர நின்றாய்
சுரும்பார் மலர்க்கொன் றைதுன் றுஞ் சடையாய்
உழுவார்க் கரிய விடையேறி ஒன்னார்
புரந்தீ எழஓ டுவித்தாய் அழகார்

---

4. சாமரை – கவரிமானின் வால். § 'முகிலும்' என்றும் பாடம்.

5. குழை வலக்காதிலும் தோடு இடக்காதிலும் உள்ளவை. படியாய் – திருவுருவத்தை உடையவனே. களையே – கள்ளையே; தேனை. ‡ 'களையோர்' என்றும் பாடம். பிளை – பிள்ளை, வெளை – வெள்ளை.

முழவார் ஒலிபா டலொடா டல்அறு
முதுகா டரங்கா நடமாட வல்லாய்
விழவார் மறுகில் வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியே னையும்வேண் டுதியே. 6

கடமா களியா னைஉரித் தவனே
கரிகா டிடமா அனல்வீசி நின்று
நடமா டவல்லாய் நரையே றுகந்தாய்
நல்லாய் நறுங்கொன் றைநயந் தவனே
படம்ஆ யிரமாம் பருத்துத் திப்பைங்கண்
பகுவா யெயிற்றோ டழலே உமிழும்
விடவார் அரவா வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியே னையும்வேண் டுதியே. 7

காடும் மலையுந் நாடும் மிடறிக்
கதிர்மா மணிசந் தனமும் மகிலும்
சேடன் னுறையும் மிடந்தான் விரும்பித்
திளைத்தெற் று சிற்றா றதன்கீழ்க் கரைமேல்
பாடல் முழவுங் குழலும மியம்பப்
பணைத்தோ ளியர்பா டலொடா டல்அறு
வேடர் விருமபும் வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியே னையும்வேண் டுதியே. 8

கொங்கார் மலர்க்கொன் றையந்தா ரவனே
கொடுகொட் டியொர்வீ ணைஉடை யவனே
பொங்கா டரவும் புனலுஞ் சடைமேற்
பொதியும் புனிதா புனஞ்சூழ்ந் தழகார்

---

6. உழுவார்க்கு அரிய விடை — உழுந்தொழில் உடையவருக்குக் கிடைத்தற்கரிய இடபம்; என்றது உலகத்து எருது போன்றதன்று என்பதைக் குறித்தபடி.

7. கரிகாடு — சுடுகாடு. நரை — வெள்ளை. பருத்துத்தி — பெரிய படப்பொறி. 8. சேடன் உறையும் இடந்தான்.

துங்கார் புனலுட் பெய்துகொண்டு மண்டித்
திளைத்தெற்று சிற்று றதன்கீழ்க் கரைமேல்
வெங்கார் வயல்சூழ் வெஞ்சமாக் கூடல்
விகிர்தா அடியே னையும்வேண் டுதியே. 9

வஞ்சிநுண் ணிடையார் மயிற்சாய லன்னார்
வடிவேற் கண்நல்லார் பலர்வந் திறைஞ்சும்
வெஞ்சமாக் கூடல் விகிர்தா அடியே
னையும்வேண் டுதியே என்றுதான் விரும்பி
வஞ்சியா தளிக்கும் வயல்நா வலர்கோன்
வனப்பகை யப்பன் வன்றேண்டன் சொன்ன
செஞ்சொற் றமிழ்மா லைகள்பத்தும் வல்லார்
சிவலோகத் திருப்பது திண்ண மன்றே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: விகிர்தேசுவரர்; அம்பிகை: விகிர்தேசுவரி.

---

## 4. திருப்பாண்டிக்கொடுமுடி — பண்: பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்
பாத மேமனம் பாவித்தேன்
பெற்ற லும்பிறந் தேன்இ னிப்பிற
வாத தன்மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்ற வாஉனை நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 1

---

1. இப்பதிகம் நமச்சிவாயத் திருப்பதிகம் என்றும் வழங்கும். [பெரிய புராணம், ஏயர்கோன், 87.]

இட்ட னும்மடி ஏத்து வார்இகழ்ந்
திட்ட நாள்மறந் திட்டநாள்
கெட்ட நாள்இவை என்ற லாற்கரு
தேன்கி ளர்புனற் காவிரி
வட்ட வாசிகை கொண்ட டிதொழு
தேத்து பாண்டிக் கொடுமுடி
நட்ட வாஉனை நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 2

ஓவு நாள்உணர் வழியும் நாள்உயிர்
போகும் நாள்உயர் பாடைமேல்
காவும் நாள்இவை என்ற லாற்கரு
தேன்கி ளர்புனற் காவிரிப்
பாவு தண்புனல் வந்தி ழிபரஞ்
சோதி பாண்டிக் கொடுமுடி
நாவ லாஉனை நான்ம றக்கினும
சொல்லும் நாநமச்சி வாயவே. 3

எல்லை யில்புகழ் எம்பி ரான்எந்தை
தம்பி ரான்என்பொன் மாமணி
கல்லை உந்தி வளம்பொ ழிந்திழி
காவி ரியதன் வாய்க்கரை
நல்ல வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை
யூரிற் பாண்டிக் கொடுமுடி
வல்ல வாஉனை நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 4

---

2. உம்அடியை ஏத்துவார் என்னை இகழ்ந்தநாளும் உம்மை நான் மறந்த நாளும் கெட்டநாட்கள். வாசிகை – மாலை.

3. ஓவும் நாள் – உன்னை மறந்து நீங்கும் நாளை. ஓவும் நாளையே உணர்வழியும் நாள் முதலியனவாகக் கருதுவேன். காவும் – சுமக்கும். பாவு – பரவிய.

அஞ்சி ஞர்க்கரண் ஆதி என்றடி
யேனும் நான்மிக அஞ்சினேன்
அஞ்சல் என்றடித் தொண்ட னேற்கருள்
நல்கி ஞய்க்கழி கின்றதென்
பஞ்சின் மெல்லடிப் பாவை மார்குடைந்
தாடு பாண்டிக் கொடுமுடி
நஞ்ச ணிகண்ட நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 5

ஏடு வான்இளந் திங்கள் சூடினை
என்பின் கொல்புலித் தோலின்மேல்
ஆடு பாம்பத ரைக்க சைத்த
அழக னேஅந்தண் காவிரிப்
பாடு தண்புனல் வந்தி ழிபரஞ்
சோதி பாண்டிக் கொடுமுடிச்
சேட னேஉனை நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 6

விரும்பி நின்மலர்ப் பாத மேநினைந்
தேன்வி னைகளும் விண்டனன்
நெருங்கி வண்பொழில் சூழ்ந்தெ ழில்பெற
நின்ற காவிரிக் கோட்டிடைக்
குரும்பை மென்முலைக் கோதை மார்குடைந்
தாடு பாண்டிக் கொடுமுடி
விரும்ப னேஉனை நான்ம றக்கினும்
சொல்லும் நாநமச்சி வாயவே. 7

---

5. அரண் ஆதி – பாதுகாப்பாகிருய். அழிகின்றது என் – இரங்குவது எதற்காக.

6. ஏடு – மலரிதழைப் போன்ற. சேடன் – பெருமையை உடையவன். 7. கோட்டிடை – கரையில்.

செம்பொ னேர்சடை யாய்தி ரிபுரம்
  தீயெ ழச்சிலை கோலினாய்
வம்பு லாங்குழ லாளைப் பாகம்
  அமர்ந்து காவிரிக் கோட்டிடைக்
கொம்பின் மேற்குயில் கூவ மாமயில்
  ஆடு பாண்டிக் கொடுமுடி
நம்ப னேஉனை நான்ம றக்கினும்
  சொல்லும் நாநமச்சி வாயவே. 8

சார ணன்தந்தை எம்பி ரான்எந்தை
  தம்பி ரான்என்பொன் மாமணியென்று
பேரெ ணாயிர கோடி தேவர்
  பிதற்றி நின்று பிரிகிலார்
நார ணன்பிர மன்தொ ழுங்கறை
  யூரிற் பாண்டிக் கொடுமுடிக்
கார ணாஉனை நான்ம றக்கினும்
  சொல்லும் நாநமச்சி வாயவே. 9

கோணி யபிறை சூடி யைக்கறை
  யூரிற் பாண்டிக் கொடுமுடி
பேணி யபெரு மானைப் பிஞ்ஞகப்
  பித்த னைப்பிறப் பில்லியைப்
பாணு லாவரி வண்ட றைகொன்றைத்
  தார னைப்படப் பாம்பரை
நாண னைத்தொண்டன் ஊரன் சொல்இவை
  சொல்லு வார்க்கில்லைத் துன்பமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: கொடுமுடிநாதர்; அம்பிகை: பண்மொழியம்மை.

---

9. சாரணன்—தூதனாக இருப்பவன்.
10. படப்பாம்பை அரைநாணாக உடையவனை.

## (7) நடு நாட்டிலுள்ள தலங்கள்

## 1. திருநெல்வாயில் அரத்துறை — பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

கல்வாய்அகி லுங்கதிர் மாமணியும்
கலந்துந்தி வருந்நிவ வின்கரைமேல்
நெல்வாயில் அரத்துறை நீடுறையும்
நிலவெண்மதி சூடிய நின்மலனே
நல்வாயில்செய் தார்நடந் தார்உடுத்தார்
நரைத்தார்இறந் தார்என்று நானிலத்தில்
சொல்லாய்க் கழிகின்ற தறிந்தடியேன்
தொடர்ந்தேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே.1

கறிமாமிளகு கும்மிகு வன்மரமும்
மிகஉந்தி வருந்நிவ வின்கரைமேல்
நெறிவார்குழலா ரவர்காண நடஞ்செய்
நெல்வாயில் அரத்துறை நின்மலனே
வறிதேநிலை யாத இம் மண்ணுலகில்
நரனாக வகுத்தனை நானிலையேன்
பொறிவாயில்இவ் வைந்தினை யும்மவியப்
பொருதுன்னடி யேபுகுஞ் சூழல்சொல்லே. 2

புற்றாடர வம்மரை ஆர்த்துகந்தாய்
புனிதாபொரு வெள்விடை ஊர்தியினாய்
எற்றேஒரு கண்ணிலன் நின்னையல்லால்
நெல்வாயில் அரத்துறை நின்மலனே

1. கல்வாய்-மலையில் உள்ள. நிவவு-நிவா என்னும் ஆறு. நெல்வாயில், தலத்தின் பெயர்; அரத்துறை, கோயிலின் பெயர். சூழல்-இடம்.

2. வன்மரம்-ஒருவகை மரம். பொறிவாயில் இவ்வைந்து: "பொறிவாயி லைந்தவித்தான்" (குறள்.)

மற்றேல்ஒரு பற்றிலன் எம்பெருமான்
வண்டார்குழ லாள்மங்கை பங்கினனே
அற்றூர்பிற விக்கடல் நீந்திஏறி
அடியேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே. 3

கோடுயர் கோங்கலர் வேங்கைஅலர்
மிகஉந்தி வருந்நிவ வின்கரைமேல்
நீடுயர் சோலைநெல் வாயில்அரத்
துறைநின்மல னேநினை வார்மனத்தாய்
ஓடு புனற்கரை யாம்இளமை
உறங்கிவிழித் தால்ஒக்கும் இப்பிறவி
வாடி இருந்து வருந்தல்செய்யா
தடியேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே.

உலவும்முகி லிற்றலை கற்பொழிய
உயர்வேயொ டிழிநிவ வின்கரைமேல்
நிலவும்மயி லாரவர் தாம்பயிலும்
நெல்வாயில் அரத்துறை நின்மலனே
புலன்ஐந்தும் மயங்கி அகங்குழையப்
பொருவேலொர் நமன்தமர் தாம்நலிய
அலமந்து மயங்கி அயர்வதன்முன்
அடியேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே. 5

---

3. புற்றுடு அரவம்: சாதி விசேடம். ஒரு கண் இலன்: சுந்தரமூர்த்தி நாயனார் சங்கிலியைப் பிரியேனென் றுரைத்துப் பின் பிரிந்தமையின், இரண்டு கண்ணும் இழந்து, கச்சி ஏகம்பனைப் பாடி இடக்கண் மாத்திரம் பெற்றுத் திருவாரூரை நோக்கிச் செல்கையில் இத்தலத்துக்கு வந்தார்; அப்போது ஒரு கண் இல்லாமையை இது குறித்தது.

4. கோடு-கொம்பு. உறங்கி விழித்தால் ஒக்கும் இப்பிறவி: "உறங்கி விழிப்பது போலும் பிறப்பு" (குறள்.)

5. கல் பொழிய—மலையின்மேல் மழை பொழிய, மயிலார்—மயில்போன்ற மகளிர்.

ஏலம்மில வங்கம் எழிற்கனகம்
　　மிகஉந்தி வருந்நிவ வின்கரைமேல்
நீலம்மலர்ப் பொய்கையில் அன்னம்மலி
　　நெல்வாயில் அரத்துறை யாய்ஒருநேல்
வால்ஊன்ற வருந்தும் உடம்பிதனை
　　மகிழாதழ காவலந் தேன்இனியான்
ஆலந்நிழ லில்அமர்ந் தாய்அமரா
　　அடியேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே. 6

சிகரம்முகத் தில்திர ளார்அகிலும்
　　மிகஉந்தி வருந்நிவ வின்கரைமேல்
நிகரில்மயி லாரவர் தாம்பயிலுந்
　　நெல்வாயில் அரத்துறை நின்மலனே
மகரக்குழை யாய்மணக் கோலமதே
　　பிணக்கோலம தாம்பிற விஇதுதான்
அகரம்முத லின்எழுத் தாகிநின்றாய்
　　அடியேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே. 7

திண்டேர்நெடு வீதிஇ லங்கையர்கோன்
　　திரள்தோள்இரு பஃதும் நெரித்தருளி
ஞெண்டாடு நெடுவயல் சூழ்புறவின்
　　நெல்வாயில் அரத்துறை நின்மலனே
பண்டேமிக நான்செய்த பாக்கியத்தாற்
　　பரஞ்சோதி நின்நாமம் பயிலப்பெற்றேன்
அண்டாவம ரர்க்கம ரர்பெருமான்
　　அடியேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே. 8

---

6. கனகம்—பொன். வால்—முனை.

7. அகரம்.........நின்றாய் — அகரத்தை முதலாக உடைய எழுத்துக்களாகி நின்றவனே.

8. இலங்கையர் கோன்—இராவணன்.

மாணுஉரு வாகியொர் மண்ணளந்தான்
மலர்மேலவன் நேடியும் காண்பரியாய்
நீணீள்முடி வானவர் வந்திறைஞ்சுந்
நெல்வாயில் அரத்துறை நின்மலனே
வாணூர்நுத லார்வலைப் பட்டடியேன்
பலவின்கனி வீந்தது* போல்வதன்முன்
ஆணோடுபெண் ணும்உரு வாகிநின்றாய்
அடியேன்உய்யப் போவதோர் சூழல்சொல்லே. 9

நீரூரும் நெடுவயல் சூழ்புறவின்
நெல்வாயில் அரத்துறை நின்மலனைத்
தேரூர்நெடு வீதிநன் மாடமலி
தென்னாவலர் கோன்அடித் தொண்டன்அணி
ஆரூரன் உரைத்தன நற்றமிழின்
மிகுமாலையொர் பத்திவை கற்றுவல்லார்
காரூர்களி வண்டறை யானைமன்ன
ரவராகியொர் விண்முழு தாள்பவரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அரத்துறை நாதர்; அம்பிகை: ஆனந்த நாயகி.

## 2. திருக்கூடலையாற்றூர் — பண்: புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

வடிவுடை மழுஏந்தி மதகரி உரிபோர்த்துப்
பொடிஅணி திருமேனிப் புரிகுழல் உமையோடும்
கொடிஅணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
அடிகள்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 1

---

9. மாணு உருவாகி — பிரமசாரியாக உருவம் எடுத்து; மாண்—பிரமசாரி. நேடியும் — தேடியும். வாண் — வாள்; ஒளி. வீந்தது—யாருக்கும் பயன்படாமல் அழிந்தது; * 'ஈந்தது';'ஈயது' என்றும் பாடம்.

வையகம் முழுதுண்ட மாலொடு நான்முகனும்
பையர விளவல்குற் பாவையொ டும்முடனே
கொய்யணி மலர்ச்சோலைக் கூடலை யாற்றூரில்
ஐயனிவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 2

ஊர்தொறும் வெண்டலைகொண் டுண்பலி இடுமென்று
வார்தரு மென்முலையாள் மங்கையொ டும்முடனே
கூர்நுனை மழுவேந்திக் கூடலை யாற்றூரில்
ஆர்வன் இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 3

சந்தண வும்புனலுந் தாங்கிய தாழ்சடையன்
பந்தண வும்விரலாள் பாவையொ டும்முடனே
கொந்தண வும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அந்தணன் வழிபோந்த அதிசயம் அறியேனே. 4

வேதியர் விண்ணவரும் மண்ணவ ரும்தொழநற்
சோதிய துருவாகிச் சுரிகுழல் உமையோடும்
கோதிய வண்டறையுங் கூடலை யாற்றூரில்
ஆதிஇவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 5

வித்தக வீணையொடும் வெண்புரி நூல்பூண்டு
முத்தன வெண்முறுவல் மங்கையொ டும்முடனே
கொத்தல ரும்பொழில்சூழ் கூடலை யாற்றூரில்
அத்தன் இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 6

மழைநுழை மதியமொடு வாளர வஞ்சடைமேல்
இழைநுழை துகில்அல்குல் ஏந்திழை யாளோடும்
குழையணி திகழ்சோலைக் கூடலை யாற்றூரில்
அழகன் இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 7

---

4. கொந்து – பூக்கொத்து.

6. வித்தகம் – கலைத்திறம்.

மறைமுதல் வானவரும் மாலயன் இந்திரனும்
பிறைநுதல் மங்கையொடும் பேய்க்கண முஞ்சூழக்
குறள்படை யதனோடுங் கூடலை யாற்றூரில்
அறவன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே. 8

வேலையின் நஞ்சுண்டு விடையது தான்ஏறிப்
பாலன மென்மொழியாள் பாவையொ டும்முடனே
கோலம தருவாகிக் கூடலை யாற்றூரில்
ஆலன்இவ் வழிபோந்த அதிசயம் அறியேனே.* 9

கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடும்
ஆடலு கந்தானை அதிசயம் இதுவென்று
நாடிய இன்றமிழால் நாவல வூரன்சொல்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: நெறிகாட்டும் நாயகர்; அம்பிகை: புரிகுழல்நாயகி

**வரலாறு:** சுந்தரமூர்த்தி சுவாமிகள் பல தலங்களைத் தரிசித்து வரும்போது, கூடலையாற்றூருக்கு அருகில் வந்தும் அத்தலத்துக்குச் செல்லாமல் திருமுதுகுன்றை நோக்கிச் செல்லலானார். அப்பொழுது சிவபெருமான் வழியிடையே ஓர் அந்தணராய் நிற்க, அவரைக் கண்டு சுந்தரர், முதுகுன்றுக்கு வழி யாதென்று வினவினார்; இந்தக்கூடலையாற்றூர் வழியாகப் போக வேண்டுமென்று பெருமான் வழிகாட்டிப் பின் வரச் சுந்தரர் கூடலையாற்றூரை அணுகியவுடன் பின்வந்த சிவபெருமான் மறைந்தருளினார்; அந்த அதிசயம் உணர்ந்து இத்திருப்பதிகத்தைப்பாடினார். [பெரிய புராணம், ஏயர்கோன், 100–103.]

---

8. குறள்படை – குட்டையாகிய உருவத்தையுடைய பூதப்படை.

9. ஆலன்–ஆலடியில் தட்சிணாமூர்த்தியாக இருந்தவன்.

* 'அறியோமே' என்று பாடம். இதனை இப்பதிகமுழுதுங் கொள்க.

## 3. திருத்தினைநகர் — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

நீறு தாங்கிய திருநுத லானை
நெற்றிக் கண்ணனை நிரைவளை மடந்தை
கூறு தாங்கிய கொள்கையி னானைக்
குற்றம் இல்லியைக் கற்றையஞ் சடைமேல்
ஆறு தாங்கிய அழகனை அமரர்க்
கரிய சோதியை வரிவரால் உகளும்
சேறு தாங்கிய திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 1

பிணிகொள் ஆக்கை பிறப்பிறப் பென்னும்
இதனைநீக்கி ஈசன் திருவடி யிணைக்காள்*
துணிய வேண்டிடிற் சொல்லுவன் கேள்நீ
அஞ்சல் நெஞ்சமே வஞ்சர்வாழ் மதில்மூன்
றணிகொள் வெஞ்சிலை யால்உகச் சீறும்
ஐயன் வையகம் பரவிநின் றேத்தும்
திணியும் வார்பொழில் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 2

வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பால்
மயல துற்றுவஞ் சனைக்கிடம் ஆகி
முடியு மாகரு தேல்எரு தேறும்
மூர்த்தி யைமுத லாய பிரானை

---

1. நிரை வளை – வரிசையாக அணிந்த வளை.

2. ஆள் துணிய வேண்டிடின் – அடிமையாகத் துணிய விரும்பினால். திணியும் – செறியும். *"பிணிகொ ளாக்கையிற் பிறப்பென்னு மிதனை, நீக்கி யீசன்தன் திருவடி யிணைக்காள்" என்றும் பாடம்.

அடிகள் என்றடி யார்தொழு தேத்தும்
அப்பன் ஒப்பில்லா முலைஉமை கோனைச்
செடிகொள் கான்மலி திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 3

பாவ மேபுரிந் தகலிடந் தன்னிற்
பலப கர்ந்தல மந்துயிர் வாழ்க்கைக்
காவ என்றுழந் தயர்ந்துவீ ழாதே
அண்ணல் தன்திறம் அறிவினாற் கருதி
மாவின் ஈருரி உடைபுனைந் தானை
மணியை மைந்தனை வானவர்க் கமுதைத்
தேவ தேவனைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 4

ஒன்ற லாஉயிர் வாழ்க்கையை நினைந்திட்
டுடல்த ளர்ந்தரு மாநிதி இயற்றி
என்றும் வாழலாம் எமக்கெனப் பேசும்
இதுவும் பொய்யென வேநினை உளமே
குன்று லாவிய புயமுடை யானைக்
கூத்த னைக்குலா விக்குவ லயத்தோர்
சென்றெ லாம்பயில் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 5

வேந்த ராய்உல காண்டறம் புரிந்து
வீற்றி ருந்தஇவ் வுடலது தன்னைத்
தேய்ந்தி றந்துவெந் துயர்உழந் திடும்இப்
பொக்க வாழ்வினை விட்டிடு நெஞ்சே

---

3. வடி – கூர்மை; வாளும் ஆம். செடி – புதர்.
4. ஆவ – ஆந்தோ. மாவின் – யானையின்.
5. ஒன்றலா-ஒருநிலையுடையதென்று சொல்வதற்கில்லாத.

பாந்த ளங்கையில் ஆட்டுகந் தானைப்
பரம னைக்கடற் சூர்தடிந் திட்ட
சேந்தர் தாதையைத் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 6

தன்னில் ஆசறு சித்தமும் இன்றித்
தவம் முயன்றவம் ஆயின பேசிப்
பின்ன லார்சடை† கட்டிஎன் பணிந்தாற்
பெரிதும் நீந்துவ தரிதது நிற்க
முன்னெ லாம்முழு முதலென்று வானோர்
மூர்த்தி யாகிய§ முதலவன் றன்னைச்
செந்நெ லார்வயல் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 7

பரிந்த சுற்றமும் மற்றுவன் றுணையும்
பலரும் கண்டழு தெழஉயிர் உடலைப்
பிரிந்து போமிது நிச்சயம் அறிந்தாற்
பேதை வாழ்வெனும் பிணக்கினைத் தவிர்ந்து
கருந்த டங்கண்ணி பங்கனை உயிரைக்
கால காலனைக் கடவுளை விரும்பிச்
செருந்தி பொன்மலர் திருத்தினை நகருட்
சிவக்கோ ழுந்தினைச் சென்றடை மனனே. 8

நமைஎ லாம்பலர் இகழ்ந்துரைப் பதன்முன்
நன்மை ஒன்றிலாத் தேரர்புன் சமணும்
சமய மாகிய தவத்தினார் அவத்தத்
தன்மை விட்டொழி நன்மையை வேண்டில்

6. பொக்கம் – வஞ்சனை; பொய்யுமாம். பாந்தள் – பாம்பு. கடல் சூர் தடிந்திட்ட சேந்தர் தாதை – கடலிலே புக்கு ஒளித்த சூரனைக் கொன்ற முருகவேளுக்குத்தந்தை

7. ஆசு அறு–பற்றுக்கோடு அற்ற. † 'பின்னுவார் சடை'; § 'மூர்த்தியாமெய்' என்றும் பாடம்.

உமையொர் கூறனை ஏறுகந் தானை
உம்பர் ஆதியை எம்பெரு மானைச்
சிமய மார்பொழில் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைச் சென்றடை மனனே. 9

நீடு பொக்கையிற் பிறவியைப் பழித்து
நீங்க லாம்என்று மனத்தினைத் தெருட்டிச்
சேடு லாம்பொழில் திருத்தினை நகருட்
சிவக்கொ ழுந்தினைத்† திருவடி யிணைதான்
நாடெ லாம்‡புகழ் நாவலூ ராளி
நம்பி வன்றொண்ட னூரன் உரைத்த
பாட லாந்தமிழ் பத்திவை வல்லார்
முத்தி யாவது பரகதிப் பயனே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: திருநந்தீசுவரர்; அம்பிகை: இளங்கொம்பன்னாள்.

---

## 4. திருவதிகைத்திருவீரட்டானம்
## பண்: கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

தம்மானை அறியாத சாதியார் உளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவின் உரியானைக் கரிகாட்டில் ஆடல்
உடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்

---

9. அவத்தத் தன்மை – பொய்யாகிய இயல்பு. உம்பர் ஆதியை – தேவர்களுக்குள் முதல்வனை. சிமயம் – உச்சி.

10. பொக்கையிற் பிறவி – பூர்ணத் தன்மையின்றி நிலையாமையையுடைய பிறவி; பொக்கை – ஓடிந்தது. தெருட்டி – தெளியச் செய்து. சேடு-பெருமை. † 'சிவக்கொழுந்தின'; ‡ 'நாடலாம்' என்றும் பாடம்.

தெம்மான்றன் அடிக்கொண்டென் முடிமேல்வைத் திடும்
ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன் [என்னும்
எம்மானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 1

முன்னேயெம் பெருமானை மறந்தென்கொல் மறவா
தொழிந்தென்கொல் மறவாத சிந்தையால் வாழ்வேன்
பொன்னேநன் மணியேவெண் முத்தேசெம் பவளக்
குன்றமே ஈசனென் றுன்னையே புகழ்வேன்
அன்னேயென் அத்தாஎன் றமரரால் அமரப்
படுவானை அதிகைமா நகருள்வாழ் பவனை
என்னேயென் எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 2

விரும்பினேற் கெனதுள்ளம் விடகிலா† விதியே
விண்ணவர்தம் பெருமானே மண்ணவர்நின் றேத்தும்
கரும்பேயென் கட்டிஎன் றுள்ளத்தால் உள்கிக்
காதல்சேர் மாதராள் கங்கையாள் நங்கை
வரும்புனலுஞ் சடைக்கணிந்து வளராத பிறையும்
வரிஅரவும் உடன்துயில வைத்தருளும்‡ எந்தை
இரும்புனல்வந் தெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 3

நாற்றானத் தொருவனை நானாய பரனை
நள்ளாற்று நம்பியை வெள்ளாற்று விதியைக்
காற்றானைத் தீயானைக் கடலானை மலையின்
தலையானைக் கடுங்கலுழிக் கங்கைநீர் வெள்ள

---

1. இறைபோதும்-கணமேனும்.
2. அமரப்படுவானை-விரும்பப்படுபவனை.
3. † 'விடகிலா'; ‡ 'வைத்தாளும்' என்றும் பாடம்.
4. கலுழி-வெள்ளம்.

ஆற்றானைப் பிறையானை அம்மானை எம்மான்
தமமானை யாவர்க்கும் அறிவரிய செங்கண்
ஏற்றானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 4

சேந்தர்தாய் மலைமங்கை திருநிறமும் பரிவும்
உடையானை அதிகைமா நகருள்வாழ் பவனைக்
கூந்தல்தாழ் புனல்மங்கை குயில்அன்ன மொழியாள்
சடையிடையிற் கயலினங்கள் குதிகொள்ளக் குலாவி
வாய்ந்தநீர் வரவுந்தி மராமரங்கள் வணக்கி
மறிகடலை இடங்கொள்வான் மலையாரம் வாரி
ஏந்துநீர் எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 5

மைம்மான மணிநீல கண்டத்தெம் பெருமான்
வல்லேனக் கொம்பணிந்த மாதவனை வானோர்
தம்மானைத் தலைமகனைத் தண்மதியும் பாம்பும்
தடுமாறுஞ் சடையானைத் தாழ்வரைக்கை வென்ற
வெம்மான* மதகரியின் உரியானை வேத
விதியானை வெண்ணீறு சண்ணித்த மேனி
எம்மானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 6

வெய்தாய வினைக்கடலில் தடுமாறும் உயிர்க்கு
மிகஇரங்கி அருள்புரிந்து வீடுபே றாக்கம்
பெய்தானைப் பிஞ்ஞகனை மைஞ்ஞவிலுங் கண்டத்
தெண்டோள்எம் பெருமானைப் பெண்பாகம் ஒருபால்

---

5. சேந்தர் – முருகவேள். புனல் மங்கை – கங்கை. மலை ஆரம்–மலையிலே விளைந்த சந்தனம்.

6. ஏனக் கொம்பு – காட்டுப் பன்றியின் கொம்பு. சண்ணித்த–பூசிய. * 'வெம்மானை' என்றும் பாடம்.

செய்தானைச் செக்கர்வான் ஒளியானைத் தீவாய்
அரவாடு சடையானைத் திரிபுரங்கள் வேவ
எய்தானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 7

பொன்னானை மயிலூர்தி முருகவேள் தாதை
பொடியாடு திருமேனி நெடுமாறன் முடிமேல்
தென்னானைக் குடபாலின் வடபாலின் குணபாற்
சேராத சிந்தையான் செக்கர்வான் அந்தி
அன்னானை அமரர்கள்தம் பெருமானைக் கருமானின்
உரியானை அதிகைமா நகருள்வாழ் பவனை
என்னானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 8

திருந்தாத வாளவுணர் புரமூன்றும் வேவச்
சிலைவளைவித் தொருகணையால் தொழில்பூண்ட சிவனைக்
கருந்தாள மதகளிற்றின் உரியானைப் பெரிய
கண்மூன்றும் உடையானைக் கருதாத அரக்கன்
பெருந்தோள்கள் நாலைந்தும் ஈரைந்து முடியும்
உடையானைப் பேயுருவ மூன்றுமுற மலைமேல்
இருந்தானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 9

என்பினையே கலனாக அணிந்தானை எங்கள்
எருதேறும் பெருமானை இசைஞானி சிறுவன்
வன்பனைய வளர்பொழில்சூழ் வயல்நாவ லூர்க்கோன்
வன்றொண்டன் ஆரூரன் மதியாது சொன்ன

---

8. நெடுமாறன் முடிமேல் தென்னானை – பாண்டியன் முடியை ஏற்றுத் தென்னாட்டை ஆண்டவனை.

9. திருந்தாத – அறநெறியிலே செல்லாத; பகைத்த எனலும் ஆம். தொழில் பூண்ட – வில்தொழிலை மேற்கொண்ட.

அன்பனை யாவர்க்கும் அறிவரிய அத்தர்
பெருமானை அதிகைமா நகருள்வாழ் பவனை
என்பொன்னை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோது மிகழ்வன்போ லியானே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அதிகை வீரட்ட நாதர்

அம்பிகை: அதிகைநாயகி

**வரலாறு:** சிதம்பரத்தை நோக்கிச் சென்ற நம்பியாரூரர் இடையே பல தலங்களைத் தரிசித்துத் திருவதிகைக்கு அருகே வருகையில், அப்பர் சுவாமிகள் தொண்டு புரிந்த பதியென்று அதனை மிதிக்க அஞ்சி அதற்குள் புகுதாமல் அதன் புறத்தே இருந்த சித்தவடமடம் புகுந்து இளைப்பாறித் துயின்றார். அப்போது திருவதிகை வீரட்டானமுடைய பெருமான் முதிய அந்தணர் வேடங்கொண்டு அந்த மடத்தில் புகுந்து சுந்தரர் தலைமீது கால்படும்படி படுத்துக்கொண்டிருந்தார். ஆளுடைய நம்பிகள், "என் தலைமேல் கால் வைத்தீரே" என்று கேட்க, "மூப்பு மிகுதியால் ஒன்றும் தெரியவில்லை" என்றார். நம்பிகள் வேறு திசையில் தலை வைத்துத் துயில, அங்கும் திருமுடிமேல் அவர் திருத்தாள் நீட்டப் "பல தடவையும் என் தலைமேல் கால் வைத்த நீர் யார்?" என்று கேட்கச் சிவபெருமான், "அறிந்திலையோ?" எனச் சொல்லி மறைந்தருளினார். சுந்தரர், "சிவபெருமான் திருவருளையறியாமல் என் செய்தேன்!" என இரங்கி இத்திருப்பதிகத்தைப் பாடியருளினார். [**பெரிய புராணம்,** தடுத்தாட்கொண்ட புராணம், 82–88.]

---

10. கலன் – ஆபரணம்.

## 5. திருநாவலூர் — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

கோவலன் நான்முகன் வானவர் கோனுங்குற்றேவல்செய்ய
மேவலர் முப்புரம் தீயெழு வித்தவன் ஓரம்பினால்
ஏவல னார்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனைஆளுங்கொண்ட
நாவல னார்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. 1

தன்மையி னாலடி யேனைத்தாம் ஆட்கொண்ட நாட்சவைமுன்
வன்மைகள் பேசிட வன்றொண்டன் என்பதோர் வாழ்வுதந்தார்
புன்மைகள் பேசவும் பொன்னைத்தந் தென்னைப்போ கம்புணர்த்த
நன்மையி னார்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. 2

வேகங்கொண் டோடிய வெள்விடை ஏறியோர் மெல்லியலை
ஆகங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை
ஆளுங்கொண்டார்
போகங்கொண்டார்கடற்கோடியின்மோடியைப்பூண்பதாக
நாகங்கொண் டார்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. 3

அஞ்சுங்கொண்டாடுவராவினிற்†சேவினை ஆட்சிகொண்டார்
தஞ்சங்கொண் டாரடிச் சண்டியைத் தாமென வைத்துகந்தார்
நெஞ்சங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை
ஆளுங்கொண்டு
நஞ்சங்கொண் டார்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. 4

உம்பரார்கோனைத்திண் தோள்முரித் தாருரித்தார்களிற்றைச்
செம்பொனார் தீவண்ணர் தூவண்ண நீற்றர்ஓர் ஆவணத்தா

---

1. கோவலன் – திருமால். மேவலர் – பகைவர்.
3. கடற்கோடி – கோடிக்கரை. மோடி – துர்க்கை. மோடியைப் போகங்கொண்டார்.
4. அஞ்சு – ஆனைந்தாகிய பஞ்சகவ்வியம். † 'ராவினைச்' என்றும் பாடம், சண்டி–சண்டீச நாயனார்.

லெம்பிரா ஞர்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளுங்
நம்பிரா ஞர்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. [கொண்ட

கோட்டங்கொண்டார்குடமூக்கிலுங்கோவலுங் கோத்திட்டையும்
வேட்டங்கொண் டார்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை†
ஆளுங்கொண்டார்
ஆட்டங்கொண் டார்தில்லைச் சிற்றம்பலத்தே அருக்கனைமுன்
நாட்டங்கொண் டார்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. 6

தாயவ ளாய்த்தந்தை ஆகிச் சாதல் பிறத்தலின்றிப்
போயகலாமைத்தன் பொன்னடிக் கென்னைப் பொருந்தவைத்த
வேயவ ஞர்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளுங்கொண்ட
நாயக ஞர்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. 7

வாயாடி மாமறை ஓதிஓர் வேதியன் ஆகிவந்து
தீயாடி யார்சினக் கேழலின் பின்சென்ருேர் வேடுவனாய்
வேயாடி யார்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளுங்
நாயாடி யார்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. [கொண்ட

படமாடு பாம்பணை யானுக்கும் பாவைநல் லாள்தனக்கும்
வடமாடு மால்விடை ஏற்றுக்கும் பாகனாய் வந்தொருநாள்
இடமாடி யார்வெண்ணெய் நல்லூரில் வைத்தெனை ஆளுங்
நடமாடி யார்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. [கொண்ட

மிடுக்குண்டென் ருேடிஓர் வெற்பெடுத் தான்வலி யைநெரித்தார்
அடக்கங்கொண் டாவணங் காட்டிநல் வெண்ணெயூர் ஆளுங்
கொண்டார்
தடுக்கஒண் ணாததோர் வேழத் தினைஉரித் திட்டுமையை
நடுக்கங்கண் டார்க்கிடம் ஆவது நந்திரு நாவலூரே. 10

---

5. தோள் முரித்தது தக்கனது யாகத்தில்.

6. கோட்டம் – கோயில். முன் – தக்க யாக சங்காரம் செய்தபோது. † 'வைத்தென்னை' என்றும் பாடம்; இப்பதிக முழுதும் கொள்க. 9. பாகன் – கணவன்; ஊர்பவன்.

நாதனுக் கூர்நமக் கூர்நர சிங்க முனையரையன்
ஆதரித் தீசனுக் காட்செயும் ஊர்அணி நாவலூரென்
றோதநற் றக்கவன் றொண்டன்ஆ ரூரன் உரைத்ததமிழ்
காதலித் துங்கற்றுங் கேட்பவர் தம்வினைக்‡ கட்டறுமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: நாவலேசுவரர்; அம்பிகை: சுந்தராம்பிகை.

**வரலாறு:** இறைவரால் ஆட்கொள்ளப் பெற்றவுடன் "பித்தாபிறை சூடி" என்ற திருப்பதிகம் பாடி, அப்பால் திருநாவலூர் சென்று தரிசித்துப் பாடிய பதிகம் இது. [**பெரிய புராணம்,** தடுத்தாட்கொண்டபுராணம், 78.]

---

## 6. திருமுதுகுன்றம் — பண்: நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

பொன்செய்த மேனியினீர் புலித் தோலை அரைக்கசைத்தீர்
முன்செய்த மூவெயிலும் மெரித் தீர்முது குன்றமர்ந்தீர்
மின்செய்த நுண்ணிடையாள் பரவையிவள் தன்முகப்பே
என்செய்த வாறடிகேள் அடி யேன்இட் டளங்கெடவே. 1

உம்பரும் வானவரும் முட னேநிற்க வேயெனக்குச்
செம்பொனைத் தந்தருளித் திக ழும்முது குன்றமர்ந்தீர்
வம்பம ருங்குழலாள் பர வையிவள் வாடுகின்றாள்
எம்பெரு மான்அருளீர் அடி யேன்இட் டளங்கெடவே. 2

பத்தா பத்தர்களுக் கருள் செய்யும் பரம்பரனே
முத்தா முக்கணனே முது குன்றம் அமர்ந்தவனே

---

11. நரசிங்க முனையரையன் – சுந்தரமூர்த்தி சுவாமிகளை வளர்த்த மன்னன். ‡ 'தம் வினை' என்றும் பாடம்.

1. முகப்பு – முன்னிலையில். இட்டளம் – வருத்தம்.

2. வம்பு – நறுமணம்.

மைத்தா ருந்தடங்கண் பர வையிவள் வாடாமே
அத்தா தந்தருளாய் அடி யேன்இட் டளங்கெடவே. 3

மங்கையொர் கூறமர்ந்தீர் மறை நான்கும் விரித்துகந்தீர்*
திங்கள் சடைக்கணிந்தீர் திக ழும்முது குன்றமர்ந்தீர்
கொங்கைநல் லாள்பரவை குணங் கொண்டிருந் தாள்முகப்பே
அங்கண னேயருளாய் அடி யேன்இட் டளங்கெடவே. 4

மையா ரும்மிடற்ருய் மரு வார்புரம் மூன்றெரித்த
செய்யார் மேனியனே திக ழும்முது குன்றமர்ந்தாய்
பையா ரும்மரவே ரல்கு லாள்இவள் வாடுகின்ருள்
ஐயா தந்தருளாய் அடி யேன்இட் டளங்கெடவே. 5

நெடியான் நான்முகனும் இர வியொடும் இந்திரனும்
முடியால் வந்திறைஞ்ச முது குன்றம் அமர்ந்தவனே
படியா ரும்மியலாள் பர வையிவள் தன்முகப்பே
அடிகேள் தந்தருளீர்† அடி யேன்இட் டளங்கெடவே. 6

கொந்தண வும்பொழில்சூழ் குளிர் மாமதில் மாளிகைமேல்
வந்தண வும்மதிசேர் சடை மாமுது குன்றுடையாய்
பந்தண வும்விரலாள் பர வையிவள் தன்முகப்பே
அந்தண னேயருளாய் அடி யேன்இட் டளங்கெடவே. 7

பரசா ருங்கரவா பதி னெண்கண முஞ்சூழ
முரசார் வந்ததிர முது குன்றம் அமர்ந்தவனே
விரைசே ருங்குழலாள் பர வையிவள் தன்முகப்பே
அரசே தந்தருளாய் அடி யேன்இட் டளங்கெடவே. 8

---

4. * 'விரித்துரைத்தீர்' என்றும் பாடம்.

6. படி ஆரும் இயலாள் – பூமியைப் போன்ற பொறை யுடையாள்; அழகுடையாருக்கெல்லாம் உவமமாக நீற்கும் இயல்புடையாள் எனலும் ஆம். † 'தந்தருளாய்' என்றும்பாடம்.

7. கொந்து – பூங்கொத்து.

8. பரசு ஆரும் கரவா–மழுவைக்கொண்ட திருக்கரத்தை உடையவனே. 10. இறை – தலைமை.

*எத்தா திருந்தறியேன் இமை யோர்தனி நாயகனே*
*மூத்தாய் உலகுக்கெல்லாம் முது குன்றம் அமர்ந்தவனே*
*பூத்தா ருங்குழலாள் பர வையிவள் தன்முகப்பே*
*கூத்தா தந்தருளாய் கொடி யேன்இட் டளங்கெடவே.* 9

*பிறையா ருஞ்சடைஎம் பெருமான் அருளாய்என்று*
*முறையால் வந்தமரர் வணங் கும்முது குன்றர்தம்மை*
*மறையார் தங்குரிசில் வயல் நாவலா ரூரன்சொன்ன*
*இறையார் பாடல்வல்லார்க் கெளி தாஞ்சிவ லோகமதே.*10

திருச்சிற்றம்பலம்

**வரலாறு:** *திருமுதுகுன்றில் இறைவர் திருவருளால் பெற்ற பொன்னை அத்தலத்தில் திருமணி முத்தாற்றில் இட்டு, அப்பால் திருவாரூருக்கு வந்து பரவையாருடன் சென்று திருக்குளத்தில் தேடும்போது, அப்பொன் முதலில் கிடைக்கவில்லை. முன்னே முதுகுன்றில் வேண்டிக்கொண்டபடி கிடைக்கவில்லையே என்ற வருத்தத்தோடு இந்தப் பதிகத்தைத் தொடங்கி எட்டுப் பாடல் பாடியருளவும், பொன் கிடைக்கவில்லை. அப்பால் மிக வருந்தி, "ஏத்தா திருந்தறியேன்" என்ற திருப்பாடலை அருளவும் சிவபெருமான் திருவருளால் பொன் திரள் கிடைத்தது.* [**பெரிய புராணம்**, *ஏயர்கோன், 127-135.*]

---

## பண் : கொல்லிக் கௌவாணம்

*திருச்சிற்றம்பலம்*

*நஞ்சி யிடையின்று நாளைஎன் றும்மை நச்சுவார்*
*துஞ்சி யிட்டாற்பின் னைச்செய்வ தென்னடி கேள்சொலீர்*
*பஞ்சி யிடப்புட் டில் கீறு மோபணி யீர்அருள்*
*முஞ்சி யிடைச்சங்க மார்க்குஞ் சீர்முது குன்றரே.* 1

---

*1. நஞ்சி-நைந்து. பஞ்சி-பஞ்சு. முஞ்சி-முற்றம்.*

ஏரிக் கனகக் கமல மலர்அன்ன சேவடி
ஊரித் தனையுந் திரிந்தக் காலவை நோங்கொலோ
வாரிக் கட்சென்று வளைக்கப் பட்டு வருந்திப்போய்
மூரிக் களிறு முழக்க றுமுது குன்றரே. 2

தொண்டர்கள் பாட விண்ணோர்கள் ஏத்த உழிதர்வீர்
பண்டகந் தோறும் பலிக்குச் செல்வதும் பான்மையே
கண்டகர் வாளிகள் வில்லி கள்புறங் காக்குஞ்சீர்
மொண்டகை வேள்வி முழக்க றுமுது குன்றரே. 3

இளைப்பறி யீர்இம்மை ஏத்துவார்க் கம்மை செய்வதென்
விளைப்பறி யாதவெங் காலனைஉயிர் வீட்டினீர்
அளைப்பிரி யாஅர வல்கு லாளொடு கங்கைசேர்
முளைப்பி றைச்சென் னிச்சடை முடிமுது குன்றரே. 4

ஆடி அசைந்தடி யாரும் நீரும் அகந்தொறும்
பாடிப் படைத்த பொருள்எ லாம்உமை யாளுக்கோ
மாட மதிலணி கோபு ரம்மணி மண்டபம்
மூடி முகில்தவழ் சோலை சூழ்முது குன்றரே. 5

இழைவளர் நுண்ணிடை மங்கை யோடிடு காட்டிடைக்
குழைவளர் காதுகள் மோத நின்று குனிப்பதே
மழைவள ருந்நெடுங் கோட்டி டைமத யானைகள்
முழைவளர் ஆளி முழக்க றுமுது குன்றரே. 6

---

2. வாரி–யானையைப் படுக்கும் இடம்.

3. உழிதர்வீர்–திரிவீர். பண்டு அகந்தோறும். கண்டகர்–கொடியவர். மொண்டு அகை வேள்வி – நெய்யை முகந்து தீ வளர்க்கும் யாகம்; அகைந்தல்–கொழுந்துவிடச் செய்தல்.

4. அளை – வளையை.

6. குனிப்பதே–ஆடுவது தக்கதா? முழை–குகை.

சென்றி லிடைச்செடி நாய்கு ரைக்கச் சேடிச்சிகள்*
மன்றி லிடைப்பலி தேரப் போவது வாழ்க்கையே
குன்றி லிடைக்களி றாளி கொள்ளக் குறத்திகள்
முன்றி லிடைப்பிடி கன்றி டும்முது குன்றரே. 7

அந்தி திரிந்தடி யாரும் நீரும் அகந்தொறும்
சந்திகள் தோறும் பலிக்குச் செல்வது தக்கதே
மந்தி கடுவனுக் குண்பழம் நாடி மலைப்புறம்
முந்தி அடிதொழ நின்ற சீர்முது குன்றரே. 8

செட்டிநின் காதலி ஊர்கள் தோறும் அறஞ்செய
அட்டு மின்சில் பலிக்கென் றகங்கடை நிற்பதே§
பட்டிவெள் ளேறுகந் தேறு வீர்பரி சென்கொலோ
முட்டி அடிதொழ நின்ற சீர்முது குன்றரே. 9

எத்திசை யுந்திரிந் தேற்றக் காற்பிறர் என்சொலார்
பத்திமை யால்இடு வாரி டைப்பலி கொள்மினோ
எத்திசை யுந்திரை ஏற மோதிக் கரைகள்மேல்
முத்திமுத் தாறு வலஞ்செ யும்முது குன்றரே. 10

முத்திமுத் தாறு வலஞ்செ யும்முது குன்றரைப்
பித்தனைப் பான்அடித் தொண்ட னூரன் பிதற்றிவை
தத்துவ ஞானிகள் ஆயி னார்தடு மாற்றிலார்
எத்தவத் தோர்களும் ஏத்து வார்க்கிடர் இல்லையே. 11

திருச்சிற்றம்பலம்

---

7. செடி–நாற்றம். சேடிச்சிகள் மன்றிலிடை–பணிசெய் வதற்குரிய பெண்கள் உள்ள பொதுவிடத்தில். * 'செடிச் சிலே'; 'செடிச்சிகள்' என்றும் பாடம். குன்றாகிய இல்லிடையே. கன்றிடும்–வருந்தும்.

8. மந்தி–பெண் குரங்கு. கடுவன்–ஆண் குரங்கு.

9. செட்டி–செட்டாக இருப்பவள். அகம் கடை – வீட்டு வாயிலில். § 'நிற்பதென்' என்றும் பாடம். முட்டி–முயன்று.

10. ஏற்றக்கால்–பிச்சை வாங்கினால். முத்தி–மோதி.

## நம்பி* என்ற திருப்பதிகம் — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

மெய்யைமுற் றப்பொடிப் பூசியோர் நம்பி
வேதம்நான் கும்விரித் தோதியோர் நம்பி
கையில்ஓர் வெண்மழு வேந்தியோர் நம்பி
கண்ணு மூன்றுமுடை யாயொரு நம்பி§
செய்ய நம்பிசிறு செஞ்சடை நம்பி
திரிபுரந் தீயெழச் செற்றதோர் வில்லால்
எய்த நம்பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 1

திங்கள் நம்பிமுடி மேல்அடி யார்¶பாற்
சிறந்த நம்பிபிறந் தஉயிர்க் கெல்லாம்
அங்கண் நம்பியருள் மால்விசும் பாளும்
அமரர் நம்பிகும ரன்முதல் தேவர்
தங்கள் நம்பிதவத் துக்கொரு நம்பி
தாதை என்றுன் சரண்பணிந்† தேத்தும்
எங்கள் நம்பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 2

வருந்த அன்றுமத யானை உரித்த
வழக்கு நம்பிமுழக் குங்கடல் நஞ்சம்
அருந்தும் நம்பிஅம ரர்க்கமு தீந்த
அருளெ னம்பி‡பொரு ளால்வரு நட்டம்

---

* 'நம்பீ' என்றும் பாடம்.

1. பொடி–திருநீறு. நம்பி–புருஷோத்தமனே. § 'கண்ணு மூன்றுடை யாரொரு நம்பி' என்றும் பாடம்.

2. ¶ 'அணியார்'; † 'என்று சரணம் பணிந்' என்றும் பாடம்.

புரிந்த நம்பிபுரி நூலுடை நம்பி
பொழுதும் விண்ணும்முழு தும்பல வாகி
இருந்த நம்பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 3

ஊறு நம்பிஅமு தாஉயிர்க் கெல்லாம்
உரிய நம்பிதெரி யம்மறை அங்கம்
கூறு நம்பிமுனி வர்க்கருங் கூற்றைக்
குமைத்த நம்பிகுமை யாப்புலன் ஐந்தும்
சீறு நம்பிதிரு வெள்ளடை நம்பி
செங்கண்வெள் ளைச்செழுங் கோட்டெரு தென்றும்
ஏறு நம்பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 4

குற்ற நம்பிகுறு கார்எயில் மூன்றைக்
குலைத்த நம்பிசிலை யாவரை கையில்
பற்று நம்பிபர மானந்த வெள்ளம்
பணிக்கும் நம்பிஎனப் பாடுத லல்லால்
மற்று நம்பிஉனக் கென்செய வல்லேன்
மதியி லேன்படு வெந்துயர் எல்லாம்
எற்று நம்பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 5

அரித்த நம்பிஅடி கைதொழு வார்நோய்
ஆண்ட நம்பிமுன்னை ஈண்டுல கங்கள்
தெரித்த நம்பிஒரு சேவுடை நம்பி
சில்பலிக் கென்றகந் தோறுமெய் வேடம்

3. அருளையுடைய என் நம்பி. § 'அருளுநம்பி' என்றும் பாடம். பொருளால் வரு நட்டம் புரிந்த-குறிப்பாகிய பொருளோடு வந்த நடனத்தைச் செய்த.

4. அமுதா ஊறும் நம்பி. குமைத்த – அழித்த. திருவெள்ளடை: குருகாவூரில் உள்ள பெருமானது திருநாமம்.

தரித்த நம்பிசம யங்களின் நம்பி
தக்கன் றன் வேள்விபுக் கன்றிமை யோரை
இரித்த நம்பிஎன்னை ஆளுடை நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 6

பின்னை நம்பும்புயத் தான்நெடு மாலும்
பிரமனும் என்றிவர் நாடியுங் காணு
உன்னை நம்பிஒரு வர்க்கெய்த லாமே
உலகு நம்பிஉரை செய்யும தல்லால்
முன்னை நம்பிபின்னும் வார்சடை நம்பி
முழுதிவை இத்தனை யுந்தொகுத் தாண்ட
தென்னை நம்பிஎம் பிரானுய நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 7

சொல்லை நம்பிபொரு ளாய்நின்ற நம்பி
தோற்றம் ஈறுமுத லாகிய நம்பி
வல்லை நம்பிஅடி யார்க்கருள் செய்ய
வருந்தி நம்பிஉனக் காட்செய கில்லார்
அல்லல் நம்பிபடு கின்றதென் நாடி
அணங்கொரு பாகம்வைத் தெண்கணம் போற்ற
இல்ல நம்பியிடு பிச்சைகொள் நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 8

காண்டு நம்பிகழற் சேவடி என்றும்
கலந்துனைக் காதலித் தாட்செய்கிற் பாரை
ஆண்டு நம்பியவர் முன்கதி சேர†
அருளும் நம்பிகுரு மாப்பிறை பாம்பைத்

6. நோயை அரித்த நம்பி; அரித்த – அழித்த. சே – இடபம். இரித்த–ஓடச் செய்த.

7. பின்னை-திருமகள். நம்பும்–விரும்பும்.

8. சொல்லை – சொல்லாகியிருக்கின்றாய்.

தீண்டு நம்பிசென்னி யிற்கன்னி¶ தங்கத்
திருத்து§ நம்பிபொய்ச் சமண்பொரு ளாகி
ஈண்டு நம்பிஇமை யோர்தொழு நம்பி
எழுபிறப் பும்எங்கள் நம்பிகண் டாயே. 9

கரக்கும்‡ நம்பிகசி யாதவர் தம்மைக்
கசிந்த வர்க்கிம்மையோ டம்மையில் இன்பம்
பெருக்கு நம்பிபெரு கக்கருத்தா................ 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பழமலைநாதர்; அம்பிகை: பெரியநாயகியம்மை.

---

## 7. திருவிடையாறு* — பண்: கொல்லி

திருச்சிற்றம்பலம்

முந்தையூர் முதுகுன்றங் குரங்கணின் முட்டம்
சிந்தையூர் நன்றுசென் றடைவான் திருவாரூர்
பந்தையூர் பழையாறு பழனம் பைஞ்ஞீலி
எந்தையூர் எய்தமான் இடையா றிடைமருதே.

சுற்றுமூர் சுழியல் திருச்சோ புரந்தொண்டர்
ஒற்றுமூர் ஒற்றியூர் திருவூரல் ஒழியாப்
பெற்றம்ஏறி* பெண்பாதி இடம்பெண்ணைத் தெண்ணீர்
எற்றும்ஊர் எய்தமான் இடையா றிடைமருதே. 2

---

9. குரு – நிறத்தை உடைய, † 'நம்பிபரமுன்கதிச்சேர'; 'கண்ணி'; 'கங்கை'; § 'திருந்து' என்றும் பாடம்.

10. கசியாதவர்–அன்பினால் உருகாதவர். ‡ 'கரத்தி' என்றும் பாடம்.

* 'திருவிடையாற்றுத் தொகை' என்றும் பாடம்.

2. * 'ஊர்தி' என்றும் பாடம். பெற்றம் ஏறி, பெண்பாதி: பெயர்.

கடங்களூர் திருக்காரிக் கரைகயி லாயம்
விடங்களூர் திருவெண்ணி அண்ணா மலைவெய்ய
படங்களூர் கின்றபாம் பரையான் பரஞ்சோதி
இடங்கொளூர் எய்தமான் இடையா றிடைமருதே. 3

கச்சையூர் காவங் கழுக்குன்றங் காரோணம்
பிச்சையூர் திரிவான் கடவூர் வடபேறூர்
கச்சியூர் கச்சிசிக் கல்நெய்த்தா னம்மிழலை
இச்சையூர் எய்தமான் இடையா றிடைமருதே. 4

நிறையனூர் நின்றியூர் கொடுங்குன்றம் அமர்ந்த
பிறையனூர் பெருமூர் பெரும்பற்றப் புலியூர்
மறையனூர் மறைக்காடு வலஞ்சுழி வாய்த்த
இறையனூர் எய்தமான் இடையா றிடைமருதே. 5

திங்களூர் திருவா திரையான் பட்டினமூர்
நங்களூர் நறையூர் நனிநா லிசைநாலூர்§
தங்களூர் தமிழான் என்றுபார் விக்கவல்ல
எங்களூர் எய்தமான் இடையா றிடைமருதே. 6

கருக்கநஞ் சமுதுண்ட கல்லாலன் கொல்ஏற்றன்
தருக்கருக் கனைச்செற் றுகந்தான்தன் முடிமேல்
எருக்கநாண் மலரிண் டையும்மத்த முஞ்சூடி
இருக்குமூர் எய்தமான் இடையா றிடைமருதே. 7

தேசனூர் வினைதேய நின்றான் திருவாக்கூர்
பாசனூர் பரமேட்டி பவித்திர பாவ
நாசனூர் நனிபள்ளி நள்ளாற்றை அமர்ந்த
ஈசனூர் எய்தமான் இடையா றிடைமருதே. 8

---

6. திருவாதிரையான் – சிவபெருமான். § 'நாவலூர்' என்றும் பாடம்.

7. தருக்கு அருக்கனை – கர்வமடைந்த சூரியனை. மத்தம் – ஊமத்தை. 8. தேசன் – சோதிவடிவானவன்.

பேறனார் பிறைச்சென் னியினான் பெருவேளூர்
தேறனார் திருமா மகள்கோன் திருமாலோர்
கூறனார் குரங்காடு துறைதிருக் கோவல்
ஏறனார் எய்தமான் இடையா றிடைமருதே. 9

ஊறிவா யினநாடிய வன்றொண்டன் ஊரன்
தேறுவார் சிந்தை தேறுமிடஞ் செங்கண்வெள்ளே
றேறுவார் எய்தமான் இடையா றிடைமருதைக்
கூறுவார் வினைஎவ் விடமெய் குளிர்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: இடையாற்றுநாதர்; அம்பிகை: சிற்றிடைநாயகி.

---

## 8. திருவெண்ணெய்நல்லூர் — பண் : இந்தளம்

திருச்சிற்றம்பலம்

பித்தாபிறை சூடீபெரு மானேஅரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
அத்தாஉனக் காளாயினி அல்லேனெனல் ஆமே. [டுறையுள்

நாயேன்பல நாளும்நினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாவருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட்
ஆயாஉனக் காளாயினி அல்லேனெனல் ஆமே. [டுறையுள்

10. ‡ 'ஊறிவாயன' என்றும் பாடம்.

1. எத்தான் – எதனாலும். அருட்டுறை: திருவெண்ணெய் நல்லூர்த் திருக்கோயில்.

2. எய்த்தேன் – இளைத்தேன். வேய் – மூங்கில்.

மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி ரம்மேபொரு துந்தி [டுறையுள்
மின்னார் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட்
அன்னேஉனக் காளாய்இனி அல்லேன்எனல் ஆமே. 3

முடியேன்இனிப் பிறவேன்பெறின் மூவேன்பெற்றம் ஊர்தீ
கொடியேன்பல பொய்யேஉரைப் பேனைக்குறிக் கொள்நீ
செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட்
அடிகேளுனக் காளாயினி அல்லேன்எனல்ஆமே.[டுறையுள்

பாதம்பணி வார்கள்பெறும் பண்டம்மது பணியாய்
ஆதன்பொருள் ஆனேன்அறி வில்லேன்அரு ளாளா
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட்
ஆதீஉனக் காளாய்இனி அல்லேன்எனல் ஆமே. [டுறையுள்

தண்ணார்மதி சூடீதழல் போலுந்திரு மேனீ
எண்ணார்புரம் மூன்றும்எரி உண்ணநகை செய்தாய்
மண்ணார் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட்
அண்ணாஉனக்காளாயினி அல்லேன்எனல் ஆமே.[டுறையுள்

ஊனாய்உயிர் ஆனாய்உடல் ஆனாய்உல கானாய்
வானாய்நிலன் ஆனாய்கடல் ஆனாய்மலை ஆனாய் [டுறையுள்
தேனார் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர்அருட்
ஆனாய்உனக் காளாய்இனி அல்லேன்எனல் ஆமே. 7

ஏற்றார்புரம் மூன்றும்எரி உண்ணச்சிலை தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி வேனோசெக்கர் வானீர்

---

4. மூவேன் – மூப்பை அடையேன். பெற்றம் – இடபம்.
5. ஆதன்–அறிவில்லாதவன்; நகையாடுவதற்குரியவன்.
6. எண்ணார் – பகைவர்.
7. ஆனாய் – இடபவாகனக் கடவுளே.

எற்றாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூர் அருட்
ஆற்றாயுனக்* காளாயினி அல்லேனெனல் ஆமே.[டுறையுள்

மழுவாள்வலன் ஏந்தீமறை ஓதீமங்கை பங்கா
தொழுவார்அவர் துயர்ஆயின தீர்த்தல்உன தொழிலே
செழுவார் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
அழகாஉனக் காளாயினி அல்லேனெனல் ஆமே.[டுறையுள்

காரூர்புனல் எய்திக்கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புகழ் எய்தித்திகழ் பன்மாமணி உந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையு
ளாரூரனெம் பெருமாற்காள் அல்லேனெனல் ஆமே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: தடுத்தாட்கொண்ட நாதர்

அம்பிகை: வேற்கண்மங்கையம்மை

**வரலாறு :** சிவபெருமான் சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட போது அவர் கட்டளைப்படியே "பித்தா" எனத் தொடங்கிச் சொற்றமிழ் பாடப் புகுந்தார். இது சுந்தரரது முதல் திருப் பதிகம். [பெரிய புராணம், தடுத்தாட் கொண்ட புராணம், 74.]

---

## 9. திருத்துறையூர் — பண் : தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

மலையார் அருவித் திரள்மா மணிஉந்திக்
குலையாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
கலையார் அல்குற்கன் னியர்ஆடும் துறையூர்த்
தலைவா உனைவேண்டிக் கோள்வேன் தவநெறியே. 1

---

8. எற்றாள்-எதிர்த்தவர். *'ஆற்றாவுனக்' என்றும் பாடம்.
1. குலை - கரை.

மத்தம் மதயா னையின்வெண் மருப்புந்தி
முத்தங் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
பத்தர் பயின்றேத்திப் பரவும் துறையூர்
அத்தா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 2

கந்தங் கமழ்கா ரகில்சந் தனம்உந்திச்
செந்தண் புனல்வந் திழிபெண்ணை வடபால்
மந்தி பலமா நடமாடுந் துறையூர்
எந்தாய் உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 3

அரும்பார்ந் தனமல் லிகைசண் பகஞ்சாடிச்
சுரும்பாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
கரும்பார் மொழிக்கன் னியர்ஆடுந் துறையூர்
விரும்பா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 4

பாடார்ந் தனமாவும் பலாக்க ளும்சாடி
நாடார வந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
மாடார்ந் தனமா ளிகைசூழுந் துறையூர்
வேடா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 5

மட்டார் மலர்க்கொன் றையும்வன்னி யுஞ்சாடி
மொட்டாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
கோட்டாட் டோடுபாட் டோலிஓவாத் துறையூர்ச்
சிட்டா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 6

மாதார் மயிற்பீ லியும்வெண் ணுரைஉந்தித்
தாதாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்

---

4. விரும்பா – விரும்பப்படுபவனே.

5. மாடு – செல்வம்.

6. கொட்டு ஆட்டொடு பாட்டு – வாத்திய நிருத்த கீதம். கொட்டு என்பது உபலட்சணத்தால் கருவியிசை பலவற்றையும் குறித்தது. சிட்டா – உத்தமனே.

போதார்ந்தன பொய்கைகள் சூழுந் துறையூர்
நாதா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 7

கொய்யாமலர்க் கோங்கொடு வேங்கையுஞ் சாடிச்
செய்யாரக் கொணர்ந்தெற்றி யோர்பெண்ணை வடபால்
மையார் தடங்*கண் ணியர்ஆடும் துறையூர்
ஐயா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 8

விண்ணார்ந்தன மேகங்கள் நின்று பொழிய
மண்ணாரக் கொணர்ந்தெற்றி ஓர்பெண்ணை வடபால்
பண்ணார்மொழிப் பாவையர் ஆடும் துறையூர்
அண்ணா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 9

மாவாய்ப் பிளந்தானும் மலர்மிசை யானும்
ஆவா அவர்தேடித் திரிந்தல மந்தார்
பூவார்ந்தன பொய்கைகள் சூழுந் துறையூர்த்
தேவா உனைவேண்டிக் கொள்வேன் தவநெறியே. 10

செய்யார் கமலம் மலர்நாவ லூர்‡மன்னன்
கையால் தொழுதேத்தப் படுந்துறை யூர்மேல்
பொய்யாத் தமிழ்ஊரன் உரைத்தன வல்லார்
மெய்யே பெறுவார்கள் தவநெறி தானே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: துறையூர்நாதர்; அம்பிகை: பூங்கோதைநாயகி.

**வரலாறு:** இறைவரால் ஆட்கொள்ளப்பெற்ற சுந்தரர் திருவெண்ணெய்நல்லூரைப் பாடிப் பின் திருநாவலூர் தரிசித்துப் பாடி, அப்பால் திருத்துறையூரைத் தரிசித்துப் 'பவநெறிக்கு விலக்காகும்' இப்பதிகத்தைப் பாடியருளினர். [**பெரிய புராணம்**, தடுத்தாட்கொண்ட புராணம், 79.]

---

8. செய் ஆர–வயல்கள் நிரம்ப. * 'நெடுங்' என்றும் பாடம்.
9. மாவாய்ப் பிளந்தானும் – குதிரையின் வாயைப் பிளந்த திருமாலும். ஆவா – அந்தோ.
11. ‡ 'மலர் நாவலர்' என்றும் பாடம்.

## 10. திருவாமாத்தூர் — பண் : கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

காண்டனன் காண்டனன் காரிகை யாள்தன் கருத்தனாய்
ஆண்டனன் ஆண்டனன் ஆமாத் தூர்எம் அடிகட்காட்
பூண்டனன் பூண்டனன் பொய்யன்று சொல்லுவன்
கேண்மின்கள்
மீண்டனன் மீண்டனன் வேதவித் தல்லா தவர்கட்கே. 1

பாடுவன் பாடுவன் பார்ப்பதி தன்னடி பற்றிநான்
தேடுவன் தேடுவன் திண்ணெனப் பற்றிச் செறிதர
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூர்எம் அடிகளைக்
கூடுவன் கூடுவன் குற்றம தற்றென் குறிப்பொடே. 2

காய்ந்தவன் காய்ந்தவன் கண்ணழ லால்அன்று காமனைப்
பாய்ந்தவன் பாய்ந்தவன் பாதத்தி னால்அன்று கூற்றத்தை
ஆய்ந்தவன் ஆய்ந்தவன் ஆமாத் தூர்எம் அடிகளார்
ஏய்ந்தவன் ஏய்ந்தவன் எம்பி ராட்டியைப் பாகமே. 3

ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள் ளேநின்ற ஒண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருவொற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்றோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத் தூர்ஐயன் அருளதே. 4

வென்றவன் வென்றவன் வேள்வியில் விண்ணவர் தங்களைச்
சென்றவன் சென்றவன் சில்பலிக் கென்று தெருவிடை
நின்றவன் நின்றவன் நீதி நிறைந்தவர் தங்கள்பால்
அன்றவன் அன்றவன் செய்யருள் ஆமாத்தூர் ஐயனே. 5

---

1. காண்டனன் — கண்டேன், கண்டனன் என்பதன் விகாரம். அல்லாதவர்களிடமிருந்து மீண்டனன்.

காண்டவன் காண்டவன் காண்டற் கரிய கடவுளாய்
நீண்டவன் நீண்டவன் நாரணன் நான்முகன் நேடவே
ஆண்டவன் ஆண்டவன் ஆமாத் தூரையும் எனையும்ஆட்
பூண்டவன் பூண்டவன் மார்பிற் புரிநூல் புரளவே. 6

எண்ணவன் எண்ணவன் ஏழுல கத்துயிர் தங்கட்குக்
கண்ணவன் கண்ணவன் காண்டும்என் பாரவர் தங்கட்குப்
பெண்ணவன்பெண்ணவன்மேனியோர்பாகமாம் பிஞ்ஞகன்
அண்ணவன் அண்ணவன் ஆமாத் தூர்எம் அடிகளே. 7

பொன்னவன்பொன்னவன்பொன்னைத்தந்தென்னைப்போக
மின்னவன்மின்னவன்வேதத்தினுட்பொருளாகிய [விடா
அன்னவன் அன்னவன் ஆமாத்தூர் ஐயனை ஆர்வத்தால்
என்னவன் என்னவன் என்மனத் தின்புற் றிருப்பனே. 8

தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூர்எம் அடிகளே.* 9

உற்றனன் உற்றவர் தம்மை ஒழிந்துள்ளத் துள்பொருள்
பற்றினன் பற்றினன் பங்கயச் சேவடிக் கேசெல்ல
அற்றண னற்றனன் ஆமாத்தூர் மேயா னடியார்கட்காள்
பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும்†
பிறவாமைக்கே. 10

---

6. காண்டவன்–யாவற்றையும் கண்டவன். நேட–தேட.

7. காண்டும் – பார்ப்போம்.

9. * 'அடிகட்கே' என்றும் பாடம்.

10. பிறவாமையின் பொருட்டுப் பெற்றேன். † 'பேர்த்தும் பேர்த்தும்' என்றும் பாடம்.

ஐயனை அத்தனை ஆளுடை ஆமாத்தூர் அண்ணலை
மெய்யனை மெய்யர்க்கு மெய்ப்பொரு ளான விமலனை
மையனை மையணி கண்டனை வன்றொண்டன் ஊரன்சொல்
பொய்யொன்று மின்றிப் புலம்புவார் பொற்கழல் சேர்வரே.

திருச்சிற்றம்பலம்

சுவாமி: அழகியநாதர்; அம்பிகை: அழகியநாயகியம்மை.

---

## (9) தொண்டை நாட்டிலுள்ள தலங்கள்

### 1. திருக்கச்சி ஏகம்பம் — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

ஆலந் தான்உகந் தமுதுசெய் தானை
ஆதி யைஅம ரர்தொழு தேத்தும்
சீலந் தான்பெரி தும்முடை யானைச்
சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
ஏல வார்குழ லாள்உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கால காலனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 1

உற்ற வர்க்குத வும்பெரு மானை
ஊர்வ தொன்றுடை யான்உம்பர் கோனைப்
பற்றி னார்க்கென்றும் பற்றவன் றன்னைப்
பாவிப் பார்மனம் பாவிக்கொண் டானை

---

1. அமுது செய்தானை – உண்டவனை, ஏலம் – நறுமணம். கம்பன் – ஏகம்பன்.

அற்ற மில்புக ழாள்உமை நங்கை
ஆத ரித்து வழிபடப் பெற்ற
கற்றை வார்சடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 2

திரியும் முப்புரம் தீப்பிழம் பாகச்
செங்கண் மால்விடை மேற்றிகழ் வானைக்
கரியின் ஈருரி போர்த்துகந் தானைக்
காம னைக்கன ல்லாவிழித் தானை
வரிகொள் வெள்வளை யாள்உமை நங்கை
மருவி ஏத்தி வழிபடப் பெற்ற
பெரிய கம்பனை எங்கள்பி ரானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 3

குண்ட லந்திகழ் கா துடை யானைக்
கூற்று தைத்த கொடுந்தொழி லானை
வண்ட லம்புமலர்க் கொன்றையி னானை
வாள ராமதி சேர்சடை யானைக்
கெண்டை யந்தடங் கண்ணுமை நங்கை
கெழுமி ஏத்தி வழிபடப் பெற்ற
கண்டம் நஞ்சுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 4

வெல்லும் வெண்மழு ஒன்றுடை யானை
வேலை நஞ்சுண்ட வித்தகன் றன்னை
அல்லல் தீர்த்தருள் செய்யவல் லானை
அரும றையவை அங்கம்வல் லானை

2. உற்றவர்க்கு – துன்பம் அடைந்தவர்களுக்கு. பாவிக் கொண்டானை – பரவியவனே. அற்றம் – சோர்வு.

3. திரியும் – வானிலே பறந்து திரிந்த. திரிபுரசங்கார காலத்தில் திருமால் இடபமாக வந்து தாங்கினர் என்பது புராண வரலாறு. பெரிய கம்பன் – ஏகாம்பரநாதர்.

எல்லை யில்புக ழாள்உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
நல்ல கம்பனை எங்கள்பி ரானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 5

திங்கள் தங்கிய சடையுடை யானைத்
தேவ தேவனைச் செழுங்கடல் வளரும்
சங்க வெண்குழைக் காதுடை யானைச்
சாம வேதம் பெரிதுகப் பானை
மங்கை நங்கை மலைமகள் கண்டு
மருவி ஏத்தி வழிபடப் பெற்ற
கங்கை யாளனைக் கம்பனெம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 6

விண்ண வர்தொழு தேத்தநின் றானை
வேதந் தான்விரித் தோதவல் லானை
நண்ணி னார்க்கென்றும் நல்லவன் றன்னை
நாளும் நாம்உகக் கின்றபி ரானை
எண்ணில் தொல்புக ழாள்உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
கண்ணும் மூன்றுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 7

சிந்தித் தேன்றும் நினைந்தெழு வார்கள்
சிந்தை யில்திக ழுஞ்சிவன் றன்னைப்
பந்தித் தவினைப் பற்றறுப் பானைப்
பாலொ டானஞ்சும் ஆட்டுகந் தானை

5. நல்ல கம்பன் – உருத்திரராற் பூசிக்கப்பெற்ற மூர்த்தி.
8. பந்தித்த – கட்டிய. பாலொடு ஆன் அஞ்சும் ஆட்டு உகந்தானை – தனிப் பாலபிடேகத்தோடு பஞ்சகவ்விய அபிடேகமும் ஏற்றுக்கொண்டவனை. கந்தம் – வாசனை.

அந்த மில்புக ழாள்உமை நங்கை
ஆத ரித்து வழிபடப் பெற்ற
கந்த வார்சடைக் கம்பன்எம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 8

வரங்கள் பெற்றுழல் வாளரக் கர்தம்
வாலி யபுரம் மூன்றெரித் தானை
நிரம்பிய தக்கன் றன்பெரு வேள்வி
நிரந்த ரஞ்செய்த நிட்கண் டகனைப்
பரந்த தொல்புக ழாள்உமை நங்கை
பரவி ஏத்தி வழிபடப் பெற்ற
கரங்கள் எட்டுடைக் கம்பன்எம் மானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 9

எள்கல் இன்றி இமையவர் கோனை
ஈச னைவழி பாடுசெய் வாள்போல்
உள்ளத் துள்கி உகந்துமை நங்கை
வழிபடச் சென்று நின்றவா கண்டு
வெள்ளங் காட்டி வெருட்டிட அஞ்சி*
வெருவி ஓடித் தழுவ வெளிப்பட்ட
கள்ளக் கம்பனை எங்கள் பிரானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற வாறே. 10

பெற்றம் ஏறுகந் தேறவல் லானைப்
பெரிய எம்பெரு மான்என்றெப் போதும்
கற்ற வர்பர வப்படு வானைக்
காணக் கண்அடி யேன்பெற்ற தென்று

---

9. வாலிய – வெள்ளிய; அறிவற்றோர்க்குரிய. **நிரந்தரஞ் செய்த** – அழித்த. நிட்கண்டகன் – கடுமையுடையவன்.

10. எள்கல் – இழிவு செய்தல். * 'வஞ்சி' எனினும் ஆம். **கள்ளக்கம்பன்** – திருமால் பூசித்த மூர்த்தி.

கொற்ற வன்கம்பன் கூத்தன்எம் மானைக்
குளிர்பொ ழில்திரு நாவலா ரூரன்
நற்றமிழ் இவைஈ ரைந்தும் வல்லார்
நன்னெ றிஉல கெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: ஏகாம்பரநாதர்; அம்பிகை: காமாட்சியம்மை.

**வரலாறு:** திருவொற்றியூரை விட்டுப் புறப்பட்ட சுந்தர மூர்த்தி சுவாமிகள் சங்கிலியார்க் களித்த உறுதி மொழியை மீறி னமையால் இரண்டு கண்ணையும் இழந்து, பலதலங்களுக்குச் சென்று பணிந்து காஞ்சிபுரம் வந்தார்; அங்கே திருவேகம்பமுடை யானை வணங்கி வேண்டியபோது, அப்பெருமான் திருவருளால் இடக்கண் பார்வை மாத்திரம் கிடைக்க,உடனே இப்பதிகத்தைப் பாடியருளினார். [**பெரிய புராணம்,** ஏயர்கோன், 286–288.]

---

## 2. திருக்கச்சிமேற்றளி — பண் : நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

நொந்தா ஒண்சுடரே நுனையே நினைந்திருந்தேன்
வந்தாய் போயறியாய் மனமே புகுந்துநின்ற
சிந்தாய் எந்தைபிரான் திருமேற் றளிஉறையும்
எந்தாய் உன்னையல்லால் இனிஏத்த மாட்டேனே. 1

ஆட்டான் பட்டமையால் அடியார்க்குத் தொண்டுபட்டுக்
கேட்டேன் கேட்பதெலாம் பிறவாமை‡ கேட்டொழிந்தேன்
சேட்டார் மாளிகைசூழ் திருமேற் றளியுறையும்
மாட்டே உன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. 2

---

11. பெற்றமாகிய ஏற்றை.

1. நொந்தா – தூண்டாத. நுனையே – உன்னையே. சிந்தாய்–சிந்தையாகி யிருப்பவனே.

2. சேடு–பெருமை. ‡ 'பிறவாவகை' என்றும் பாடம்.

மோரூந் தோரொருகால் நினையா திருந்தாலும்
வேரூ வந்தென் னுள்ளம் புகவல்ல மெய்ப்பொருளே
சேரூர் தண்கழனித் திருமேற் றளிஉறையும்
ஏறே உன்னையல்லால் இனிஏத்த மாட்டேனே. 3

உற்றூர் சுற்றமெனும் அதுவிட்டு நுன்னடைந்தேன்
எற்றால் என்குறைவென் இடரைத் துறந்தொழிந்தேன்
செற்றூய் மும்மதிலுந் திருமேற் றளிஉறையும்
பற்றே நுன்னை அல்லால் பணிந்தேத்த மாட்டேனே. 4

எம்மான் எம்மனையென் றவரிட் டிறந்தொழிந்தார்
மெய்ம்மால் ஆயினதீர்த் தருள்செய்யும் மெய்ப்பொருளே
கைம்மா வீருரியாய் கனமேற் றளியுறையும்
பெம்மான் உன்னையல்லால் பெரிதேத்த மாட்டேனே. 5

நானேல் உன்னடியே நினைந்தேன் நினைதலுமே
ஊனேர் இவ்வுடலம் புகுந்தாயென் ஒண்சுடரே
தேனே இன்னமுதே திருமேற் றளியுறையும்
கோனே உன்னை யல்லால் குளிர்ந்தேத்த மாட்டேனே. 6

கையார் வெஞ்சிலைநா ணதன்மேற் சரங்கோத்தே
எய்தாய் மும்மதிலும் எரிஉண்ண எம்பெருமான்
செய்யார் பைங்கமலத் திருமேற் றளியுறையும்
ஐயா உன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே. 7

விரையார் கொன்றையினாய் விமலா இனி உன்னையல்லால்
உரையேன் ஆவதனால் உடலில்லுயிர் உள்ளளவும்
திரையார் தண்கழனித் திருமேற் றளியுறையும்
அரையா உன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே. 8

---

3. மோரூந்து—செருக்குற்று.

5. எம்மான்—எம் தந்தை. எம் அனை—எம் தாய். இட்டு—என்னை இவ்வுலகில் விட்டு. மால்—மயக்கம்.

நிலையாய் நின்னடியே நினைந்தேன் நினைத்துமே
தலைவா நின்னினையப் பணித்தாய் சலமொழிந்தேன்
சிலையார் மாமதில்சூழ் திருமேற் றளியுறையும்
மலையே உன்னையல்லால் மகிழ்ந்தேத்த மாட்டேனே. 9

பாரூர் பல்லவனூர் மதிற்காஞ்சி மாநகர்வாய்ச்
சீரூ ரும்புறவில் திருமேற் றளிச்சிவனை
ஆரூ ரன்னடியான் அடித்தொண்டன் ஆ ரூரன்சொன்ன
சீரூர் பாடல்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி : திருமேற்றளி நாயகர்

அம்பிகை : காமாட்சி அம்மை

---

## 3. திருவோணகாந்தன் தளி — பண் : இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நெய்யும் பாலுந் தயிருங் கொண்டு
நித்தல்* பூசனை செய்ய லுற்றார்
கையி லொன்றும் காண மில்லைக்
கழல டிதொழு துய்யின் அல்லால்
ஐவர் கொண்டிங் காட்ட ஆடி
ஆழ்கு ழிப்பட் டழுந்து வேனுக்
குய்யு மாறென் றருளிச் செய்யீர்
ஓண காந்தன் தளியு ளீரே. 1

---

9. சலம்–தீய செயல்.

1. * 'நித்தம்' என்றும் பாடம். காணம் – பொன். பொன் வேண்டிப் பாடிய பாடல் ஆதலின், தம் கையில் காணம் இல்லை என்றார். ஐவர் – ஐம்பொறிகள். ஆட்ட – அலைக்க.

திங்கள் தங்கு சடைக்கண்† மேலோர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கை யாளேல் வாய்தி றவாள்
கணப தியேல் வயிறு தாரி
அங்கை வேலோன் குமரன் பிள்ளை
தேவி யார்கொற் றட்டி யாளார்*
உங்க ளுக்காட் செய்ய மாட்டோம்
ஓண காந்தன் தளியு ளீரே. 2

பெற்ற போழ்தும் பெறாத போழ்தும்
பேணி யுங்கழல் ஏத்து வார்கள்
மற்றோர் பற்றிலர் என்றி ரங்கி
மதியு டையவர் செய்கை செய்வீர்§
அற்ற போழ்தும் அலந்த‡ போழ்தும்
ஆபற் காலத்¶ தடிகேள் உம்மை
ஒற்றி வைத்திங் குண்ண லாமோ
ஓண காந்தன் தளியு ளீரே. 3

வல்ல தெல்லாம் சொல்லி உம்மை
வாழ்த்தி னாலும் வாய்தி றந்தொன்
றில்லை என்னீர் உண்டும் என்னீர்
எம்மை ஆள்வான் இருப்ப தென்னீர்†

---

2. † 'சடையின்' என்றும் பாடம். வயிறு உதாரி – வயிற்றுக்கு உண்ணும் திறத்தில் உதார குணம் உடையவன். கொற்று அட்டி ஆளார்–கூலி கொடுத்து ஆட்கொள்ளமாட்டார். * 'கோல் தட்டியாளால்' என்றும் பாடம்; யாழ் வாசிப்பவர் என்பது பொருள்.

3. § 'செய்யீர்'; ‡ 'அலர்ந்த'; ¶ 'ஆவற் காலத்' என்றும் பாடம்.

பல்லை யுக்க படுத லையிற்
பகல்எ லாம்போய்ப் பலிதி ரிந்திங்
கொல்லை வாழ்க்கை ஒழிய மாட்டீர்
ஓண காந்தன் தளியு ளீரே. 4

கூடிக் கூடித் தொண்டர் தங்கள்
கொண்ட பாணி குறைப டாமே
ஆடிப் பாடி அழுது நெக்கங்
கன்பு டையவர்க் கின்பம் ஓரீர்
தேடித் தேடித் திரிந்தெய்த் தாலும்
சித்தம் என்பால் வைக்க மாட்டீர்
ஓடிப் போகீர் பற்றுந் தாரீர்
ஓண காந்தன் தளியு ளீரே. 5

வாரி ருங்குழல் வாள்நெ டுங்கண்
மலைம கள்மது விம்மு கொன்றைத்
தாரி ருந்தட மார்பு நீங்காத்
தைய லாள்உல குய்ய வைத்த
காரி ரும்பொழிற் கச்சி மூதூர்க்
காமக் கோட்டம்உண் டாக நீர்போய்
ஊரி டும்பிச்சை கொள்வ தென்னே
ஓண காந்தன் தளியு ளீரே. 6

பொய்ம்மை யாலே போது போக்கிப்
புறத்தும் இல்லை அகத்தும் இல்லை
மெய்ம்மை சொல்லி ஆள மாட்டீர்
மேலை நாள்ஒன் றிடவுங் கில்லீர்

---

4. † 'இருப்பதே நீர்' என்றும் பாடம். படுதலை – இறந்து பட்ட தலை; கபாலம். 5. எய்த்தாலும் – இளைப்புற்றாலும்.

6. காமக்கோட்டம் உண்டாக என்றது முப்பத்திரண்டறமும் வளர்த்து அம்பிகை உறைவதை நினைத்தபடி.

எம்மைப் பெற்றால் ஏதும் வேண்டார்
ஏதுந் தாரீர் ஏதும் ஓதீர்*
உம்மை என்றே எம்பெ ருமான்
ஓண காந்தன் தளியு ளீரே. 7

வலையம் வைத்த கூற்ற மீவான்
வந்து நின்ற வார்த்தை கேட்டுச்
சிலைஅ மைத்த சிந்தை யாலே
திருவ டிதொழு துய்யின் அல்லால்
கலைஅ மைத்த காமச் செற்றக்
குரோத லோப மதவ ருடை
உலைஅ மைத்திங் கொன்ற மாட்டேன்
ஓண காந்தன் தளியு ளீரே. 8

வார மாகித் திருவ டிக்குப்
பணிசெய் தொண்டர் பெறுவ தென்னே
ஆரம் பாம்பு வாழ்வ தாரூர்
ஒற்றி யூரேல் உம்ம தன்று
தார மாகக் கங்கை யாளைச்
சடையில் வைத்த அடிகேள் உந்தம்
ஊரும் காடு உடையும் தோலே
ஓண காந்தன் தளியு ளீரே. 9

ஓவ ணமேல் எருதொன் றேறும்
ஓண காந்தன் தளியு ளார்தாம்
ஆவ ணஞ்செய் தாளுங் கொண்டு
வரைது கிலொடு பட்டு வீக்கிக்

---

7. பொய்ம்மையாலே போது போக்கி: "பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும் புழுத்தலைப் புலையனேன்" **(திருவாசகம்.)** * 'ஓரீர்' என்றும் பாடம்.

8. வலையம் – பூமி. 9. வாரம் – அன்பு.

17.

கோவ ணமேற் கொண்ட வேடம்
கோவை யாகஆ ரூரன் சொன்ன
பாவ ணத்தமிழ் பத்தும் வல்லார்
பறையுந் தாஞ்செய்த பாவந் தானே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: ஓணகாந்தீசுவரர்; அம்பிகை: காமாட்சியம்மை.

**வரலாறு:** காஞ்சிபுரத்தில் உள்ள திருக்கோயில்களைத் தரிசித்துப் பின் சுந்தரர் ஓணகாந்தன்தளி வந்து தரிசித்து இப்பதிகம் பாடிச், சிவபெருமான் பொன் முதலியன அருளப் பெற்றார். [**பெரிய புராணம்**, ஏயர்கோன், *191.*]

## 4. திருக்கச்சி அனேகதங்காவதம் — பண் : இந்தளம்

திருச்சிற்றம்பலம்

தேனெய் புரிந்துழல் செஞ்சடை எம்பெரு
மான திடம்திகழ் ஐங்கணையக்*
கோனை எரித்தெரி யாடி இடங்குல
வான திடம்குறை யாமறையாம்
மானை இடத்ததொர் கையன் இடம்மதம்
மாறு படப்பொழி யும்மலைபோல்†
யானை உரித்தபி ரான திடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 1

கூறு நடைக்குழி கட்பகு வாயன
பேய்உகந் தாடநின் றோரியிட
வேறு படக்குட கத்திலை யம்பல
வாணன் நின்றாடல் விரும்பும்இடம்

---

*10.* ஓவணம் ஏல்—ஓங்காரத்தின் உருவத்தைப்பெற்ற. ஆவணம் செய்து—முறியோலை எழுதிப் பெற்று. பறையும் – தேயும்.

*1.* தேனெய் புரிந்து – தேனையும் நெய்யையும் விரும்பி; தேனெய் – தேனும் **ஆம்.** ஐங்கணை அக்கோன் – காமன். * 'ஐங்கணைய'; † 'மலைமேல்' என்றும் பாடம்.

ஏறு விடைக்கொடி எம்பெரு மான்இமை
யோர்பெரு மான்உமை யாள்கணவன்
ஆறு சடைக்குடை அப்பன் இடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 2

கொடிக ளிடைக்குயில் கூவும் இடம்மயில்
ஆலும் இடம்மழு வாளுடைய
கடிகொள் புனற்சடை கொண்ட நுதற்கறைக்
கண்டன் இடம்பிறைத் துண்டமுடிச்
செடிகொள் வினைப்பகை தீரும் இடந்திரு
வாகும்§ இடம்திரு மார்பகலத்
தடிகள் இடம்மழல் வண்ணன் இடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 3

கொங்கு நுழைத்தன வண்டறை கொன்றையும்
கங்கையுந் திங்களுஞ் சூடுசடை
மங்குல் நுழைமலை மங்கையை நங்கையைப்
பங்கினில் தங்க உவந்தருள்செய்
சங்குகு ழைச்செவி கொண்டரு வித்திரள்
பாய வியர்த்தழல் போலுடைத்தம்
அங்கை மழுத்திகழ் கையன் இடம்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 4

பைத்த படத்தலை ஆடர வம்பயில்
கின்ற இடம்பயி லப்புகுவார்
சித்தம் ஒருநெறி வைத்த இடம்திகழ்
கின்ற இடந்திரு வாணடிக்கே

---

2. கூறுநடை – குறுகக் குறுக அடியிடும் நடை. ஓரி-நரி.
3. திரு–அம்பிகை. § 'வாரும்' என்றும் பாடம்.
4. மங்குல்–மேகம்.

வைத்த மனத்தவர் பத்தர் மனங்கொள
வைத்த இடம்மழு வாளுடைய
அத்தன் இடம்மழல் வண்ணன் இடம்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 5

தண்ட முடைத்தரு மன்தமர் என்தம
ரைச்செயும் வன்துயர் தீர்க்குமிடம்
பிண்ட முடைப்பிற வித்தலை நின்று
நினைப்பவர் ஆக்கையை நீக்கும்இடம்
கண்ட முடைக்கரு நஞ்சை நுகர்ந்த¶
பிரான திடங்கடல் ஏழுகடந்
தண்ட முடைப்பெரு மான திடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 6

கட்டு மயக்கம் அறுத்தவர் கைதொழு
தேத்தும் இடம்கதி ரோன்ஒளியால்
விட்டும் இடம்*விடை ஊர்தி இடம்குயிற்
பேடைதன் சேவலொ டாடும்இடம்
மட்டு மயங்கி அவிழ்ந்த மலர்ஒரு
மாதவி யோடு மணம்புணரும்
அட்ட புயங்கப் பிரான திடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 7

புல்லி இடந்தொழு துய்தும் என்றுதவர்
தம்புர மூன்றும் பொடிபடுத்த
வில்லி இடம்விர வாதுயிர் உண்ணும்வெங்
காலனைக் கால்கொடு வீந்தவியக்

---

6. தருமன்–யமன். ¶ 'நஞ்சுகரந்த' என்றும் பாடம்.

7. கட்டு மயக்கம்–பாசத்தினால் வந்த அறியாமையை.

* 'விட்ட விடம்' என்றும் பாடம்.

கொல்லி இடங்குளிர் மாதவி மவ்வல்
குராவகு ளங்குருக் கத்திபுன்னை
அல்லி யிடைப்பெடை வண்டுறங் கும்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 8

சங்கை யவர்புணர் தற்கரி யான்தள
வேனகை யாள்தவி ராமிகுசீர்
மங்கைய வள்மகி ழச்சுடு காட்டிடை
நட்டம் நின்றாடிய சங்கரன்எம்*
அங்கையி‡ னல்லனல் ஏந்து மவன்கனல்
சேரொளி அன்னதொர் பேரகலத்
தங்கைய வன்னுறை கின்ற இடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே. 9

வீடு பெறப்பல ஊழிகள் நின்று
நினைக்கும் இடம்வினை தீரும்இடம்
பீடு பெறப்பெரி யோர திடங்கொண்டு
மேவினர் தங்களைக் காக்கும்இடம்§
பாடும் இடத்தடி யான்புகழ் ஊரன்
உரைத்த இம்மாலைகள் பத்தும்வல்லார்
கூடும் இடம்சிவ லோகன் இடங்கலிக்
கச்சி அனேகதங் காவதமே, 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: காவதேசுவரர்; அம்பிகை: காமாட்சியம்மை.

---

9. சங்கையவர் – ஐயப்பாடுடையவர். தளவு ஏல் நகை – முல்லையைப் போன்ற பற்களையுடைய. * 'சங்கரனே'; ‡ 'அங்கைய' என்றும் பாடம்.

10. § 'பீடு பெறப்பெரி யோன திடம்கலிக் கச்சி அநேகதங் காப்பனிடம்' என்றும் பாடம்,

## 5. திருவன்பார்த்தான் பனங்காட்டூர் — பண் : சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
அடையில்அன் புடையானை யாவர்க்கும் அறியொண்ணா*
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங்கை தரித்தானைச் சாராதார் சார்பென்னே.‡ 1

அறையும்பைங் கழல்ஆர்ப்ப அரவாட அனல்ஏந்திப்
பிறையுங்கங் கையுஞ்சூடிப் பெயர்ந்தாடும் பெருமானார்
பறையுஞ்சங் கொலிஓவாப் படிறன்றன் பனங்காட்டூர்
உறையும்எங்கள் பிரானை† உணராதார் உணர்வென்னே. 2

தண்ணார்மா மதிசூடித் தழல்போலுந் திருமேனிக்
கெண்ணார்நாள் மலர்கொண்டங் கிசைந்தேத்து மடியார்கள்
பண்ணார்பா டல்அறாத படிறன்றன் பனங்காட்டூர்ப்
பெண்ணாண யபிரானைப் பேசாதார் பேச்சென்னே. 3

நெற்றிக்கண் ணுடையானை நீறேறுந் திருமேனிக்
குற்றமில் குணத்தானைக் கோணாதார் மனத்தானைப்
பற்றிப்பாம் பரைஆர்த்த படிறன்றன் பனங்காட்டூர்ப்
பெற்றொன்றே றும்பிரானைப் பேசாதார் பேச்சென்னே. 4

உரமென்னும் பொருளானை உருகில்உள் ளுறைவானைச்
சிரமென்னுங் கலனானைச் செங்கண்மால் விடையானை
வரம்முன்னமருள்செய்வான்வன்பார்த்தான்பனங்காட்டூர்ப்
பரமன்எங் கள்பிரானைப் பரவாதார் பரவென்னே. 5

---

1. அடையில்–முடிவடையாத. * 'அறிவொண்ணா'; ‡ 'சார் வென்னே' என்றும் பாடம்.
2. அறையும்–ஒலிக்கும். † 'பிரானாரை' என்றும் பாடம்.
3. பெண்ணும் ஆணும் ஆகிய பிரானை.
4. கோணாதார் – நேர்மையுடையார். பெற்று – இடபம்.
5. உரம்–அறிவு. கலன்–பாத்திரம். வரம் அருள் செய்வான்.

எயிலார்பொக் கம்எரித்த எண்டோள்முக் கண்இறைவன்
வெயிலாய்க்காற் றெனவீசி மின்னாய்த்தீ எனநின்றான்
மயிலார்சோ லைகள்சூழ்ந்த வன்பார்த்தான் பனங்காட்டூர்ப்
பயில்வானுக் கடிமைக்கட் பயிலாதார் பயில்வென்னே. 6

மெய்யன்வெண் பொடிபூசும்† விகிர்தன்வே தமுதல்வன்
கையில்மான் மழுவேந்திக் காலன்கா லம்அறுத்தான்
பைகொள்பாம் பரைஆர்த்த படிறன்றன் பனங்காட்டூர்
ஐயன்எங் கள்பிரானை அறியாதார் அறிவென்னே. 7

வஞ்சமற்ற மனத்தாரை மறவாத பிறப்பிலியைப்
பஞ்சிச்சீ றடியாளைப் பாகம்வைத் துகந்தானை
மஞ்சுற்ற மணிமாட வன்பார்த்தான் பனங்காட்டூர்
நெஞ்சத்தெங் கள்பிரானை நினையாதார் நினைவென்னே. 8

மழையானுந் திகழ்கின்ற மலரோன்என் றிருவர்தாம்
உழையாநின் றவர்உள்க உயர்வானத் துயர்வானைப்
பழையானைப் பனங்காட்டூர் பதியாகத் திகழ்கின்ற
குழைகாதற் கடிமைக்கட் குழையாதார் குழைவென்னே. 9

பாரூரும் பனங்காட்டூர்ப் பவளத்தின் படியானைச்
சீரூருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் னடித்தொண்டன் னடியன்சொல் லடிநாய்சொல்
ஊரூரன் னுரைசெய்வார் உயர்வானத் துயர்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பனங்காட்டுநாதர்; அம்பிகை: அமிர்தவல்லி.

---

7. † 'பொடிப்பூசி' என்றும் பாடம். காலன் காலம் அறுத்தான் – யமனால் கணக்குப் பண்ணும் மார்க்கண்டேயனது ஆயுட் கால முடிவை நீக்கினவன்.

9. மழையானும் – மேகத்தைப்போன்ற நிறத்தையுடைய திருமாலும். உழையாநின்றவர் – பக்கத்தில் நின்றவர்கள்.

10. பவளத்தின் படியானை – பவளத்தைப்போன்ற சிவந்த திருவுருவம் உடையானை. ஊரூரன் – ஊர்தோறும்.

## 6. திருவாலங்காடு — பண் : பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென் முலையா ளுமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டும் சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும் பரமா பழைய னூர்மேய
அத்தா ஆலங் காடாஉன் அடியார்க் கடியேன் ஆவேனே. 1

பொய்யே செய்து புறம்புறமே திரிவேன் றன்னைப் போகாமே
மெய்யேவந்திங்கெனைஆண்டமெய்யாமெய்யர்மெய்ப்பொருளே
பையா டரவம் அரைக்கசைத்த பரமா பழைய னூர்மேய
ஐயா ஆலங் காடாஉன் அடியார்க் கடியேன் ஆவேனே. 2

தூண்டாவிளக்கின் நற்சோதீ தொழுவார்தங்கள் துயர்தீர்ப்பாய்
பூண்டாய்எலும்பைப்புரமூன் றும்பொடியாச்செற்றபுண்ணியனே
பாண்டாழ் வினைக ளவைதீர்க்கும் பரமா பழைய னூர்மேய
ஆண்டா ஆலங் காடாஉன்அடியார்க் கடியே னாவேனே. 3

மறிநேர் ஒண்கண் மடநல்லார் வலையிற் பட்டு மதிமயங்கி
அறிவே அழிந்தே னையாநான் மையார் கண்ட முடையானே
பறியா வினைக ளவைதீர்க்கும் பரமா பழைய னூர்மேய
அறிவே ஆலங் காடாஉன் அடியார்க் கடியே னாவேனே. 4

வேலங் காடு தடங்கண்ணார் வலையுட் பட்டுன் நெறிமறந்து
மாலங் காடி மறந்தொழிந்தேன் மணியே முத்தே மரகதமே

---

1. முத்தா – பாசத்தினின்றும் இயல்பாகவே விடுபட்டவனே. முகிழ்–அரும்பு போன்ற.

2. புறம்புறமே திரிவேன்தன்னை – உன்னை அணுகாமல் அப்பால் திரிகின்ற என்னை, பை-படத்தை உடைய.

3. பாண் தாழ்–இழிவையுடைய; பாண்–தாழ்வு.

பாலங் காடீ நெய்யாடீ படர்புன் சடையாய் பழையனூர்
ஆலங் காடா உன்னுடைய அடியார்க் கடியே னாவேனே.5

எண்ணார் தங்கள் எயில்எய்த எந்தாய் எந்தை பெருமானே
கண்ணாய் உலகங் காக்கின்ற கருத்தா திருத்த லாகாதாய்
பண்ணா ரிசைக ளவை§கொண்டு பலரும் ஏத்தும் பழையனூ
ரண்ணா ஆலங் காடாஉன் அடியார்க் கடியே னாவேனே. 6

வண்டார் குழலி உமைநங்கை பங்கா கங்கை மணவாளா
விண்டார் புரங்கள் எரிசெய்த விடையாய் வேதநெறியானே
பண்டாழ் வினைகள் பலதீர்க்கும் பரமா பழைய னூர்மேய
அண்டா ஆலங் காடாஉன் அடியார்க் கடியே னாவேனே. 7

பேழ்வா யரவி னணையானும் பெரிய மலர்மே லுறைவானும்
தாழா துன்றன் சரண்பணியத் தழலாய் நின்ற தத்துவனே
பாழாம் வினைக ளவைதீர்க்கும் பரமா பழைய னூர்தன்னை
ஆள்வாய் ஆலங் காடாஉன் அடியார்க் கடியே னாவேனே.8

எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ் படிகால்எமைஆண்ட
பெம்மான் ஈமப் புறங்காட்டிற் பேயோ டாடல் புரிவானே
பன்மா மலர்க ளவைகொண்டு பலரும் ஏத்தும் பழையனூர்
அம்மா ஆலங் காடாஉன் அடியார்க் கடியேன் ஆவேனே.9

---

5. வேல் அங்கு ஆடு தடங்கண்ணார் – வேலைப்போன்று அசையும் விசாலமான கண்ணையுடைய மகளிர். மால் அங்கு ஆடி–மயக்கத்தில் மூழ்கி.

6. எண்ணார்–பகைவர். திருத்தலாகாதாய்–பிறர் ஒருவரால் திருத்துதல் இயலாதவனே; இயல்பாகவே திருந்தியவன் என்ற படி. § 'ளது' என்றும் பாடம்.

7. விண்டார்–பகைவர். பண்டு ஆழ் வினைகள்.

8. பேழ்வாய்–பிளவுபட்ட வாய்.

9. மூத்தப்பன் – பிதாமகன். ஏழேழ் படிகால் – நாற்பத்தொன்பது தலைமுறை. ஈமமாகிய புறங்காடு.

பத்தர் சித்தர் பலர்ஏத்தும் பரமன் பழைய னூர்மேய
அத்தன் ஆலங் காடன்றன் அடிமைத் திறமே அன்பாகிச்
சித்தர் சித்தம் வைத்தபுகழ்ச் சிறுவன் ஊரன் ஒண்டமிழ்கள்
பத்தும் பாடி ஆடுவார் பரமன் அடியே பணிவாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: ஊர்த்துவ தாண்டவேசுரர்
அம்பிகை: வண்டார்குழலி

---

## 7. திருவெண்பாக்கம் — பண் : சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

பிழையுளன பொறுத்திடுவர் என்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா கோயிலுளா யேயென்ன
உழையுடையான் உள்ளிருந்து உளோம்போகீர் என்றானே. 1

இடையறியேன் தலையறியேன் எம்பெருமான் சரணம்என்பேன்
அடையுடையன் நம்மடியான் என்றவற்றைப் பாராதே
விடையுடையான் விடநாகன் வெண்ணீற்றன் புலியின்தோல்
உடையுடையான்எனையுடையா னுளோம்போகீர்என்றானே.

செய்வினைஒன் றறியாதேன் திருவடியே சரணென்று
பொய்யடியேன் பிழைத்திடினும் பொறுத்திடநீ வேண்டா
பையரவா இங்கிருந்தா யோஎன்னப் பரிந்தென்னை [வோ
உய்யஅருள் செய்யவல்லா னுளோம்போகீர் என்றானே. 3

கம்பமருங் கரிஉரியன் கறைமிடற்றன் காபாலி
செம்பவளத் திருவுருவன் சேயிழையோ டுடனாகி

---

1. படலம் – கண்ணை மறைக்கும் தோற்படலம். வடிகாது – தாழ்ந்த காது. உளாயே: வினா. உழை – மான்.

2. அடை உடையன் – நம்பால் அடுத்தலை உடையவன்,

நம்பிஇங்கே இருந்தீரே என்றுநான் கேட்டலுமே
உம்பர்தனித் துணைஎனக்கு உளோம்போகீர் என்றானே. 4

பொன்னிலங்கு நறுங்கொன்றை புரிசடைமேற் பொலிந்திலங்க
மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகமா எருதேறி
துன்னியிரு பால்அடியார் தொழுதேத்த அடியேனும்
உன்னமுதாய்க்§கேட்டலுமேஉளோம்போகீரென்றானே. 5

கண்ணுதலாற் காமனையுங் காய்ந்ததிறற் கங்கைமலர்
தெண்ணிலவு செஞ்சடைமேல் தீமலர்ந்த கொன்றையினான்
கண்மணியை மறைப்பித்தாய் இங்கிருந்தா யோஎன்ன
ஒண்ணுதலி பெருமானார் உளோம்போகீர் என்றானே. 6

பார்நிலவு மறையோரும் பத்தர்களும் பணிசெய்யத்
தார்நிலவு நறுங்கொன்றைச் சடையனார் தாங்கரிய
கார்நிலவு மணிமிடற்றீர் இங்கிருந்தீ ரேயென்ன
ஊர்அரவ மரைக்கசைத்தா னுளோம்போகீர் என்றானே. 7

வாரிடங்கொள் வனமுலையாள் தன்னோடு மயானத்துப்
பாரிடங்கள் பலசூழப் பயின்றாடும் பரமேட்டி
காரிடங்கொள் கண்டத்தன் கருதும்இடந் திருவொற்றி
யூரிடங்கொண் டிருந்தபிரா னுளோம்போகீ ரென்றானே. 8

பொன்னவிலுங் கொன்றையினாய் போய்மகிழ்க்கீழிருவென்று
சொன்னஎனைக் காணாமே சூளறவு மகிழ்க்கீழே
என்னவல்ல பெருமானே இங்கிருந்தா யோஎன்ன
ஒன்னலரைக் கண்டாற்போல் உளோம்போகீர் என்றானே. 9

---

4. கம்பு அமரும் – கட்டுத்தறியிலே பொருந்தும்.
5. § 'உன்னமதாய்க்'; 'உன்னதமாய்க்' என்றும் பாடம்.
7. ஊர் அரவம் அரைக்கு அசைத்தான் – ஊர்கின்ற பாம்பை இடையிலே கட்டியவன். 8. பாரிடம் – பூதம்.

மான்திகழுஞ் சங்கிலியைத் தந்துவரு பயன்களெல்லாம்
தோன்றஅருள் செய்தளித்தாய் என்றுரைக்க உலகமெலாம்
ஈன்றவனே வெண்கோயில் இங்கிருந்தா யோஎன்ன
ஊன்றுவதோர் கோல்அருளி உளோம்போகீர் என்றானே. 10

ஏராரும் பொழில்நிலவு வெண்பாக்கம் இடங்கொண்ட
காராரும் மிடற்றானைக் காதலித்திட் டன்பினொடும்
சீராருந் திருவாரூர்ச் சிவன்பேர்சென் னியில்வைத்த
ஆரூரன் தமிழ்வல்லார்க் கடையாவல் வினைதானே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: வெண்பாக்கநாதர்; அம்பிகை: கனிவாய்மொழி.

**வரலாறு:** திருவொற்றியூரை அகன்று வருகையில் இரண்டு கண்ணும் இழந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெண்பாக்கத்துக்கு வந்து தொண்டர்கள் புடைசூழத் திருக்கோயிலை வலம் வந்து இறைவரை வணங்கி, "இறைவரே, நீர் கோயிலில் உள்ளீரா?" எனக் கேட்கச் சிவபெருமான் சுவாமிகளுக்கு ஊன்றுகோல் ஒன்று அளித்து, "உளோம் போகீர்" என்று அருளினார். அயலாரைப்போல அவ்வாறு சொல்லவே சுவாமிகள் இப்பதிகத்தைப் பாடினார். [பெரிய புராணம், ஏயர்கோன், 278-280.]

---

## 8. திருக்காளத்தி — பண் : நட்டராகம்

திருச்சிற்றம்பலம்

செண்டா டும்விடையாய் சிவ னேயென் செழுஞ்சுடரே
வண்டா ருங்குழலாள் உமை பாகம் மகிழ்ந்தவனே
கண்டார் காதலிக்குங் கண நாதன்எங் காளத்தியாய்
அண்டா உன்னையல்லால் அறிந் தேத்த மாட்டேனே. 1

---

9. சங்கிலியிடம் சூளுறவு செய்த வரலாற்றைக் குறிக்கின்றார். ஒன்னலர் – பகைவர். 10. மானைப்போலத் திகழும்.

1. செண்டு-பந்து. குதிரையின்மேல் ஏறிப் பந்தாடுதல் பண்டை விளையாட்டுள் ஒன்று. கணநாதன் –திருக்காளத்தியப் பருடைய திருநாமங்களுள் ஒன்று. 2. கமை–பொறுமை,

இமையோர் நாயகனே இறை வாவென் னிடர்த்துணையே
கமையார் கருணையினாய் கரு மாமுகில் போல்மிடற்றாய்
உமையோர் கூறுடையாய் உரு வேதிருக் காளத்தியுள்
அமைவே உன்னையல்லால் அறிந் தேத்த மாட்டேனே. 2

படையார் வெண்மழுவா பக லோன்பல் லுகுத்தவனே
விடையார் வேதியனே விளங் குங்குழைக் காதுடையாய்
கடையார் மாளிகைசூழ் கண நாதன்எங் காளத்தியாய்
உடையாய் உன்னையல்லால் உகந் தேத்த மாட்டேனே. 3

மறிசேர் கையினனே மத மாவுரி போர்த்தவனே
குறியே என்னுடைய குரு வேஉன்குற் றேவல்செய்வேன்
நெறியே நின்றடியார் நினைக் குந்திருக் காளத்தியுள்
அறிவே உன்னையல்லால் அறிந் தேத்த மாட்டேனே. 4

செஞ்சேல் அன்னகண்ணார் திறத் தேகிடந் துற்றலறி
நஞ்சேன் நான்அடியேன் நலம் ஒன்றறி யாமையினால்
துஞ்சேன் நான்ஒருகால் தொழு தேன்திருக் காளத்தியாய்
அஞ்சா துன்னையல்லால் அறிந் தேத்த மாட்டேனே. 5

பொய்யவன் நாயடியேன் புக வேநெறி ஒன்றறியேன்
செய்யவ னாகிவந்திங் கிடர்* ஆனவை தீர்த்தவனே
மெய்யவ னேதிருவே விளங் குந்திருக் காளத்திஎன்
ஐயநுன் றன்னையல்லால் அறிந் தேத்த மாட்டேனே. 6

கடியேன் காதன்மையாற் கழற் போதறி யாதஎன்னுள்
குடியாக் கோயில்கொண்ட குளிர் வார்சடை எம்குழகா
முடியால் வானவர்கள் முயங் குந்திருக் காளத்தியாய்
அடியேன் உன்னையல்லா லறி யேன்மற் றொருவரையே. 7

---

3. பகலோன்-சூரியனது. கடை ஆர்-அழகிய திருவாயில்களை உடைய. 5. நஞ்சேன்-நைந்தேன்; துயருற்றேன்.

6. * 'னாகியேவந் திடர்' என்றும் பாடம்.

7. கடியேன்-கொடியவன்.

நீருர் மேனியனே நிம லாநினை அன்றிமற்றுக்
கூறேன் ஆவதனுற் கொழுந் தேயென் குணக்கடலே
பாருர் வெண்டலையிற் பலி கொண்டுழல் காளத்தியாய்
ஏறே உன்னையல்லால் இனி ஏத்த மாட்டேனே. 8

தளிர்போல் மெல்லடியாள் தனை ஆகத் தமர்ந்தருளி
எளிவாய் வந்தென்உள்ளம் புகு தவல்ல எம்பெருமான்
களியார் வண்டறையுந் திருக் காளத்தி யுள்ளிருந்த
ஒளியே உன்னையல்லால் இனி ஒன் றும் உணரேனே. 9

காரூ† ரும்பொழில்சூழ் கண நாதன்எங் காளத்தியுள்
ஆரா இன்னமுதை அணி நாவலா ரூரன்சொன்ன
சீரூர் செந்தமிழ்கள் செப்பு வார்வினை யாயினபோய்ப்
பேரா விண்ணுலகம் பெறு வார்பிழைப் பொன்றிலரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: காளத்திநாதர்; அம்பிகை: ஞானப்பூங்கோதை.

## 9. திருவொற்றியூர் — பண் : தக்கேசி

திருச்சிற்றம்பலம்

அழுக்கு மெய்கொடுன் திருவடி அடைந்தேன்
அதுவும் நான்படப் பாலதொன் றுனல்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்பன் ஆகிலுந் திருவடிப் பிழையேன்

---

8. பாறு – பருந்து.

9. எளிவாய் – எளிமையை உடையவனுகி.

10. † 'காரா'என் றும் பாடம்.

1. பிழுக்கை வாரியும் பால்கொள்வர் – ஆட்டுப் பால் கொள்பவர் அஃது இட்ட பிழுக்கையை வாரி எறிந்துவிட்டுப் பாலைக் கறந்து கொள்வார்கள். பிழைப்பனுகிலும் – குற்றம் செய்பவனுனலும். ஒழுக்க – விட.

வழுக்கி வீழினுந் திருப்பெய ரல்லால்
மற்று நான்அறி யேன்மறு மாற்றம்
ஒழுக்க என்கணுக் கோருமருந் துரையாய்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 1

கட்ட னேன்பிறந் தேன்உனக் காளாய்க்
காதற் சங்கிலி காரண மாக
எட்டி னால்திக ழுந்திரு மூர்த்தி
என்செய் வான்அடி யேன்எடுத் துரைக்கேன்
பெட்ட னாகிலுந் திருவடிப் பிழையேன்
பிழைப்ப னாகிலுந் திருவடிக் கடிமை
ஒட்டி னேன்எனை நீசெய்வ தெல்லாம்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 2

கங்கை தங்கிய சடையுடைக் கரும்பே
கட்டி யேபலர்க் குங்களை கண்ணே
அங்கை நெல்லியின் பழத்திடை அமுதே
அத்தா என்னிடர் ஆர்க்கெடுத் துரைக்கேன்
சங்கும் இப்பியுஞ் சலஞ்சலம் முரல
வயிரம் முத்தொடு பொன்மணி வரன்றி
ஒங்கு மாகடல் ஓதம்வந் துலவும்
ஒற்றி யூரெனும் ஊருறை வானே. 3

ஈன்று கொண்டதோர் சுற்றமொன் றன்று
லியாவ ராகிலென் அன்புடை யார்கள்
தோன்ற நின்றருள் செய்தளித் திட்டாற்
சொல்லு வாரைஅல் லாதன சொல்லாய்

---

2. கட்டனேன் – இழிவையுடையவன்; துன்பத்தையுடையவன் எனினும் ஆம். எட்டினால் – ஐந்து பூதங்கள், ஆன்மா, இருசுடர் என்னும் எட்டு உருவங்களோடு. பெட்டனாகிலும் – விரும்பத்தகாத பொருளை விரும்புபவன் ஆயினும்.

3. வரன்றி – அரித்து. ஒங்கும், ஓங்கும் என்பதன் விகாரம்.

மூன்று கண்ணுடை யாய்அடி யேன்கண்
கொள்வ தேகணக் குவழக் காகில்
ஊன்று கோல்எனக் காவதொன் றருளாய்
ஒற்றி யூர்எனும் ஊருறை வானே. 4

வழித்த லைப்படு வான்முயல் கின்றேன்
உன்னைப் போல்என்னைப் பாவிக்க மாட்டேன்
சுழித்த லைப்பட்ட நீரது போலச்
சுழல்கின் றேன்சுழல் கின்றதென் உள்ளம்
கழித்த லைப்பட்ட நாயது போல
ஒருவன் கோல்பற்றிக் கறகற இழுக்கை
ஒழித்து நீஅரு ளாயின செய்யாய்
ஒற்றி யூர்எனும் ஊர்உறை வானே. 5

மானை நோக்கியர் கண்வலைப் பட்டு
வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சித்
தேனை ஆடிய கொன்றையி னாய்உன்
சீல முங்குண முஞ்சிந்தி யாதே
நானும் இத்தனை வேண்டுவ தடியேன்
உயிரோ டுந்நர கத்தழுந் தாமை
ஊனம் உள்ளன தீர்த்தருள் செய்யாய்
ஒற்றி யூர்எனும் ஊருறை வானே. 6

மற்றுத் தேவரை நினைந்துனை மறவேன்
நெஞ்சி னாரொடு வாழவும் மாட்டேன்
பெற்றி ருந்து பெருமொழி கின்ற
பேதை யேன்பிழைத் திட்டதை அறியேன்

---

4. கணக்கு – நியாயம். வழக்கு – வழக்கம். ஊன்றுகோலாவது எனக்கு அருளாய் என்று கூட்டுக.

5. கறகறவென்று இழுத்துச் செல்லுதலை நீக்கி.

6. மான் ஐ நோக்கியர் – மான்போன்ற அழகையுடைய கண்ணையுடைய மகளிர்.

முற்றும் நீஎனை முனிந்திட அடியேன்
கடவ னென்னுனை நான்மற வேனேல்
உற்ற நோயுறு பிணிதவிர்த் தருளாய்
ஒற்றி யூர்எனும் ஊருறை வானே. 7

கூடி னாய்மலை மங்கையை நினையாய்
கங்கை ஆயிர முகம்உடை யாளைச்
சூடி னாய் என்று சொல்லிய புக்கால்
தொழும்ப னேனுக்குஞ் சொல்லலு மாமே
வாடி நீயிருந் தென்செய்தி மனனே
வருந்தி யானுற்ற வல்வினைக் கஞ்சி
ஊடி னால்இனி ஆவதொன் றுண்டே
ஒற்றி யூர்எனும் ஊர்உறை வானே. 8

மகத்திற் புக்கதோர் சனிஎனக் கானாய்
மைந்த னேமணி யேமண வாளா
அகத்திற் பெண்டுகள் நான்ஒன்று சொன்னால்
அழையேற் போகுரு டாஎனத் தரியேன்
முகத்திற் கண்ணிழந் தெங்ஙனம் வாழ்கேன்‡
முக்க ணாமுறை யோமறை யோதீ
உகைக்குந் தண்கடல் ஓதம்வந் துலவும்
ஒற்றி யூர்எனும் ஊருறை வானே. 9

---

8. பார்வதியம்மையாரோடு கங்காதேவியையும் மனையாளாக ஏற்றுக்கொண்டாய் என்று உன்னைக் குறைகூறப் புகுவது நியாயமானால் எனக்கும் அத்தகைய குறையைச் சொல்லலாம். தொழும்பனேன் – தொண்டனாகிய நான்.

9. எனத்தரியேன்–என்றுகூற அதனை நான் சகிக்கமாட்டேன்.

‡ 'வாழ்வேன்' என்றும் பாடம்.

ஓதம் வந்துல வுங்கரை தன்மேல்
ஒற்றி யூர்உறை செல்வனை நாளும்
ஞாலந் தான்பர வப்படு கின்ற
நான்மறை அங்கம் ஓதிய நாவன்
சீலந் தான்பெரி தும்மிக வல்ல
சிறுவன் வன்றொண்டன் ஊரன் உரைத்த
பாடல் பத்திவை வல்லவர் தாம்போய்ப்
பரகதி திண்ணம் நண்ணுவர் தாமே. 10

திருச்சிற்றம்பலம்

**வரலாறு:** சங்கிலியாரைப் பிரிவதில்லை என்று சபதம் செய்து பிறகு திருவொற்றியூரைப் பிரிந்து செல்லுகையில் தம் பார்வையை இழந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள் இப்பதிகத்தைப் பாடினர். [**பெரிய புராணம்**, ஏயர்கோன், 275–6.]

---

## பண் : குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில்
காட்டுங் கலமுந் திமிலுங் கரைக்கே
ஓட்டுந் திரைவாய் ஒற்றி யூரே. 1

பந்துங் கிளியும் பயிலும் பாவை
சிந்தை கவர்வார் செந்தீ வண்ணர்
எந்தம் மடிகள் இறைவர்க் கிடம்போல்
உந்துந் திரைவாய் ஒற்றி யூரே. 2

---

1. **வினைகள்**–பாவங்கள், கலம்–கப்பல். **திமில்**–மீன்படகு.
2. **போல்**: போலும் என்பதன் விகாரம்.

பவளக் கனிவாய்ப் பாவை பங்கன்
கவளக் களிற்றின் உரிவை போர்த்தான்
தவழும் மதிசேர் சடையாற் கிடம்போல்
உகளுந் திரைவாய் ஒற்றி யூரே. 3

என்ன தெழிலும் நிறையுங் கவர்வான்
புன்னை மலரும் புறவில் திகழும்
தன்னை முன்னம் நினைக்கத் தருவான்
உன்னப் படுவான் ஒற்றி யூரே. 4

பணங்கொள் அரவம் பற்றிப் பரமன்
கணங்கள் சூழக் கபாலம் ஏந்தி
வணங்கும் இடைமென் மடவார் இட்ட
உணங்கல் கவர்வான் ஒற்றி யூரே. 5

படையார் மழுவன் பால்வெண் ணீற்றன்
விடையார் கொடியன் வேத நாவன்
அடைவார் வினைகள் அறுப்பான் என்னை
உடையான் உறையும் ஒற்றி யூரே. 6

சென்ற* புரங்கள் தீயில் வேவ
வென்ற விகிர்தன் வினையை வீட்ட
நன்று நல்ல நாதன் நரையே
றொன்றை உடையான் ஒற்றி யூரே. 7

கலவ மயில்போல் வளைக்கை நல்லார்
பலரும் பரவும் பவளப் படியான்
உலகின் உள்ளார் வினைகள் தீர்ப்பான்
உலவுந் திரைவாய் ஒற்றி யூரே. 8

---

5. பணம்–படம். உணங்கல்–புழுங்கலரிசிச் சோறு.
7. * 'சென்று' என்றும் பாடம்.
8. நல்லார்–மகளிர். பவளப்படியான் – பவளம்போன்ற திருமேனியை உடையான்; படி–உருவம்.

பற்றி வரையை எடுத்த அரக்கன்
இற்று முரிய விரலால் அடர்த்தார்
எற்றும் வினைகள் தீர்ப்பார் ஓதம்
ஒற்றுந் திரைவாய் ஒற்றி யூரே. 9

ஒற்றி யூரும் அரவும் பிறையும்
பற்றி யூரும் பவளச் சடையான்
ஒற்றி யூர்மேல் ஊரன் உரைத்த
கற்றுப் பாடக் கழியும் வினையே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: படம் பக்கநாதர்; மாணிக்கத் தியாகர்
அம்பிகை: வடிவுடையம்மை

---

## 10. வடதிருமுல்லைவாயில்* — பண்: தக்கேசி

திருச்சிற்றம்பலம்

திருவும்மெய்ப் பொருளுஞ் செல்வமும் எனக்குன்
சீருடைக் கழல்கள்என் றெண்ணி
ஒருவரை மதியா துறுமைகள் செய்து
முடியும் உறைப்பனாய்த் திரிவேன்

---

9. ஓதம் ஒற்றும்–கடலின் நீர் மோதும்.

10. ஒற்றி ஊரும் – மேலே பற்றி ஊர்கின்ற. உரைத்த – பாடிய பாடல்களை.

* 'திருவட முல்லைவாயில்' எனினும் ஆம்.

1. திரு–போகபோக்கியங்களுக்குக் கருவியான ஐசுவரியம். மெய்ப்பொருளும்–உண்மையான அருட் செல்வமும். செல்வம்–நிதி. உறுமைகள் செய்து - அவர்களிடம் புகல்புகாமையைச் செய்து; தகாத செயல்களைச் செய்து எனினும் ஆம். உறைப்பனாய்–மிடுக்குடையவனாகி. முருகு–வாசனை. படு துயர் என்றது கண்ணை இழந்துபட்ட வருத்தத்தை.

முருகமர் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் வாயினால் உன்னைப்
பரவிடும் அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 1

கூடிய இலயஞ் சதிபிழை யாமைக்
கொடியிடை உமையவள் காண
ஆடிய அழகா அருமறைப் பொருளே
அங்கணா எங்குற்றாய் என்று
தேடிய வானோர் சேர்திரு முல்லை
வாயிலாய் திருப்புகழ் விருப்பால்
பாடிய அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 2

விண்பணிந் தேத்தும் வேதியா மாதர்
வெருவிட வேழமன்‡ றுரித்தாய்
செண்பகச் சோலை சூழ்திரு முல்லை
வாயிலாய் தேவர்தம் மரசே
தண்பொழில் ஒற்றி மாநகர் உடையாய்
சங்கிலிக் காஎன்கண் கொண்ட
பண்பநின் னடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 3

பொன்னலங் கழனிப் புதுவிரை மருவிப்
பொறிவரி வண்டிசை பாட
அந்நலங் கமலத் தவிசின்மேல் உறங்கும்
அலவன்வந் தலவிட அள்ளல்

2. இலயம்-தாளம். சதி - காலினால் தாளத்திற்கு ஏற்ப மிதித்தல். கொடியிடை உமை; தலத்து அம்பிகை.

3. மாதர்-உமை. ‡ 'வேழமொன்' என்றும் பாடம்.

செந்நெலங் கழனி சூழ்திரு முல்லை
வாயிலாய் திருப்புகழ் விருப்பால்
பன்னலந் தமிழாற் பாடுவேற் கருளாய்
பாசுப தாபரஞ் சுடரே. 4

சந்தன வேருங் காரகிற் குறடும்
தண்மயிற் பீலியுங் கரியின்
தந்தமுந் தரளக் குவைகளும் பவளக்
கொடிகளுஞ் சுமந்துகொண் டுந்தி
வந்திழி பாலி வடகரை முல்லை
வாயிலாய் மாசிலா மணியே
பந்தனை கெடுத்தென் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 5

மற்றுநான் பெற்ற தார்பெற வல்லார்
வள்ளலே கள்ளமே பேசிக்
குற்றமே செயினுங் குணமெனக் கொள்ளுங்
கொள்கையால் மிகைபல செய்தேன்
செற்றுமீ தோடுந் திரிபுரம் எரித்த
திருமுல்லை வாயிலாய் அடியேன்
பற்றிலேன் உற்ற படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 6

மணிகெழு செவ்வாய் வெண்ணகைக் கரிய
வார்குழல் மாமயிற் சாயல்
அணிகெழு கொங்கை அங்கயற் கண்ணார்
அருநடம் ஆடல் அருத

---

4. **வீரை**–நறுமணம். அலவன்–நண்டு. அள்ளல்–சேறு.

5. சந்தனத்தின் வேரையும். குறடு – கட்டை. பாலி – பாலாறு. மாசிலாமணி: தலத்து மூர்த்தியின் திருநாமம். பந்தனை–பாசம்.

6. மிகை–செய்யத் தகாத செயல்கள்.

திணிபொழில் தழுவு திருமுல்லை வாயிற்
செல்வனே எல்லியும் பகலும்
பணியது செய்வேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 7

நம்பனே அன்று வெண்ணெய்நல் லூரில்
நாயினேன் றன்னைஆட் கொண்ட
சம்புவே உம்ப ரார்தொழு தேத்துந்
தடங்கடல் நஞ்சுண்ட கண்டா
செம்பொன்மா ளிகைசூழ் திருமுல்லை வாயில்
தேடியான் திரிதர்வேன் கண்ட
பைம்பொனே அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 8

மட்டுலா மலர்கொண் டடியிணை வணங்கும்
மாணிதன் மேல்மதி யாதே
கட்டுவான் வந்த காலனை மாளக்
காலினால் ஆருயிர் செகுத்த
சிட்டனே செல்வத் திருமுல்லை வாயிற்
செல்வனே செழுமறை பகர்ந்த
பட்டனே அடியேன் படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 9

சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச்
சூழ்கொடி முல்லையாற் கட்டிட்
டெல்லையில் இன்பம் அவன்பெற வெளிப்பட்
டருளிய இறைவனே என்றும்

---

7. மணிகெழு – பவளத்தைப் போன்ற. திணி பொழில் – அடர்ந்த சோலை. எல்லி–இரவு.

9. மாணி–மார்க்கண்டேயர். பட்டன்–ஆசிரியன்.

நல்லவர் பரவுந் திருமுல்லை வாயில்
நாதனே நரைவிடை ஏறீ
பல்கலைப் பொருளே படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே. 10

விரைதரு மலர்மேல் அயனொடு மாலும்
வெருவிட நீண்டஎம் மானைத்
திரைதரு புனல்சூழ் திருமுல்லை வாயிற்
செல்வனை நாவலா ரூரன்
உரைதரு மாலையோர் அஞ்சினோ டஞ்சும்
உள்குளிர்ந் தேத்தவல் லார்கள்
நரைதிரை மூப்பும் நடலையும் இன்றி
நண்ணுவர் விண்ணவர்க் கரசே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி: மாசிலாமணி ஈசுவரர்
அம்பிகை: கொடியிடைநாயகியம்மை

---

## 11. திருக்கச்சூர் ஆலக்கோயில்

### பண் : கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

முதுவாய் ஓரி கதற முதுகாட்
டெரிகொண் டாடல் முயல்வானே
மதுவார் கொன்றைப் புதுவீ சூடும்
மலையான் மகள்தன் மணவாளா

---

**10.** இத்தலத்துச் செய்தி.

**11.** நீண்ட – பேருருவம் எடுத்து நின்ற. நடலை – துன்பம், அரசு – அரச பதவி.

கதுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக்
கண்டால் அடியார் கவலாரே
அதுவே ஆமா றிதுவோ கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 1

கச்சேர் அரவொன் றரையில் அசைத்துக்
கழலுஞ் சிலம்புங் கலிக்கப் பலிக்கென்
றுச்சம் போதா ஊரூர் திரியக்
கண்டால் அடியார் உருகாரே
இச்சை அறியோம் எங்கள் பெருமான்
ஏழேழ் பிறப்பும் எனையாள்வாய்
அச்சம் இல்லாக் கச்சூர் வடபால்
ஆலக் கோயில் அம்மானே. 2

சாலக் கோயில் உளநின் கோயி
லவ்வவென் தலைமேற் கொண்டாடி
மாலைத் தீர்ந்தேன் வினையுந் துரந்தேன்
வானோர் அறியா நெறியானே
கோலக் கோயில் குறையாக் கோயில்
குளிர்பூங் கச்சூர் வடபாலை
ஆலக் கோயிற் கல்லால் நிழற்கீழ்
அறங்கட் டுரைத்த* அம்மானே. 3

விடையுங் கொடியுஞ் சடையும் உடையாய்
மின்னேர் உருவத் தொளியானே
கடையும் புடைசூழ் மணிமண் டபமுங்
கன்னி மாடங் கலந்தெங்கும்

---

1. ஓரி – நரி. முதுகாடு – சுடுகாடு. வீ – மலர். கதுவாய்த் தலையில் – மூளியாக உடைந்த கபாலத்தில். பலி – பிச்சை. கவலாரே: வினா.

2. கச்சாக அரவை அரையில் அசைத்து. கலிக்க – ஒலிக்க.

3. மாலை–மயக்கத்தை. *'அறங்களுரைத்த' என்றும் பாடம்.

புடையும் பொழிலும் புனலுந் தழுவிப்
பூமேல் திருமா மகள்புல்கி
அடையுங் கழனிப் பழனக் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 4

மேலை விதியே வினையின் *பயனே
விரவார் புரமூன் றெரிசெய்தாய்
காலை எழுந்து தொழுவார் தங்கள்
கவலை களைவாய் கறைக்கண்டா
மாலை மதியே மலைமேல் மருந்தே
மறவேன் அடியேன் வயல்சூழ்ந்த
ஆலைக் கழனிப் பழனக் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 5

பிறவாய் இறவாய் பேணாய் மூவாய்
பெற்றம் ஏறிப் பேய்சூழ்தல்
துறவாய் மறவாய் சுடுகா டென்றும்
இடமாக் கொண்டு நடமாடி
ஒறுவாய்த் தலையிற் பலிநீ கொள்ளக்
கண்டால் அடியார் உருகாரே
அறவே ஒழியாய் கச்சூர் வடபால்
ஆலக் கோயில் அம்மானே. 6

பொய்யே உன்னைப் புகழ்வார் புகழ்ந்தால்
அதுவும் பொருளாக் கொள்வானே
மெய்யே எங்கள் பெருமான் உன்னை
நினைவார் அவரை நினைகண்டாய்

---

4. கடை - வாயில்.

5. ஆலை – கரும்பு. * 'விதியின்' என்றும் பாடம்.

6. பேணாய் – பிறர் யாரையும் தொழுது நில்லாய். மூவாய் – மூப்பை அடையாய். ஒறுவாய்த்தலை – மூளியான கபாலம்.

மையார் தடங்கண் மடந்தை பங்கா
கங்கார் மதியஞ் சடைவைத்த
ஐயா செய்யாய் வெளியாய் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 7

ஊனைப் பெருக்கி உன்னை நினையா
தொழிந்தேன் செடியேன் உணர்வில்லேன்
கானக் கொன்றை கமழ மலருங்
கடிநா றுடையாய் கச்சூராய்
மானைப் புரையும் மடமென் னோக்கி
மடவாள் அஞ்ச மறைத்திட்ட
ஆனைத் தோலாய் ஞானக் கண்ணாய்
ஆலக் கோயில் அம்மானே. 8

காதல் செய்து களித்துப் பிதற்றிக்
கடிமா மலரிட் டுனையேத்தி
ஆதல் செய்யும் அடியார் இருக்க
ஐயங் கொள்வ தழகிதே
ஓதக் கண்டேன் உன்னை மறவேன்
உமையாள் கணவா எனையாள்வாய்
ஆதற் பழனக் கழனிக் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானே. 9

அன்னம் மன்னும் வயல்சூழ் கச்சூர்
ஆலக் கோயில் அம்மானை
உன்ன முன்னும் மனத்தா ரூரன்
ஆரூ ரன்பேர் முடிவைத்த

---

7. கங்கு – ஓரம். வெளியாய் – வெள்ளை நிறத்தவனே.
8. செடியேன் – தீயேன். கடி – நறுமணம்.
9. ஆதல் செய்யும் – ஆக்கத்தைப் பெறும்.

மன்னு புலவன் வயல்நா வலர்கோன்
செஞ்சொல் நாவன் வன்றொண்டன்
பன்னு தமிழ்நூல் மாலை வல்லார்
அவரெந் தலைமேற் பயில்வாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: விருந்திட்டவரதர்; அம்பிகை: உமையம்மை.

**வரலாறு:** சுந்தரமூர்த்தி நாயனார் திருக்கழுக்குன்றத்தைத் தரிசித்துக்கொண்டு, திருக்கச்சூர் ஆலக்கோயிலை அடைந்து ஆலய தரிசனம் செய்துகொண்டு, கோவில்புறத்தே அணைந்தபொழுது, அவருக்கு அமுது அளிக்கும் பரிசனங்கள் வாராமையினால் பசியோடு கோயிலுக்கு வெளியே வந்திருந்தார். அப்பொழுது சிவபெருமான் அவர்முன் ஓர் அந்தணராய்த் தோன்றி, 'அன்னப் பிட்சை எடுத்து உமக்கு அளிக்கின்றேன்; எங்கும் செல்லாமல் இங்கு இரும்' என்று கூறி, அவ்வூரில் வீடுதோறும் சென்று பிட்சை வாங்கி வந்து ஆளுடைய நம்பிகளுக்கு அளித்தார். நம்பிகள் உணவு அருந்தி உவந்திருந்தபொழுது சிவபெருமான் மறைந்தருளினார். வந்தவர் சிவபெருமான் என்பதை உணர்ந்த சுவாமிகள் எம்பெருமானின் பெருங்கருணைத் திறத்தை நினைந்து இப்பதிகத்தைப் பாடியருளினார். [பெரிய புராணம், ஏயர்கோன், 174–182.]

---

## 12. திருக்கழுக்குன்றம் — பண் : நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
நின்ற பாவம்† வினைகள் தாம்பல நீங்கவே
சென்று சென்று தொழுமின் தேவர் பிரானிடம்
கன்றி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. 1

1. செய்த கொடுமையாலும் பல சொல்லவும் நின்றபாவம்.
† 'பாவ' என்றும் பாடம்.

இறங்கிச் சென்று தொழுமின் இன்னிசை பாடியே*
பிறங்கு கொன்றைச் சடையன் எங்கள் பிரானிடம்
நிறங்கள் செய்த மணிகள் நித்திலங் கொண்டிழி
கறங்கு வெள்ளை அருவித் தண்கழுக் குன்றமே. 2

நீள நின்று தொழுமின் நித்தலும் நீதியால்
ஆளும் நம்ம வினைகள் அல்கி அழிந்திடத்
தோளும் எட்டும் உடைய மாமணிச் சோதியான்
காள கண்டன் உறையுந் தண்கழுக் குன்றமே. 3

வெளிறு தீரத் தொழுமின் வெண்பொடி ஆடியை
முளிறி லங்குமழு வாளன் முந்தி உறைவிடம்
பிளிறு தீரப் பெருங்கைப் பெய்ம்மதம் மூன்றுடைக்
களிறி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. 4

புலைகள் தீரத் தொழுமின் புன்சடைப் புண்ணியன்
இலைகொள் சூலப் படையன் எந்தை பிரானிடம்
முலைகள் உண்டு தழுவிக் குட்டி யொடுமுசுக்
கலைகள் பாயும் புறவில் தண்கழுக் குன்றமே. 5

மடமுடைய அடியார் தம்மனத் தேஉற
விடமுடைய மிடறன் விண்ணவர் மேலவன்
படமுடைய அரவன் றான்பயி லும்மிடம்
கடமுடைய புறவில் தண்கழுக் குன்றமே. 6

---

2. * 'பாடவே' என்றும் பாடம்.

3. அல்கி – குறைந்து.

4. வெளிறு – அறியாமை. முளிறு – கூர்மை. பிளிறு தீர– பிளிறிநிற்கும் அச்சம் தீரும்படி; பிளிறுதல் – முழங்குதல்.

5. புலை – இழிந்த குணம்.

6. மடம் உடைய – அறியாமை அழியும்பொருட்டு, கடம்– காடு. புறவு – முல்லை நிலம்.

ஊனம் இல்லா அடியார் தம்மனத் தேஉற
ஞான மூர்த்தி நட்ட மாடிநவி லும்மிடம்
தேனும் வண்டும் மதுவுண் டின்னிசை பாடியே
கான மஞ்ஞை உறையுந் தண்கழுக் குன்றமே. 7

அந்தம் இல்லா அடியார் தம்மனத் தேஉற
வந்து நாளும் வணங்கி மாலொடு நான்முகன்
சிந்தை செய்த* மலர்கள் நித்தலுஞ் சேரவே
கந்தம்† நாறும் புறவில் தண்கழுக் குன்றமே. 8

பிழைகள் தீரத் தொழுமின் பின்‡சடைப் பிஞ்ஞகன்
குழைகொள் காதன் குழகன் றான்உறை யும்மிடம்
மழைகள் சாலக் கலித்து நீடுயர் வேயவை
குழை§கொள் முத்தஞ் சொரியுந் தண்கழுக் குன்றமே. 9

பல்லில் வெள்ளைத் தலைபன் தான்பயி லும்மிடம்
கல்லில் வெள்ளை அருவித் தண்கழுக் குன்றினை
மல்லின் மல்கு திரள்தோள் ஊரன் வனப்பினால்
சொல்லல் சொல்லித் தொழுவா ரைத்தொழு மின்களே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: வேதகிரீசுவரர்

அம்பிகை: பெண்ணினல்லாளம்மை

---

8. * 'செய்து'; † 'சந்த' என்றும் பாடம்.

9. மழைகள் சால – பல பருவத்துப் பெய்யும் மழைப் பெயல்கள் நிறைய. கலித்து நீடு உயர் வேய்–அதனால் தழைத்து ஓங்கி உயர்ந்த மூங்கில். ‡ 'புன்'; § 'கழை' என்றும் பாடம்.

10. பல் இல்லாத வெள்ளைத்தலை; தசையற்ற என்புத்தலை.

## (9) வடநாட்டிலுள்ள தலங்கள்

## 1. திருப்பருப்பதம் — பண் : நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

மானும்மரை இனமும்மயில் இனமுங்கலந் தெங்கும்
தாமேமிக மேய்ந்துதடஞ் சுனைநீர்களைப் பருகிப்
பூமாமரம் உரிஞ்சிப்பொழி லூடேசென்று புக்குத்
தேமாம்பொழில் நீழல்துயில் சீபர்ப்பத மலையே. 1

மலைச்சாரலும் பொழிற்சாரலும் புறமேவரும் இனங்கள்
மலைப்பாற்கொணர்ந் திடித்தூட்டிட மலங்கித்தன களிற்றை
அழைத்தோடியும் பிளிறீயவை அலமந்துவந் தெய்த்துத்
திகைத்தோடித்தன் பிடிதேடிடுஞ் சீபர்ப்பத மலையே. 2

மன்னிப்புனங் காவல்மட மொழியாள்புனங் காக்கக்
கன்னிக்கிளி வந்துகவைக் கோலிக்கதிர் கொய்ய
என்னைக்கிளி மதியாதென்று வெடுத்துக்கவண் ஒலிப்பத்
தென்னற்கிளி திரிந்தேறிய சீபர்ப்பத மலையே. 3

மையார்தடங் கண்ணாள்மட மொழியாள் புனங்காக்கச்
செவ்வேதிரிந் தாயோஎனப் போகாவிட* விளிந்து
கைபாவிய கவணால்மணி எறியஇரிந் தோடிச்
செவ்வாயன§ கிளிபாடிடுஞ் சீபர்ப்பத மலையே. 4

ஆனைக்குலம் இரிந்தோடித்தன் பிடிசூழலிற் றிரியத்
தானப்பிடி செவிதாழ்த்திட அதற்குமிக இரங்கி
மானக்குற அடல்வேடர்கள் இலையாற்கலை கோலித்
தேனைப்பிழிந் தினிதூட்டிடுஞ் சீபர்ப்பத மலையே. 5

---

1. உரிஞ்சி-உராய்ந்து.
3. கவைக்கோலி – கவ்வுதலைச் செய்து: கவை – கவ்வை. தென் நற்கிளி-அழகிய நல்ல கிளி. மதியாதென்று எடுத்து.
4. * 'விடம்'; § 'வாயின' என்றும் பாடம். இரிந்து-கலைந்து.
5. தானம்-மதம். கலை-கல்லை; தொன்னை.

மாற்றுக்களி றடைந்தாய்என்று மதவேழங்கை எடுத்தும்
ஊற்றித்தழல்† உமிழ்ந்தும்மதம் பொழிந்தும்முகஞ் சுழியத்
தூற்றத்தரிக்§ கில்லேன்என்று சொல்லிஅயல் அறியத்
தேற்றிச்சென்று பிடிசூழறுஞ்* சீபர்ப்பத மலையே. 6

அப்போதுவந் துண்டீர்களுக் கழையாதுமுன் னிருந்தேன்
எப்போதும்வந் துண்டால்எமை எமர்கள்சுழி யாரோ
இப்போதுமக் கிதுவேதொழில் என்றோடியக் கிளியைச்
செப்பேந்திள முலையாள்எறி சீபர்ப்பத மலையே. 7

திரியும்புரம் நீறாக்கிய செல்வன்றன கழலை
அரியதிரு மாலோடயன் றானும்மவர் அறியார்
கரியின்னினம் ஓடும்பிடி தேன்உண்டவை களித்துத்
திரிதந்தவை திகழ்வாற்பொலி சீபர்ப்பத மலையே. 8

ஏனத்திரள் கிளைக்கஎரி போலமணி சிதறத்‡
தீயென்றவை|| மலைச்சாரலில் திரியுங்கர டியும்
மானும்மரை இனமும்மயில் மற்றும்பல எல்லாம்
தேனுண்பொழில் சோலைமிகு சீபர்ப்பத மலையே. 9

நல்லாரவர் பலர்வாழ்தரு வயல்நாவல வூரன்
செல்லல்லுற அரியசிவன் சீபர்ப்பத மலையை
அல்லலவை தீரச்சொன தமிழ்மாலைகள் வல்லார்
ஒல்லை¶செல உயர்வானகம் ஆண்டங்கிருப் பாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: பருப்பத நாதர்; அம்பிகை: பருப்பத நாயகி.



---

6. சுழிய–சுளிக்க. † 'மூற்றித் தணல்'; 'மூற்றிக்கனல்'; § 'தூற்றித்திரி'; * 'சூளறும்' என்றும் பாடம்.

9. ‡ 'சிதர்த்தி'; || 'ஏனல்லவை' என்றும் பாடம்.

10. செல்லல்–துன்பம். ¶ 'ஒல்லைச்' என்றும் பாடம்.

## 2. திருக்கேதாரம் — பண்: நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழாதறஞ் செய்மின்தடங் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்திருக் கேதாரமெ னீரே. 1

பறியேசுமந் துழல்வீர்பறி நரிகீறுவ தறியீர்
குறிகூவிய கூற்றங்கொளும் நாளால்அறம் உளவே
அறிவானிலும் அறிவானல நறுநீரொடு சோறு
கிறிபேசிநின் றிடுவார்தொழு கேதாரமெ னீரே. 2

கொம்பைப்பிடித் தொருக்காலர்கள் இருக்கால்மலர் தூவி
நம்பன்னமை ஆள்வானென்று நடுநாளையும் பகலும்
கம்பக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவிச்
செம்பொற்பொடி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. 3

உழக்கேஉண்டு படைத்தீட்டிவைத்திழப்பார்களுஞ்சிலர்கள்
வழக்கேயெனிற் பிழைக்கேமென்பர் மதிமாந்திய மாந்தர்

---

1. மாயம் – நிலையாமையை உடையது. இந்த வாழ்வு பிறவிக்கடலும் பசிநோயும் தமக்கென்று பறித்துக்கொண்ட கொள்ளைதான். பிறவிக்கடலில் பசியாகிய நோயைச் செய்த உடம்பு எனலும் ஆம். தடங்கண்ணான்–திருமால்; அவன்கீழும், மலரோன் மேலும் உற.

2. பறி – உடம்பு. கீறுவது – கிழிப்பது. குறி கூவிய – மரணத்துக்குரிய அறிகுறிகளெல்லாம் வரவேற்று அழைத்த. கூற்றுவன் உயிர்கொள்ளும் நாளில் நீரோடு சோறு கொடுத்த அறம் நம்மைக் காப்பாற்ற உள்ளன. கிறி – பரியாசம்.

3. 'ஒருக்கு காலர்கள் – ஒருக்காலர்கள் – பிராணவாயுவைத் தம்பித்தவர்கள்'; ஒருவகைத் தேவசாதியினர். இருக்கால் – வேத மந்திரத்தோடு.

சழக்கேபறி நிறைப்பாரொடு தவமாவது செயன்மின்
கிழக்கேசலம் இடுவார்தொழு கேதாரமெ னீரே. 4

வாளோடிய தடங்கண்ணியர் வலையில்அழுந் தாதே
நாளோடிய நமனார்தமர் நணுகாமுனம் நணுகி
ஆளாய்உய்ம்மின் அடிகட்கிடம் அதுவேஎனில் இதுவே
கீளோடர வசைத்தானிடம் கேதாரமெ னீரே. 5

தளிசாலைகள் தவமாவது தம்மைப்பெறில் அன்றே
குளிர்நீர்உளங் குருக்கேத்திரங் கோதாவிரி குமரி
தெளிநீர்உளம் சீபர்ப்பதந் தெற்குவடக் காகக்
கிளிவாழைஒண் கனிகீறிஉண் கேதாரமெ னீரே. 6

பண்ணின்தமிழ் இசைபாடலின் பழவேய்முழ வதிரக்
கண்ணின்னொளி கனகச்சுனை வயிரம்மவை சொரிய
மண்ணின்றன மதவேழங்கள் மணிவாரிக்கொண் டெறியக்
கிண்ணென்றிசை முரலுந்திருக் கேதாரமெ னீரே. 7

---

4. தாம் உழக்களவு நுகர்ந்து மற்றவற்றை யாருக்கும் பயன்படாமல் ஈட்டிவைத்து இழப்பவர்கள் பிறருக்கு உதவுதல் என்றால், ஐயோ, எங்கள் உயிர் போய்விடும் என்பவர்கள். மதி மாந்திய – அறிவை விழுங்கின; அறிவில்லாத. சழக்கே பறி நிறைப்பார் – பொய்யாக உடம்புக்கு உணவு இட்டு நிரப்புவார்கள். கிழக்கே – கீழே. சூரியன் உதயமாகும்போது கீழ்த் திசையை நோக்கி எனலும் ஆம்.

5. நாள் ஓடிய நமனார் – நாட்கள் கழிய அதுகண்டு வரும் எமன். ஆளாய் – தொண்டராகி.

6. தளி – கோயில். சாலை – ஆசிரமம். தம்மைத்தாம் பெற்றால்தான் தளியும் சாலையும் தவமும் பயன்பெற்றன ஆகும். குமரி – கன்யாகுமரித் தீர்த்தம்.

7. பழவேய் – தமிழ்நாட்டின் பழைய இசைக்கருவியாகிய புல்லாங்குழல். கண்ணுக்கு இனிதாகிய ஒளியை வீசும் பொன். மண்ணில் நின்றனவாகிய வேழம்.

முளைக்கைப்பிடி முகமன்சொலி முதுவேய்களை இறுத்துத்
துளைக்கைக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவி
வளைக்கைப்பொழி மழைகூர்தர மயில்மான்பிணை நிலத்தைக்
கிளைக்கமணி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. 8

பொதியேசுமந் துழல்வீர்பொதி அவமாவதும் அறியீர்
மதிமாந்திய வழியேசென்று குழிவீழ்வதும் வினையால்
கதிசூழ்கடல் இலங்கைக்கிறை மலங்கவரை அடர்த்துக்
கெதிபேறுசெய் திருந்தானிடங் கேதாரமெ னீரே. 9

நாவின்மிசை யரையன்னொடு தமிழ்ஞானசம் பந்தன்
யாவர்சிவன் அடியார்களுக் கடியான்அடித் தொண்டன்
தேவன்திருக் கேதாரத்தை ஊரன்னுரை செய்த
பாவின்தமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே. 10

திருச்சிற்றம்பலம்

சுவாமி: கேதாரநாதர்; அம்பிகை: கேதாரகௌரி.

---

## 3. திருநொடித்தான்மலை — பண் : பஞ்சமம்

(திருக்கயிலாயம்)

திருச்சிற்றம்பலம்

தானெனை முன்படைத்தான் அத றிந்துதன் பொன்னடிக்கே
நானென பாடலந்தோ* நாயி னேனைப் பொருட்படுத்து
வானெனைவந் தெதிர்கொள்ள மத்த யானை அருள்புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான் நொடித் தான்மலை உத்தமனே. 1

---

8. முகமன் – உபசாரம்.

9. பொதி–உடற்சுமை. அவமாவது-வீணாவதை. மலங்க–மயங்க. கெதிபேறு–நல்லகதியை அடையும் பாக்கியம்.

10. நாவின் மிசை அரையன் – திருநாவுக்கரசர்.

1. * 'பாடலந்தோ' என்றும் பாடம். வான்-தேவலோகத்தார். ஊன் உயிர் வேறு செய்தான் – ஊனையும் உயிரையும் வேறாக்கினான். நொடித்தான்மலை – கைலையங்கிரி.

ஆனை உரித்தபகை அடி யேனொடு மீளக்கொலோ
ஊனை உயிர்வெருட்டி ஒள்ளி யானை நினைந்திருந்தேன்
வானை மதித்தமரர் வலஞ் செய்தெனை ஏறவைக்க
ஆனை அருள்புரிந்தான் நொடித் தான்மலை உத்தமனே. 2

மந்திரம் ஒன்றறியேன் மனை வாழ்க்கை மகிழ்ந்தடியேன்
சுந்தர வேடங்களால் துரி சேசெயுந் தொண்டனெனை
அந்தர மால்விசும்பில் அழ கானை அருள்புரிந்த
துந்தர மோநெஞ்சமே நொடித் தான்மலை உத்தமனே. 3

வாழ்வை உகந்தநெஞ்சே மட வார்தங்கள் வல்வினைப்பட்
டாழ முகந்தஎன்னை அது மாற்றி அமரரெல்லாம்
சூழ அருள்புரிந்து தொண்ட னேன்பரம் அல்லதொரு
வேழம் அருள்புரிந்தான் நொடித் தான்மலை உத்தமனே. 4

மண்ணுல கிற்பிறந்து நும்மை வாழ்த்தும் வழியடியார்
பொன்னுலகம்பெறுதல் தொண்டனேனின்று கண்டொழிந்
விண்ணுலகத்தவர்கள் விரும்பவெள்ளையானையின்மே [தேன்
லென்னுடல் காட்டுவித்தான் நொடித் தான்மலை உத்தமனே.

அஞ்சினை ஒன்றிநின்று அலர் கொண்டடி சேர்வறியா
வஞ்சனை என்மனமே வைகி வானநன் னாடர்முன்னே

---

2. ஆனையை முன்பு உரித்த பகை என்னால் நீங்கும் பொருட்டோ எனக்கு யானையை அருளி அதன்மேல் ஊர்ந்து தன்பால் வரச்செய்தான்.

3. அழகிய கோலங்கள் பூண்டு அவற்றால் குற்றத்தையே செய்த. அழகையுடைய யானை. அருள் புரிந்ததும் தரமோ — அருள் செய்த செயலும் என் தகுதிக்கு ஏற்றதோ.

4. தொண்டனேன் பரம் அல்லதொரு வேழம் — தொண்டனாகிய என்னால் தாங்குதற்குரியதல்லாத பெரு மதிப்பை யுடைய யானையை.

துஞ்சுதல் மாற்றுவித்துத் தொண்ட னேன்பர மல்லதொரு
வெஞ்சின ஆனைதந்தான் நொடித் தான்மலை உத்தமனே. 6

நிலைகெட விண்அதிர நிலம் எங்கும் அதிர்ந்தசைய
மலையிடை யானைஏறி வழி யேவரு வேன்எதிரே
அலைகட லால்அரையன் னலர் கொண்டுமுன் வந்திறைஞ்ச
உலையணை யாதவண்ணம்† நொடித் தான்மலை உத்தமனே. 7

அரவொலி ஆகமங்கள் அறி வார்அறி தோத்திரங்கள்
விரவிய வேதஒலி விண்ணெ லாம்வந் தெதிர்ந்திசைப்ப
வரமலி வாணன்வந்து வழி தந்தெனக் கேறுவதோர்
சிரமலி யானைதந்தான் நொடித் தான்மலை உத்தமனே. 8

இந்திரன் மால்பிரமன் னெழி லார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளஎன்னை‡ மத்த யானை அருள்புரிந்து
மந்திர மாமுனிவர் இவ னார்என எம்பெருமான்
நந்தமர் ஊரனென்றான் நொடித் தான்மலை உத்தமனே. 9

ஊழிதோ றூழிமுற்று முயர் பொன்நொடித் தான்மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவை நாவல ஊரன்சொன்ன
ஏழிசை இன்றமிழால் இசைந் தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா அஞ்சை யப்பர்க் கறிவிப்பதே. 10

திருச்சிற்றம்பலம்

---

6. அஞ்சினை ஒன்றி – ஐம்பொறிகளோடு சேர்ந்து. அலர் கொண்டு–அருச்சிப்பதற்குரிய மலர்களைக் கைக்கொண்டு. சேர் வறியா – சேர்தலை அறியாத. அலர் – பழியுமாம். நின்று கொண்டு அறியா எனக் கூட்டுக. துஞ்சுதல்–இறத்தலை.

7. அலைகடல் ஆலுகின்ற அரையன்; வருணன். உலை – அழிவு. † 'வண்ணன்' என்றும் பாடம்.

8. அர ஒலி – ஹரஹர என்ற முழக்கம். ஏறுவதோர் சிரம்மலி–ஏறுவதற்குரிய தலை பெரிதாக உள்ள.

9. ‡ 'கொள்க வென்ன' என்றும் பாடம்.

10. கடலரையா - வருணனே. அஞ்சையப்பர்–திருவஞ்சைக் களத்தில் கோயில் கொண்ட சிவபெருமான்.

**வரலாறு:** சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவஞ்சைக்களத் திருக்கோயிற்குச் சென்று தரிசித்துப் புறம்போதச், சிவபெருமானது ஏவலால் சிவகணங்களும் தேவர்களும் வெள்ளையானை ஒன்றைக் கொணர்ந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளை ஏற்றிக் கொண்டு கைலாயத்துக்கு அழைத்துச் சென்றனர். அப்போது பாடிய திருப்பதிகம் இது. [பெரிய புராணம், வெள்ளையானைச் சருக்கம், 42-3.]

---

## (10) பொது

## 1. திருநாட்டுத்தொகை — பண்: இந்தளம்

திருச்சிற்றம்பலம்

வீழக் காலனைக் கால்கொடு பாய்ந்த விலங்கலான்
கூழை ஏறுகந் தான்இடங் கொண்டதுங் கோவலூர்
தாழையூர் தகடூர்* தக்களூர் தருமபுரம்
வாழைகாய்க் கும்வளர் மருகல் நாட்டு மருகலே. 1

அண்டத்தண் டத்தின் அப்புறத் தாடும் அமுதனூர்
தண்டந் தோட்டந் தண்டங்குறை தண்டலை யாலங்காடு
கண்டல் முண்டல்கள் சூழ்கழிப் பாலை கடற்கரை [யே.
கொண்டல்நாட்டுக்கொண்டல் குறுக்கைநாட்டுக் குறுக்கை

மூல னூர்முத லாயமுக் கண்ணன் முதல்வன்ஊர்
நால னூர்நரை யேறுகந் தேறிய நம்பன்ஊர்
கோல நீற்றன் குற்றாலங் குரங்கணின் முட்டமும்
வேல னூர்வெற்றி யூர்வெண்ணிக் கூற்றத்து வெண்ணியே. 3

தேங்கூ ருந்திருச் சிற்றம் பலமுஞ் சிராப்பள்ளி
பாங்கூர் எங்கள் பிரான்உறை யுங்கடம் பந்துறை
பூங்கூ ரும்பர மன்பரஞ் சோதி பயிலும்ஊர்
நாங்கூர் நாட்டுநாங் கூர்நறை யூர்நாட்டு நறையூரே. 4

---

1. * 'தகட்டூர்' என்றும் பாடம். 2. கண்டல்-முள்ளி.

குழலை வென்ற மொழிமட வாளையோர் கூறனும்
மழலை ஏற்று மணாளன் இடந்தட மால்வரைக்
கிழவன் கீழை வழிப்பழை யாறு கிழையமும்
மிழலை நாட்டு மிழலைவெண் ணிநாட்டு மிழலையே. 5

தென்னூர் கைம்மைத் திருச்சுழி யல்திருக் கானப்பேர்
பன்னூர் புக்குறை யும்பர மர்க்கிடம் பாய்நலம்
என்னூர் எங்கள் பிரான்உறை யுந்திருத் தேவனூர்
பொன்னூர் நாட்டுப்பொன் னூர்புரி சைநாட்டுப் புரிசையே.

ஈழ நாட்டு மா†தோட்டம் தென்னாட் டிராமேச்சுரம்
சோழ நாட்டுத் துருத்தி நெய்த்தானந் திருமலை
ஆழி யூரன§நாட்டுக் கெல்லாம் அணியாகிய
கீழை யில்லா னூர்க்கிடங் கிள்ளி குடியதே. 7

நாளும் நன்னிலம் தென்பனை யூர்வட கஞ்சனூர்
நீள நீள்சடை யான்நெல்லிக் காவும் நெடுங்களம்
காள கண்டன் உறையுங் கடைமுடி கண்டியூர்
வேளார்‡ நாட்டுவே ளூர்விளத் தூர்நாட்டு விளத்தூரே. 8

தழலும் மேனியன் தையலோர் பாகம் அமர்ந்தவன்
தொழலுந் தொல்வினை தீர்க்கின்ற சோதி சோற்றுத்துறை
கழலுங் கோவை உடையவன் காதலிக் கும்மிடம்
பழனம் பாம்பணி¶பாம்புரம் தஞ்சைதஞ் சாக்கையே. 9

மைகொள் கண்டன்எண் டோளன்முக் கண்ணன்வலஞ்சுழி
பைகொள் வாள்அர வாட்டித் திரியும் பரமனூர்

5. மழலை-இளமை.
7. ஈழநாடு-இலங்கை. † 'மாந்'; § 'யூரள' என்றும் பாடம்.
8. ¶ 'வேளா' என்றும் பாடம்.
9. * 'பாம்புணி' என்றும் பாடம்,

செய்யில் வாளைகள் பாய்ந்துக ளுந்திருப் புன்கூர்நன்
றையன் மேய பொழிலணி ஆவடு துறையதே. 10

பேணி நாடத னில்திரி யும்பெரு மான்றனை
ஆணை யாவடி* யார்கள் தொழப்படும் ஆதியை
நாணி ஊரன் வனப்பகை அப்பன்வன் றொண்டன்சொல்
பாணி யால்இவை ஏத்துவார் சேர்பர லோகமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## 2. நமக்கடிகளாகிய அடிகள் — பண் : கொல்லி

திருச்சிற்றம்பலம்

பாறுதாங்கிய காடரோபடு தலையரோமலைப் பாவையோர்
கூறுதாங்கிய குழகரோகுழைக் காதரோகுறுங் கோட்டிள
ஏறுதாங்கிய கொடியரோசுடு பொடியரோ இலங்கும்*பிறை
ஆறுதாங்கிய சடையரோநமக் கடிகளாகிய அடிகளே. 1

இட்டிதாகவந் துரைமினோநுமக் கிசையுமாநினைந் தேத்துவீர்
கட்டிவாழ்வது நாகமோசடை மேலும்நாறு கரந்தையோ
பட்டிஏறுகந் தேறரோபடு வெண்டலைப்பலி கொண்டுவந்
தட்டிஆளவுங் கிற்பரோநமக் கடிகளாகிய அடிகளே. 2

ஒன்றினீர்கள்வந் துரைமினோநுமக் கிசையுமாநினைந் தேத்துவீர்
குன்றிபோல்வதோ ருருவரோகுறிப் பாகிநீறுகொண் டணிவரோ

11. ‡ 'யாமடி' என்றும் பாடம். வனப்பகை-கோட்புலி நாயனார் திருமகளார்; இவரைச் சுந்தரமூர்த்தி நாயனார் தம் திருமகளாராக ஏற்றுக் கொண்டார். பாணியால்-செவ்வியோடு; தாளத்தோடு எனலும் ஆம்.

1. பாறு-பருந்து. குறுங்கோடு-சிறிய கொம்பையுடைய. * 'விளங்கும்' என்றும் பாடம். அடிகள்-சுவாமி.

2. இட்டிதாக-அருகாக. பட்டி ஏறு-முரட்டுத்தனமான இடபம். அட்டி-இட்டு.

இன்றியேஇலர் ஆவரோஅன்றி உடையராயிலர் ஆவரோ
அன்றியேமிக அறவரோ§நமக் கடிகளாகிய அடிகளே. 3

தேனைஆடுமுக்கண்ணரோமிகச்செய்யரோவெள்ளைநீற்றரோ
பானெய்ஆடலும் பயில்வரோதமைப் பற்றினார்கட்கு நல்லரோ
மானைமேவியகண்ணினாள்மலைமங்கை நங்கையைஅஞ்சவோர்
ஆனையீர்உரி போர்ப்பரோநமக் கடிகளாகிய அடிகளே. 4

கோணல்மாமதி சூடரோகொடு கொட்டிகாலர்† கழலரோ
வீணைதானவர் கருவியோவிடை ஏறுவேத முதல்வரோ
நாணதாகவோர் நாகங்கொண்டரைக் கார்ப்பரோநலம் ஆர்தர
ஆணையாகநம் மடிகளோநமக் கடிகளாகிய அடிகளே. 5

வந்துசொல்லுமின் மூடனேனுக்குவல்லவாநினைந்தேத்துவீர்
வந்தசாயினை அறிவரோதம்மை வாழ்த்தினார்கட்கு நல்லரோ
புந்தியால்உரை கொள்வரோஅன்றிப் பொய்யின்மெய்யுரைத்
தாள்வரோ
அன்றியேமிக அறவரோ‡நமக் கடிகளாகிய அடிகளே. 6

மெய்யென்சொல்லுமின் நமரங்காளுமக் கிசையுமா நினைந்
தேத்துவீர்
கையிற்சூலமது உடையரோகரி காடரோகறைக் கண்டரோ
வெய்யபாம்பரை ஆர்ப்பரோவிடை ஏறரோகடைதோறுஞ்சென்
றையங்கொள்ளுமவ் வடிகளோநமக்கடிகளாகிய அடிகளே.

---

3. குன்றி—குன்றிமணி, ஒரு பொருளும் இயற்கையாகவே இல்லாமையால் இல்லாதவரோ; அவற்றை நுகராமல் இல்லாதவரோ. § 'அறிவரோ' என்றும் பாடம்.

5. கொடுகொட்டி — ஒருவகைக் கூத்து; ஒருவகைப் பறை. † 'காலோர்' என்றும் பாடம். அரைக்கு ஆர்ப்பரோ—இடையிலே கட்டிக்கொள்வரோ.

6. சாய்-மென்மை; தளர்ச்சி. ‡ 'அறிவரோ' என்றும்பாடம்.

நீடுவாழ்பதி உடையரோ அயன் நெடியமாலுக்குநெடியரோ
பாடுவாரையும் உடையரோ தமைப் பற்றினார்கட்கு நல்லரோ
காடுதான் அரங் காகவேகைகள் எட்டினோடில யம்பட
ஆடுவாரெனப் படுவரோநமக் கடிகளாகிய அடிகளே. 8

நமணநந்தியுங் கருமவீரனுந் தருமசேனனும் என்றிவர்
குமணமாமலைக் குன்றுபோனின்று தங்கள்கூறையொன் றின்றியே
ஞமணஞாஞண ஞாணஞோணமென் றோதியாரையுநாணிலா
அமணராற்பழிப் புடையரோநமக் கடிகளாகிய அடிகளே. 9

படிசெய்நீர்மையிற் பத்தர்காள்பணிந் தேத்தினேன் பணியீரருள்
வடிவிலான் திரு நாவலூரன் வனப்பகையப்பன்வன்றொண்டன்
செடியனாகிலுந் தீயனாகிலுந் தம்மையேமனஞ் சிந்திக்கும்
அடியனூரனை ஆள்வரோநமக் கடிகளாகிய அடிகளே. 10

திருச்சிற்றம்பலம்

---

## 3. முடிப்பது கங்கை — பண் : கொல்லிக்கௌவாணம்

திருச்சிற்றம்பலம்

முடிப்பது கங்கையுந் திங்களுஞ் செற்றது மூவெயில்
நொடிப்பது மாத்திரை நீறெ ழக்கணை நூறினார்
கடிப்பதும் ஏறுமென் றஞ்சு வன்றிருக் கைகளால்
பிடிப்பது பாம்பன்றி இல்லை யோஎம் பிரானுக்கே. 1

---

7. நமரங்காள்–நம்மவர்களே. கரிகாடு–சுடுகாடு. கடை–வீட்டுவாயில்.

8. இலயம் பட–தாள அமைதி உண்டாக.

10. படிசெய் நீர்மையின் – பார்த்து இப்படிச் செய்ய வேண்டும் என்று பிறர் ஒழுகுவதற்குரிய இயல்பை உடைய.

1. நொடிப்பது மாத்திரை – நொடியளவு நேரத்தில். கணை நூறினார் – அம்பினால் அழித்தார்,

தூறன்றி ஆடரங் கில்லை யோசுட லைப்பொடி
நீறன்றிச் சாந்தமற் றில்லை யோஇம வான்மகள்
கூறன்றிக் கூறுவ தில்லை§ யோகொல்லைச் சில்லைவெள்
ளேறன்றி ஏறுவ தில்லை யோஎம் பிரானுக்கே. 2

தட்டெனுந் தட்டெனுந் தொண்டர் காள்தடு மாற்றத்தை
ஒட்டெனும் ஒட்டெனும் மாநி லத்துயிர் கோறலைச்
சிட்டன் திரிபுரஞ் சுட்ட தேவர்கள் தேவனை
வெட்டெனப் பேசன்மின் தொண்டர் காள்எம் பிரானையே. 3

நரிதலை கவ்வநின் றோரி கூப்பிட நள்ளிருள்
எரிதலைப் பேய்புடை சூழ ஆரிருட் காட்டிடைச்
சிரிதலை மாலை சடைக்க ணிந்தஎஞ் செல்வனைப்
பிரிதலைப் பேசன்மின் தொண்டர் காளெம் பிரானையே. 4

வேயன தோளி மலைம களைவி ரும்பிய
மாயமில் மாமலை நாடன் ஆகிய மாண்பனை
ஆயன சொல்லிநின் றார்கள் அல்லல் அறுக்கிலும்
பேயனே பித்தனே என்ப ரால்எம் பிரானையே. 5

இறைவனென் றெம்பெரு மானை வானவர் ஏத்தப்போய்த்
துறையொன் றித்தூ மலரிட் டடியிணை போற்றுவார்
மறையன்றிப் பாடுவ தில்லை யோமல்கு வானிளம்
பிறையன்றிச் சூடுவ தில்லை யோஎம் பிரானுக்கே. 6

தாருந்தண் கொன்றையுங் கூவி ளந்தனி மத்தமும்
ஆரும் அளவறி யாத ஆதியும் அந்தமும்
ஊரும் ஒன்றில்லை உலகெ லாம்உகப் பார்தொழப்
பேருமோ ராயிரம் என்ப ரால்எம் பிரானுக்கே. 7

---

2. தூறு–மரத்தின் அடி. சில்லை–சிறிய அழகிய. § 'கூறு மற் றில்லை' என்றும் பாடம்.

4. சிரிதலை – நகுதலை; தசையற்ற என்புத்தலை.

5. வேய்அன – மூங்கிலை ஒத்த.

அரியொடு பூமிசை யானும் ஆதியும் அறிகிலார்
வரிதரு பாம்பொடு வன்னி திங்களும் மத்தமும்
புரிதரு புன்சடை வைத்த·எம்புனி தற்கினி
எரிஅன்றி அங்கைக்கொன் றில்லை யோஎம் பிரானுக்கே. 8

கரிய மனச்சமண் காடி யாடு கழுக்களால்
எரிய வசவுணுந் தன்மை யோஇம வான்மகள்
பெரிய மனந்தடு மாறவேண் டிப்பெம் மான்மதக்
கரியின் உரியல்ல தில்லை யோஎம் பிரானுக்கே. 9

காய்சின மால்விடை மாணிக்கத் தெங்கறைக் கண்டத்
தீசனை ஊரன் எட்டோ டிரண்டு விரும்பிய
ஆயின சீர்ப்பகை ஞானியப் பன்அடித் தொண்டன்றன்
ஏசின பேசுமின் தொண்டர் காள்எம் பிரானையே. 10

திருச்சிற்றம்பலம்

---

## 4. ஊர்த்தொகை — பண் : பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே கானப் பேரூராய்
கோட்டூர்க் கொழுந்தே அழுந்தூ ரரசே கொழுநற் கொல்லேறே
பாட்டூர் பலரும் பரவப் படுவாய் பனங்காட் டூரானே
மாட்டூர் அறவா மறவா துன்னைப் பாடப் பணியாயே. 1

கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய் குழகா குற்றாலா
மங்குற் றிரிவாய் வானோர் தலைவா வாய்மூர் மணவாளா
சங்கக் குழையார் செவியா அழகா அவியா அனலேந்திக்
கங்குற் புறங்காட் டாடீ அடியார் கவலை களையாயே. 2

---

8. ஆதியும் – முதலான தேவகணங்களும்.
1. அறவா–தர்மசொரூபியே.
2. கொங்கில்–கொங்கு நாட்டில்

நிறைக்காட் டானே நெஞ்சத் தானே நின்றி யூரானே
மிறைக்காட் டானே புனல்சேர் சடையா யனல்சேர் கையானே
மறைக்காட் டானே திருமாந் துறையாய் மாகோணத்தானே
இறைக்காட் டானே* எங்கட் குன்னை எம்மான் தம்மானே.3

ஆரூர் அத்தா ஐயாற் றமுதே அளப்பூர் அம்மானே
காரூர் பொழில்கள் புடைசூழ் புறவிற் கருகா வூரானே
பேரூர் உறைவாய் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே
பாரூர் பலரும் பரவப் படுவாய் பாசூர் அம்மானே. 4

மருகல் உறைவாய் மாகா ளத்தாய் மதியஞ் சடையானே
அருகற் பிணிநின் னடியார் மேல அகல அருளாயே
கருகற் குரலாய் வெண்ணிக் கரும்பே கானூர்க் கட்டியே
பருகப் பணியா யடியார்க் குன்னைப் பவளப் படியானே. 5

தாங்கூர் பிணிநின் னடியார் மேல அகல அருளாயே
வேங்கூருறைவாய் விளமர் நகராய் விடையார் கொடியானே
நாங்கூர் உறைவாய் தேங்கூர் நகராய் நல்லூர் நம்பானே
பாங்கூர் பலிதேர் பரனே பரமா பழனப் பதியானே. 6

தேனைக் காவல்கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தாராய்
வானைக் காவல் கொண்டு நின்றார் அறியா நெறியானே
ஆனைக் காவில் அரனே பரனே அண்ணா மலையானே
ஊனைக் காவல் கைவிட் டுன்னை உகப்பார் உணர்வாரே. 7

---

3. எங்கட்கு உன்னை இறையளவேனும் காட்டாதவனே.
* 'இறைக்காட்டாயே' என்றும் பாடம்.
4. பட்டிப்பெருமான்: பேரூரில் உள்ள சுவாமி திருநாமம்.
5. பவளப்படியானே – பவளம் போன்ற செவ்வுருவம் உடையவனே.
6. தாம் கூர் பிணி–தம்மிடத்திலே மிக்க நோய்கள்.
7. ஊனைக்காவல் கைவிட்டு–உடம்பை ஊண் முதலிய வற்றால் பாதுகாத்தலே தொழிலாக இருப்பதை நீங்கி.

துருத்திச் சுடரே நெய்த்தா னத்தாய் சொல்லாய் கல்லாலா
பருத்தி நியமத்துறைவாய் வெயிலாய்ப்பலவாய்க் காற்றாய்
திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை இடங்கொள் கயிலாயா
அருத்தித் துன்னை அடைந்தார் வினைக ளகல அருளாயே. 8

புலியூர்ச் சிற்றம் பலத்தாய் புகலூர்ப் போதா மூதூரா
பொலிசேர் புரமூன் றெரியச் செற்ற புரிபுன் சடையானே
வலிசேர் அரக்கன் தடக்கை ஐஞ்ஞான் கடர்த்த மதிசூடீ
கலிசேர் புறவிற் கடவூர் ஆளீ காண அருளாயே. 9

கைம்மா உரிவை அம்மான் காக்கும் பலவூர் கருத்துன்னி
மைம்மாந் தடங்கண் மதுர மன்ன மொழியாள் மடச்சிங்கடி
தம்மான் ஊரன் சடையன் சிறுவன் அடியன் தமிழ்மாலை
செம்மாந் திருந்து திருவாய் திறப்பார் சிவலோகத்தாரே. 10

திருச்சிற்றம்பலம்

---

முற்றும்

---

8. பருத்தி நியமம் – பருதி நியமம்; செய்யுள் விகாரம். அருத்தித்து–அன்புற்று.

9. பொலி சேர்–பொலிதல் சேர்ந்த. கை ஐஞ்ஞான்கை அடர்த்த. கலி-முழக்கம்.

10. கைம்மா உரிவை–யானைத்தோலைப் போர்த்த. கருத்து உன்னி–கருத்தில் வைத்து. செம்மாந்து–இறுமாந்து. "இறுமாந் திருப்பன்கொலோ ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டுச்–சிறுமான் ஏந்திதன் சேவடிக்கீழ்ச் சென்றங்கு இறுமாந்திருப்பன் கொலோ' – அப்பர்.

உ

திருச்சிற்றம்பலம்

# செய்யுள் முதற்குறிப்பகராதி

## பிழையும் திருத்தமும்.

| பக்கம் | செ. | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 41 | 10 | 2 | னுமறியாச் | னும்மறியாச் |
| 50 | 11 | 8 | ளைதமறிந் | ளைதமறந் |
| 53 | 3 | 2 | இறைறவனை | இறையவனை |
| 54 | 4 | 3 | நெருலாய் | நெருநலாய் |
| 56 | 10 | 6 | அள்ளி | துள்ளி |
| 100 | 1 | 2 | வடிவார் | வடியார் |
| 116 | 10 | அடிக்குறிப்பு | கடிச்கும் | கடிக்கும் |
| 136 | 8 | 8 | நாகைங் | நாகைக் |
| 140 | 9 | 4 | அத்தன்மைக் தகுரம் | அத்தன்மைத் தாகும் |
| 143 | 1 | அடிக்குறிப்பு | பெற்றுன்ளன | பெற்றுள்ளன |
| 147 | 1 | 4 | னேத்தனே | னெத்தனே |
| 178 | 1 | 1 | கடற் | கடல் |
| 206 | 7 | அடிக்குறிப்பு | ஓவம் | ஓதம் |
| 208 | 2 | 2 | தனமும | தனமும் |
| 212 | 3 | 7 | றக்கினும | றக்கினும் |
| 248 | .... | .... | (9) தொண்டை | (8) தொண்டை |
| 258 | 10 | அடிக்குறிப்பு | பறையம் | பறையும் |
| 296 | 3 | 1 | கிசையமா | கிசையுமா |
| 297 | 5 | அடிக்குறிப்பு | ஒருவகைக் | ஒருவகைக் |
| 299 | 3 | 4 | தெண்டர் | தொண்டர் |

உ

SIVA SIVA

# Panniruthirumurai Publication Endowment

## In memory of

# Sri-la-Sri ADI KUMARAGURUPARA SWAIMGAL

## Immovable property worth Rs. 50,000

This endowment is made by Sri-la-Sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal, Sri Kasi Mutt, Tirupanandal. in memory of the great Scholar Sri Kumaragurupara Swamigal who spread Tamil culture from Cape Comorin to the Himalayas in the 17th century, for propagating the twelve Thirumurais, 1 to 3: sung by Tirugnanasambandamurthy Nayanar; 4 to 6: by Tirunavukkarasu Nayanar; 7: by Sundaramurthy Nayanar; 8: by Saint Manikkavachakar; 9: by Thirumaligai Thevar and Senthanar etc; 10: Thirumula Nayanar; 11: Seraman Perumal Nayanar and others; and 12: by Sekkilar. The object is to inculcate devotion for the Thirumurais in the student population and train them into good citizenship of the Bharat.

2, The property so endowed is detailed in the schedule hereto attached and consists of Acres 43, Cents 98, wet and dry lands etc. in Marathurai village, No. 3 Marathurai vattam and a house and 15 cents dry in Tirupanandal village in Kumbakonam Taluk, Tanjore District and belonging to the donor with patta and miras

in his name. The value of the property is Rs. 50,000 and the estimated annual income is about Rs. 2,500.

3. The said property is to be vested in the Kumaragurupara Swamigal Mutt at Srivaikuntam, Tirunelveli District and it shall be administered by the Managing Trustee of the said Mutt as provided hereunder. The annual net income from the property i.e. excluding Government dues, establishment charges, maramat expenses etc. shall be utilised for the purpose mentioned in para 4 infra. The managing trustee of the said Kumaragurupara Swamigal Mutt shall be responsible for the safe and proper investment of the said funds and for making the same available for the regular and efficient conduct of the endowment.

4. The Managing Trustee of the said mutt at Srivaikuntam should arrange to have the twelve Thirumurais to be printed and published in their serial order or according to necessity arising at any time for a particular Thirumurai. When publishing each Thirumurai, the title sheet should contain a note that the publication is made out of the endowment founded on 8-4-1950 by Sri-la-Sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avl., Sri Kasi Mutt, Tirupanandal, in grateful memory of SRI ADI KUMARA GURUPARA SWAMIGAL. 25 (twenty five) copies of each publication should be sent free to the Donor and his Successors-in-interest. The other copies should be arranged to be widely distributed in sale at not more than the actual cost. The sale proceeds of the books shall be added to the corpus of the fund with the managing trustee. It will be within the discretion of the Managing trustee to supply copies free of cost to selected well known Libraries, (one

copy to each library) serving the needs of lovers of Tamil literature and culture.

5. A regular account of receipt and expenditure shall be maintained by the said Managing Trustee, which shall be audited by a certified auditor every year. The managing trustee shall send to the Donor and his Successors-in-interest annually a copy of the audit report along with an account showing under different heads, the Thirumurais published, number of copies printed, freely distributed, sold and remaining on hand, the income received therefrom, the amount spent in publishing Thirumurais and the amount of sale preceeds added to the corpus of the fund with the managing trustee.

6. The income from the property and the sale proceeds of the publication as shown above shall be utilised for the printing and publishing the above mentioned twelve Thirumurais only.

7. This endowment shall not be used or diverted for any purpose other than that for which it is provided as above, and shall be managed as above provided, by the present managing trustee of Sri Kumaragurupara Swamigal Mutt, and his successors (Managing Trustee) being in perpetuity.

**Dated 8-4-1950.** **(Sd.)** *Kasivasi Arulnandi Tambiran.*

---

Registered at Tiruvadamarudur Sub Registrar's office on General Stamp of Rs. 375 on 14-4-1950 as number794 in Book 1, volume 1002, pages 181-186.

Details of landed property purchased out of the income of property under the Panniru Thirumurai Publication Endowment.

| Date of Purchase | Name of Village | Survey No. | Extent | Cost |
|---|---|---|---|---|
| 5—4—52 | Tirupuliyangudi (Srivaikuntam) | 732/2<br>958/2 | 18 cents<br>55 „ | Rs. 3600 |
| 18—4—52 | Do | 802/2<br>809/1 & 962-A | 10 „<br>$25\frac{1}{2}$ „ | Rs. 1575 |
| | | | Total extent 1 acre $8\frac{1}{2}$ cents | Rs. 5175 |

**Particulars of fixed deposits etc.,**

| | | |
|---|---|---|
| 7—7—58 | Srivaikuntam Co-operative Bank Ltd. $4\frac{1}{2}$ % fixed deposit for one year | Rs. 5800 |
| 17—8—58 | - do - | Rs. 4500 |
| 7—7—58 | South Indian Bank Ltd. Tirunelveli $4\frac{1}{2}$% 2 years fixed deposit | Rs. 5000 |
| 20—3—58 | Government National Savings Certificate F/O 408070 | Rs. 1000 |
| do | do F/O 408071 | Rs. 1000 |
| | Total | Rs. 17300 |



உ

# சுந்தரரும் கல்லெழுத்துக்களும்



1. திருக்கயிலையில் இருந்த பொழுது சுந்தருக்கு ஆலால சுந்தரர் என்பது பெயர்; இப்பெயர் திருவொற்றியூர்த் திருக் கோயிலில் ஒரு விளாகத்துக்குப் பெயராயமைந்திருந்தது: "ராஜநாராயணச் சம்புவராயர்க்கு யாண்டு ஏழாவது......... நங்காம்புலமான ஆலாலசுந்தர விளாகம் மூன்றில் ஒன்று." (203 of 1912; தென்னிந்திய கோயிற் சாஸனங்கள் பாகம் 1, சாஸனம் 523.) இக்கல்வெட்டில் திறக்கப்பாடுவார் மனை, திருநாளைப் போவார் விளாகம் முதலியனவும் குறிக்கப் பெற்றுள்ளன. சோணாடு கொண்டு முடிகொண்ட சோழ புரத்தில் வீராபிஷேகம் செய்தருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவரது 17வது ஆண்டுக் கல்லெழுத்தில் ஆலாலசுந்தரர் திருமடம் என்று ஒருமடம் குறிக்கப் பெற்றுள்ளது. (S. I. I. vol V No. 422; 133 of 1894.) ஆலாலசுந்தரன் குகை குறித்துக் குமரகுருபரன் மலர் 9, இதழ் 1, பக்கம் 105 காண்க.

2. இரண்டாம் குலோத்துங்க சோழனுடைய திருவாரூர்க் கல்வெட்டில் சுந்தரர் ஆளுடையநம்பி என்றும் ஸ்வஸ்வாமி மித்ர (தம்பிரான் தோழர்) என்றும் குறிக்கப் பெற்றுள்ளார்; தாயார் இசைஞானியார் என்றும்; அவ்வம்மை-யார் சைவ கௌதமகோத்திரத்தில் உதித்த ஞானசிவாசாரியர் மகள் என்றும் குறிக்கப் பெற்றுள்ளார். (S. I. I. vol IV No. 397; 73 of 1890) சுந்தரர்க்கு நம்பியாரூர் என்ற பெயருண் மையை வீரபாண்டிய தேவருடைய திருநெல்வேலிக் கல் லெழுத்தினின்றும் (vol V No. 418), தஞ்சை ராச ராசேச் சரத்திலுள்ள முதலாம் இராசேந்திரனுடைய கல்லெழுத்தி

னின்றும் (vol II Part II No. 38) அறிகிறோம். இத் தஞ்சைக் கல்லெழுத்தினின்று நம்பியாரருக்கும் நங்கைபரவை யார்க்கும் படிவம் எழுந்தருள்விக்கப் பெற்று அணிகலன்களும் அளிக்கப் பெற்றன என்று அறிகிறோம்.

3. சுந்தரர் சிவபெருமானால் தடுத்தாட் கொள்ளப் பெற்றார். அப்பொழுது ஒரு சிறுவழக்கும் நடந்தது. இறைவன் தடுத்தாட் கொண்டருளிய நாயனார் என்றும், வழக்கில் வென்ற மையான் விரைந்து வெல்லும் பெருமாள் என்றும், இவ்வழக்கு அரிய வழக்கு ஆகலின் அரியவான வழக்கு வென்ற பெருமாள் என்றும் கூறப்பெற்றார். இப்பெயர்கள் எல்லாம் தென்னிந்திய கோயிற் சாஸனங்கள் பாகம் 1, சாஸனம் 85-ல் காணப் பெறும். முதற்குலோத்துங்க சோழனது 29-ம் ஆண்டுக்கல் லெழுத்தில் வழக்குவென்ற திருஅம்பலம் குறிக்கப் பெற்றுள்ளது (441 of 1921). உதயன் ஸ்ரீ கயிலாயம் உடையான் என்று ஒருவர் 'பிச்சன் என்று பாடச் சொன்னான்' என்று பெயரிட்ட தாளங்களை வழங்கியதாகக் கோப்பெருஞ்சிங்கனது 27-ம் ஆண்டுக் கல்லெழுத்தில் காணப்படுகிறது (431 of 1921.)

4. சுந்தரருடைய வாழ்க்கைத் துணையாகிய பரவை யார்க்குத் திருவையாற்றுக் கோயிலில் விளக்கு எரிக்க நிபந்தம் கொடுக்கப் பெற்றது (S. I. I. vol V No. 533.) இரண்டாம் குலோத்துங்கனுடைய திருவாரூர்க் கல்வெட்டு, சுந்தரர் பரவையார் திருப்படிவங்களுக்கு அநபாயநல்லூர் என்ற ஊர் அளிக்கப் பெற்றதை அறிவிக்கிறது. (S. I. I. vol. VII 485; 269 of 1901.)

5. திருத்தொண்டத் தொகை பெயரால், திருத்தொண்டத் தொகையான் குகை, திருத்தொண்டத் தொகையான் திருமடம், திருத்தொண்டத் தொகையீச்சுரம் முதலியன அமைந்திருந்தன.

(விரிவு, குமரகுருபரன் மலர் 7, இதழ் 12 பக்கம் 715–20 காண்க.)

6. 'பொன்னார் மேனியன்' என்பது சுந்தரர் திருமழபாடியில் பாடிய திருப்பதிக முதற்குறிப்பு. இப்பெயரால் ஒருபடிவமும், விளாகமும் அமைந்தன. ஒருபட்டருக்கும் இப்பெயரிருந்தது (விரிவு குமரகுருபரன் மலர் 8 இதழ் 6 பக்கம் 418 காண்க.)

7. திருப்பாச்சி வாச்சிராமத்தில் சுந்தரர் பொற்கிழி பெற்றார், மூன்றாம் இராச ராசனது 27-ம் ஆட்சியாண்டுக் கல்லெழுத்தில் ''கிழிகொடுத்தருளிய திருவாசல்'' என்று குறிக்கப் பெற்றுள்ளது.

8. அவிநாசியில் முதலையுண்ட பாலனைச் சுந்தரர் அழைத்தார் வீரபாண்டியனது 14-ம் ஆண்டுக்குரிய அவிநாசிக் கல்லெழுத்துச் சுந்தர நாயனார்க்குப் பார்ப்பாரப் பூண்டியாகிய வீரராசேந்திரநல்லூர் அளிக்கப்பெற்றது என்கின்றது. இக் கல்லெழுத்தில் கையொப்பமிட்டவருள் ஒருவர்க்குத் தம்பிரான் தோழர் என்று பெயர். (தெ. இ. கோ. சா. 191;187 of 1909) வீரபாண்டியனது 21-ம் ஆண்டுக் கல்லெழுத்து ஒன்று திருப்புக்கொளியூர்க் குளக்கரையில் சுந்தரர் திருமேனி அரசரால் எழுந்தருள்விக்கப் பெற்றது என்றும் அதற்கு நிபந்தமாக 220 வராகன் அளிக்கப்பெற்றது என்றும் கூறுகிறது.

இதுகாறும் கூறியவாற்றான் சுந்தரர் வரலாறு பெரிய புராண காலத்து முன்னும் பின்னும் பெரிதும் போற்றப் பெற்றமை நன்கு அறியலாம். இங்ஙனம், சைவ நன்னெறிப் படர்வார் யாவரும் சுந்தரரைப் போற்றியுய்க!

உ

சிவ சிவ

*திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்*

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்

*அவர்கள் திரவிய தருமங்கள்*



| எண் | தருமங்கள் | முதற்பொருள் ரூபாய் |
|---|---|---|
| 1. | திருமுறை வளர்ச்சிக்கு ஆக 28 தருமங்கள் | 4,30,000 |
| 2. | கல்வி அபிவிருத்திக்கு ஆக 48 தருமங்கள் | 7,27,200 |
| 3. | சைவ சித்தாந்தம் பரப்ப 7 தருமங்கள் | 1,56,000 |
| 4. | அன்னதானம் செய்ய 120 தருமங்கள் | 25,60,800 |
| 5. | வைத்தியம் செய்ய 5 தருமங்கள் | 1,22,500 |
| 6. | பொது தருமங்கள்—ஸ்நானக்கட்டம்,<br>அகதி நன்கொடை, தண்ணீர்ப்பந்தல்,<br>ஒளிவளர் விளக்குகள், பசுப் பரிசு,<br>கல்லெழுத்து முதலிய 62 தருமங்கள் | 5,73,245 |
| | ஆகத் தருமங்கள் 270க்கு | ரூ. **45,69,745** |

